# தமிழ்க்கோவை

## எட்டாம் வகுப்பு




ஆசிரியர் :

**சு. வடிவேலு**

ஓய்வு பெற்ற மதிய உணவுத் திட்டத் தனி அலுவலர்

சென்னை.



**மங்கள நூலகம்**

**நுங்கம்பாக்கம் : : சென்னை - 34**

[விலை ரூ. 1-90

பதிப்புரிமை]

# முன்னுரை

தமிழ் நாட்டு அரசினர் 1965ஆம் ஆண்டு வெளியிட்ட புதிய பாடத் திட்டத்தையொட்டி இந்நூல் எழுதப் பெற்றுள்ளது.

மாணவ, மாணவியரின் தமிழறிவு பெருகவும், நற்பண்புகள் வளரவும் ஏற்ற வகையில் செய்யுட்பகுதிகளும், உரைநடைப் பகுதிகளும் இந்நூற்கண் அமைக்கப் பெற்றுள்ளன.

செய்யுட்பகுதிக்கு வகுப்பிற்கேற்ற நிலையில் குறிப்புரை கொடுக்கப் பெற்றிருக்கிறது. உரைநடைப் பகுதியில் பாடங்கட்குக்கீழ் அருஞ்சொற்பொருள்களும், வினக்களும் கொடுக்கப்பெற்றுள்ளன.

இலக்கணப் பாடத் திட்டத்திற்கேற்ப இலக்கணப் பகுதி, நூலின் இறுதியில் எளிய நடையில் விளக்கப் பெற்றுள்ளது.

இக் கோவையை மனமுவந்து வரவேற்று ஆதரவு நல்குமாறு ஆசிரியப் பெருமக்களைக் கேட்டுக்கொள்கிறேன்; நன்கு பயின்று மேனிலை எய்துமாறு மாணவ, மாணவியர்கட்கு நல்லாசி கூறுகின்றேன்.

இங்ஙனம்

ஆசிரியர்

# தேசீய கீதம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## தேசீய கீதம்—பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் ஸிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு,
வெற்றி! வெற்றி! வெற்றி!

# பொருளடக்கம்

பக்கம்

## செய்யுள்

## மனப்பாடப் பகுதி

| | | | வரிகள் |
|---|---|---|---|
| 1. | வாழ்த்துப் பகுதி : (முழுவதும்) | ... | 24 |
| 2. | அறவுரைப் பகுதி : | | |
| | 1. திருக்குறள் (2, 7,12,14,17,20,23,29) | ... | 16 |
| | 2. நாலடியார் (5) | ... | 4 |
| | 3. பழமொழி (1) | ... | 4 |
| | 4. நீதிநெறி விளக்கம் (2) | ... | 4 |
| | 5. ஏலாதி (4) | ... | 4 |
| | 6. சிறுபஞ்சமூலம் (2) | ... | 4 |
| 3. | தொடர்நிலைச் செய்யுட்பகுதி : | | |
| | 1. கம்பராமாயணம் (4,5,6) | ... | 12 |
| | 2. பெரிய புராணம் (10,11,12) | ... | 12 |
| | 3. திருவிளையாடற் புராணம் (2,3) | ... | 8 |
| | 4. சீறாப்புராணம் (7) | ... | 4 |
| | 5. தேம்பாவணி (10) | ... | 4 |
| 4. | பல்சுவைப் பகுதி : | | |
| | இரட்டுற மொழிதல் (1,2) | ... | 8 |
| | வழிபாட்டுப் பாடல்கள் : (உருவாய்) | ... | 4 |
| | (தனம் தரும்) | ... | 4 |
| | (மண்கண்ட) | ... | 4 |
| | | | 120 |

## உரைநடை



## இலக்கணம்

# 1. வாழ்த்துப் பகுதி

**1 தேவாரம்** **காப்பது நுங்கடன்!**

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்
டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென்
மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே.

—திருநாவுக்கரசர்

**2 திவ்வியப் பிரபந்தம்** **எங்ஙனம் விடுவேன்?**

வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ
சிந்தா மணியே திருவேங் கடம்மேய
எந்தாயினி யானுன்னை என்றும் விடேனே.

—திருமங்கையாழ்வார்

**3 தேம்பாவணி** **இரங்கல் ஆகாதா?**

கண்பட் டுறங்கக் கண்டேனோ
கருணா கரனே களிக்கடலே
புண்பட் டுளையும் நெஞ்சிற்கோர்
பொருவா மருந்தே அருளன்பே
மண்பட் டலையுங் கடலன்ன
மருளென் னெஞ்சிற் குயிர்நிலையே
எண்பட் டுயர்ந்த செல்வரசே
என்மே லிரங்குந் தயையிதுவோ.

—வீரமாமுனிவர்

**4 சீறாப் புராணம்** **என்று காண்பேன்?**

ஞானவா ரிதியை நபிகளுக் கரசை
நானில மேல்சுவ டுருத
வானமா மணியை இருநிதித் தருவை
மரபுகட் கொருதனிச் சுடரை
மோனமா தவர்கள் தொழுநவ மணியை
மூவுல கனைத்துமோ ருலகில்
கோனியல் புரிய வருமுகம் மதுவைக்
குணமுடன் என்றுகாண் குவனே.

—உமறுப் புலவர்

**5 திருவருட்பா** **வேண்டுவன இவை**

அருளா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல்
[வேண்டும்
அணுத்துணையுஞ் சினங்காமம் அடையாமை
[வேண்டும்
மருளாய உலகமெலா மருணீங்கி ஞான
மன்றிடத்தே வள்ளலுனை வாழ்த்தியிடல்
[வேண்டும்
இருளாமை யுறல்வேண்டும் எனையடுத்தார்
[சுகம்வாய்ந்
திடல்வேண்டும் எவ்வுயிரும் இன்படைதல்
[வேண்டும்
பொருளாமோர் திருவடிவி லுடையாயும் நானும்
புணர்ந்துகலந் தொன்ருகிப் பொருந்துதல்
[வேண்டுவனே.

—இராமலிங்க அடிகள்

———

## 2. அறவுரைப் பகுதி

### 1. திருக்குறள்

**கடவுள் வாழ்த்து** — **உலகமுதல்வன்**

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. 1

**வான்சிறப்பு** — **மழையின் மாண்பு**

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. 2

**அறன் வலியுறுத்தல்** — அறத்தின் இயல்பு

மனத்துக்கண் மாசில னாத லனைத்தறன்
ஆகுல நீர பிற. 3

**இல்வாழ்க்கை** — வாழ்வாங்கு வாழ் !

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். 4

**அன்புடைமை** — **அன்பிற்கு அறிகுறி**

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும். 5

**விருந்தோம்பல்** — **விருந்தினர் இயல்பு**

மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 6

**இனியவை கூறல்** — **உண்மை அணிகள்**

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. 7

**செய்ந்நன்றியறிதல்** — உலகினும் பெரியது

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 8

அடக்கமுடைமை — நாவை அடக்கு !

தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. 9

ஒழுக்கமுடைமை — ஒழுக்கம் போற்று !

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். 10

ஈகை — பகுத்துண்டு வாழ் !

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. 11

வாய்மை — நெஞ்சைச் சுடுவது

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 12

வெகுளாமை — கொடும் பகைவன்

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. 13

கல்வி — கல்விக்கேற்ப அறிவு

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. 14

அறிவுடைமை — உண்மை அறிவு

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. 15

சிற்றினஞ் சேராமை — சார்ந்ததன் வண்ணம்

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு. 16

தெரிந்து தெளிதல் — ஆய்ந்து கொள் !

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல். 17

சுற்றந்தழாஅல் செல்வப் பயன்

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். 18

பொச்சாவாமை புகழ்கொல்லி

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 19

ஊக்கமுடைமை உள்ளத்தால் உயர்!

வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 20

ஆள்வினையுடைமை முயற்சியின் உயர்ச்சி

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும். 21

சொல்வன்மை வெல்ல இயலாதவன்

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது. 22

மன்னரைச் சேர்ந்தொழுகல் தவிர்க்க வேண்டுவன

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து. 23

குறிப்பறிதல் அகத்தை முகங்காட்டும்

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். 24

நாடு நல்ல நாடு

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. 25

பொருள் செயல் வகை செல்வம் சேர்

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். 26

உண்மை நட்பு

நட்பு

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. 27

பசித்துப் புசி

மருந்து

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். 28

மானமே பெரிது

மானம்

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. 29

மேலும் கீழும்

பெருமை

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். 30

சான்றோர் சால்பு

சான்றாண்மை

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி எனப்படு வார். 31

பண்பே பெரிது

பண்புடைமை

அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். 32

பூமிக்குப் பாரம்

நன்றியில் செல்வம்

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. 33

குடியுயர வழி

குடிசெயல்வகை

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனவிரண்டின்
நீள்வினையான் நீளுங் குடி. 34

உழவே தலை

உழவு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். 35

## 2. நாலடியார்

### பெற்றும் பெற்றிலாதவன்

உண்ணுன் ஒளிநிருன் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான் — கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் ஆஆ
இழந்தானென் றெண்ணப் படும். 1

### இன்னினியே அறம் செய் !

மற்றறிவாம் நல்வினை யாமிளைய மென்னுது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலு முண்டு. 2

### தகுதியறிந்து கொடு

உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங் — கறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். 3

### அறங்கூற வேண்டாதவன்

பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கண் குருடனுய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா வவற்கு. 4

### தன்னிலைக்குத் தானே காரணன்

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் — நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான். 5

—சமண முனிவர்கள்

## 3. பழமொழி

கேடு எண்ணத் தகாதவர்

நாடி நமரென்று நன்குபுறந் தந்தாரைக்
கேடு பிறரோடு சூழ்தல் கிளர்மணி
நீடுகல் வெற்ப நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல். 1

சுற்றத்தார் சொற்கேள்!

உளைய உரைத்து விடினும் உறுதி
கிளைகள்வாய்க் கேட்பது நன்றே விளைவயலுள்
பூமிதித்துப் புட்கலாம் பொய்கைப் புனலூர
தாய்மிதித்த ஆகா முடம். 2

வஞ்சரை அறியும் வழி

வெள்ளம் வருங்காலை ஈரம்பட் டஃதேபோல்
கள்ள முடையாரைக் கண்டே அறியலாம்
ஒள்ளமர் கண்ணாய் ஒளிப்பினும் உள்ளம்
படர்ந்ததே கூறும் முகம். 3

நட்பு நிலைக்கும் வழி

தந்தீமை யில்லா தார் நட்டவர் தீமையையும்
எந்தீமை யென்றே உணர்பதாம் — அந்தண்
பொருதிரை வந்துலாம் பொங்குநீர்ச் சேர்ப்ப
ஒருவர் பொறையிருவர் நட்பு. 4

சான்றோர் இயல்பு

எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் — தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும் [காணார்
எனச்செய்யார் மாணா வினை. 5

— முன்றுறை அரையனார்

## 4. நீதிநெறி விளக்கம்

கல்வி அழகே அழகு

கற்ரோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்ருே ரணிகலம் வேண்டாவாம் — முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். 1

தோன்றலின் தோன்ருமை நன்று

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும் — நவையஞ்சி
ஈத்துண்ணுர் செல்வமும் நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. 2

கற்றது போதுமெனக் களியற்க !

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க — தம்மினும்
கற்ருரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநா மென்று. 3

கற்றபடி நட !

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோ வலியுடைமை — சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப
[நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல். 4

எல்லார்க்கும் நன்றாம் பணிதல்

கல்வி யுடைமை பொருளுடைமை என்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும் — இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். 5

—குமர குருபர அடிகளார்

## 5. ஏலாதி

### விண்ணோர் விருந்தேற்பர்

இன்சொ லளாவ லிடமினிதூண் யாவர்க்கும்
வன்சொற் களைந்து வகுப்பானேல் — மென்சொல்
முருந்தேய்க்கு முட்போ லெயிற்றினாய் நாளும்
விருந்தேற்பர் விண்ணோர் விரைந்து. 1

### குடியோடு வாழ்பவன்

களியான்கள் ளுண்ணான் களிப்பாரைக் காணான்
ஒளியான் விருந்திற் குலையான் — எளியாரை
எள்ளானீத் துண்பானே லேதமில் மண்ணாண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து. 2

### நன்மையும் தீமையும்

மையேர் தடங்கண் மயிலன்னாய் ! சாயலே
மெய்யே யுணர்ந்தார் மிகவுரைப்பர் — பொய்யே
குறளை கடுஞ்சொல் பயனிலசொல் நான்கும்
மறலையின் வாயினவா மற்று. 3

### அன்புடையார்க்கு உரியன

சாதல் பொருள்கொடுத்தல் இன்சொற் புணர்வுவத்தல்
நோதல் பிரிவிற் கவறலே — ஓதலின்
அன்புடையார்க் குள்ளன வாறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து. 4

### வகையுடன் வாழ்வார்

கடம்பட்டார் காப்பில்லார் கைத்தில்லார் தங்கான்
முடம்பட்டார் மூத்தார் மூப்பில்லார்க் — குடம்பட்
டுடையரா யில்லுளூ ணீத்துண்பார் மண்மேல்
படையராய் வாழ்வார் பயின்று. 5

—கணிமேதையார்

## 6. சிறுபஞ்சமூலம்

### வாழும் வழி

பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள்
[வெளவன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின் — ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு. 1

### உலகு உரைக்கும்

வார்சான்ற கூந்தல் வரப்புயர வைகலும்
நீர்சான் றுயரவே நெல்லுயரும் — சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்
ஓவா துரைக்கு முலகு. 2

### பேரின்பம் தருபவை

நீரறம் நன்று நிழல்நன்று தன்னில்லுள்
பாரறம் நன்றுபாத் துண்பானேல் — பேரறம்
நன்று தளிர்சாலை நாட்டற் பெரும்போகம்
ஒன்றுமாஞ் சால வுடன். 3

### எண்பதின் மேலும் வாழ்வான்

பஞ்சப் பொழுதத்தே பாத்துண்பான் காவாதான்
அஞ்சா துடைபடையுட் போந்தெறிவான்—எஞ்சாதே
உண்பதுமுன் னீவான் குழவிபலி கொடுப்பான்
எண்பதின் மேலும்வாழ் வான். 4

### வாழ்க என வாழ்தல்

தான்பிறந்த இன்னினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிறராற் கருதற்பா டுணர்ந்து — தான்பிறராற்
சாவ வெனவாழான் சான்றோராற் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்தல் நன்று. 5

—காரியாசான்

# 3. தொடர்நிலைச் செய்யுட்பகுதி

## 1. கம்பராமாயணம்

### (திருவடி சூட்டு படலம்)

[பாடப்பகுதிச் சுருக்கம்: கங்கைக்கரை வேடர் தலைவனை குகன்மூலம் கானகத்தில் இராமபிரான் தங்கியிருக்கும் இடத்தைத் தெரிந்துகொள்கிறான் பரதன். இராமபிரான் இருக்கும் சித்திரகூடத்தை அடைந்ததும் அவனுடைய திருவடிகளில் விழுந்து கதறுகிறான். இராமபிரானும் கண்ணீர் பெருக்குகிறான்; பரதனை வாரி எடுத்துத் தழுவுகிறான். பரதன்மூலம் தந்தையார் காலமான செய்தியை அறிந்து புலம்புகிறான். பின் ஒருவாறு தேறித் தந்தையார்க்கு நீர்க்கடனாற்றுகிறான். மறுநாள், பரதனை நோக்கி, 'நீ தவவேடம் கொள்ளக் காரணம் என்ன?' என்று வினவவும், பரதன் அதற்குரிய காரணங்களைக் கூறி அயோத்திக்கு வருமாறு அழைக்கிறான். ஆனால், இராமபிரானே பரதனுக்குத் தக்கவாறு அறிவுரை கூறித் 'தந்தை கட்டளைப்படி நீயே நாட்டையாள்க' எனக் கூறுகிறான்.]

இராமன் திருவடிகளில் பரதன் வீழ்தல்

அறந்தனை நினைந்திலை அருளை நீத்தனை
துறந்தனை முறைமையை என்னும் சொல்லினன்
மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தனன்
இறந்ததன் தாதையை எதிர்கண் டென்னவே. 1

பரதனைக் கண்ட இராமன் கண்ணீர் விடுதல்

உண்டுகொல் உயிரென ஒடுங்கி னானுருக்
கண்டனன் நின்றனன் கண்ணன் கண்ணெனும்
புண்டரீ கம்பொழி புனல வன்சடா
மண்டலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே. 2

### அண்ணன் தம்பியை அணைத்தல்

அயாவுயிர்த் தழுகணீர் அருவி மார்பிடை
உயாவுறத் திருவுளம் உருகப் புல்லினன்
நியாயமத் தனைக்குமோர் நிலைய மாயினன்
தயாமுதல் அறத்தினைத் தழுவி என்னவே. 3

### தம்பியை நோக்கித் தந்தைநலன் கேட்டல்

புல்லினன் நின்றவன் புனைந்த வேடத்தைப்
பன்முறை நோக்கினன் பலவும் உன்னினன்
அல்லலின் அழுங்கினை ஐய ஆளுடை
மல்லுயர் தோளினன் வலியனே என்றான். 4

### பரதனின் விடை

அரியவன் உரைசெயப் பரதன் ஐயநிற்
பிரிவெனும் பிணியினால் என்னைப் பெற்றவக்
கரியவள் வரமெனுங் கால னால்தனக்
குரியமெய்ந் நிறுவிப்போய் உம்பரான் என்றான். 5

### இராமன் மயங்கி வீழ்தல்

விண்ணிடை அடைந்தனன் என்ற வெய்யசொல்
புண்ணிடை அயிலெனச் செவிபு காமுனம்
கண்ணொடு மனஞ்சுழல் கறங்கு போலவாய்
மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான். 6

### இராமன் சிறிது தெளிந்து புலம்பிக் கூறுதல்

சொற்பெற்ற நோன்பின் துறையோன் அருள்வேண்டி
நற்பெற்ற வேள்வி நவைநீங்க நீஇயற்றி
எற்பெற்று நீபெற்ற தின்னுயிர்போய் நீங்கலோ
கொற்பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய். 7

தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கானடைந்தேன் என்னத் தரியாது காவலநீ
வானடைந்தாய் இன்னம் இருந்தேனுன்
[வாழ்வுகந்தே
ஊனடைந்த தெவ்வர் உயிரடைந்த ஒள்வேலோய். 8

[இராமன் தந்தையார்க்கு நீர்க்கடன் ஆற்றினான். சீதையும், இலக்குவனும் செய்தியறிந்து வருந்தினர். மறுநாள்...]

இராமன் பரதனை வினாதல்

வரதன் துஞ்சினான் வையம் ஆணையால்
சரதம் நின்னதே மகுடம் தாங்கலாய்
விரத வேடநீ என்கொல் வேண்டினாய்
பரத கூறெனப் பரிந்து கூறினான். 9

பரதன் பதில் கூறி வேண்டுதல்

மனக்கொன் றுதன வரத்தி னின்னையும்
நினக்கொன் றுநிலை நிறுவி நேமியான்
தனைக்கொன் றுள்தரும் தனய னாதலால்
எனக்கொன் றுதவம் அடுப்ப தெண்ணினால் 10

நோவ தாகவிவ் வுலகை நோய்செய்த
பாவ காரியிற் பிறந்த பாவியேன்
சாவ தோர்கிலேன் தவஞ்செய் வேனலேன்
யாவ னாகியிப் பழிநின் றேறுவேன். 11

உந்தை தீமையும் உலகு றுதநோய்
தந்த தீவினைத் தாய்செய் தீமையும்
எந்தை நீங்கமீண் டரசு செய்கெனச்
சிந்தை யாவதுந் தெரியக் கூறினான். 12

**இராமன் பரதனுக்கு மறுமொழி கூறல்**

தாய்வ ரங்கொளத் தந்தை ஏவலால்
மேய நங்குலத் தருமம் மேவினேன்
நீவ ரங்கொளத் தவிர்தல் நீர்மையோ
ஆய்வ ரும்புலத் தறிவு மேவினுய். 13

தனயர் ஆயினுர் தந்தை தாயரை
வினையின் நல்லதோர் இசையை வேய்தலோ
நினைய லோவிடா நெடிய வன்பழி
புனைத லோஐய புதல்வர் ஆதல்தான். 14

வரனி லுந்தைசொல் மரபி னுலுடைத்
தரணி நின்னதென் றியைந்த தன்மையால்
உரனின் நீபிறந் துரிமை யாதலால்
அரசு நின்னதே ஆள்க என்னவே. 15

— கம்பர்

———

## 2. பெரிய புராணம்

### (மெய்ப்பொருள் நாயனுர் புராணம்)

[பாடப்பகுதிச் சுருக்கம்: திருக்கோவலூரைத் தலைநகராகக்கொண்டு சேதிநாட்டை ஆண்டுவந்தார் மெய்ப்பொருளார். இவர் வாய்மைநெறி தவருதவராய்ச் சிவனடியார்களிடத்துப் பேரன்பு பூண்டு ஒழுகிவந்தார். மாற்றுரை மாய்த்துப் பேராற்றலோடு பொலிந்தார். எப்பொழுதும் சிவனடியார் வேடமே மெய்ப்பொருள் எனக்கொண்டு ஒழுகிவந்தார். இவரிடம் பொருமைகொண்டு பன்முறை படையெடுத்துத் தோற்ருன் முத்தநாதன் என்பவன். இவன் மெய்ப்பொருளாரை வஞ்சனையால் வெல்லக் கருதினுன்; சிவனடியார் வேடந்தாங்கினுன்; திருக்கோவலூர் அரண்மனையை அடைந்து, மெய்காப்பாளனுன தத்தன் தடுத்தும் நில்லாமல் அரண்மனைக்குள் புகுந்து, அந்தப்

புரத்தை அடைந்தான். மெய்ப்பொருளார் சிவனடியார் வேடத்துடன் வந்த முத்தநாதனை வரவேற்று உபசரித்தார். முத்தநாதன் ஆகமப்பொருள் உரைக்க வந்ததாகக் கூறவே, குறிப்பறிந்து அரசியார் அகன்றார். சமயம் வாய்த்ததைக் கண்டு, தன்னுடன் கொண்டுவந்திருந்த சுவடிக்கட்டை அவிழ்ப்பவன்போலப் பாசாங்குசெய்து, வணங்கிநின்ற வேந்தரை வாளால் குத்தினான். அந்தக் கொடுஞ்செயலை அறிந்த தத்தன் முத்தநாதனைக் கொல்லத் துணியவே, மெய்ப்பொருளார் அவனைத் தடுத்து நிறுத்திக் கீழே வீழ்ந்தார். மேலும், முத்தநாதனுக்கு எவ்வித இடையூறும் நேராவண்ணம் ஊர்ப்புறத்தில் கொண்டு விடுமாறும் ஆணையிட்டார். மன்னர் ஆணையை அங்ஙனமே நிறைவேற்றி வந்தான் தத்தன். செய்தியறிந்து மகிழ்ந்த மெய்ப்பொருளார் அனைவரையும் நோக்கி அறிவுரை பகர்ந்தபின் இறைவனின் திருவடியை அடைந்தார்.]

### நாயனாரின் நற்செயல்

சேதிநன் னாட்டு நீடு
    திருக்கோவ லூரில் மன்னி
மாதொரு பாகர் அன்பின்
    வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை
    விளங்கிட மேன்மை பூண்டு
காதலால் ஈசர்க் கன்பர்
    கருத்தறிந் தேவல் செய்வார். 1

### அரசாட்சித் திறமை

அரசியல் நெறியின் வந்த
    அறநெறி வழாமல் காத்து
வரைநெடுந் தோளால் வென்று
    மாற்றலர் முனைகள் மாற்றி

உரைதிறம் பாத நீதி
ஓங்குநீர் மையினில் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர்
வேடமே சிந்தை செய்வார். 2

பகைவரை வெல்லல்

இன்னவா றெழுகும் நாளில்
இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும்
ஆசையால் அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடை யானை
பொருபரி காலாள் மற்றும்
பன்முறை யிழந்து தோற்றுப்
பரிபவப் பட்டுப் போனன். 3

முத்தநாதனின் வஞ்சனை

இப்படி இழந்த மாற்றன்
இகலினல் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தர் சீலம்
அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடம் கொண்டே
அற்றத்தில் வெல்வா னகைச்
செப்பரு நிலைமை எண்ணித்
திருக்கோவ லூரிற் சேர்வான். 4

முத்தநாதனின் சிவ வேடம்

மெய்யெலாம் நீறு பூசி
வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த
புத்தகக் கவளி ஏந்தி

மைபொதி விளக்கே என்ன
மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு
புகுந்தனன் முத்த நாதன். 5

அரண்மனையை அடைதல்

மாதவ வேடம் கொண்ட
வன்கணன் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக்
குழைக்கொடி ஆட மீது
சோதிவெண் கொடிகள் ஆடும்
சுடர்நெடு மறுகில் போகிச்
சேதியர் பெருமான் கோயில்
திருமணி வாயில் சேர்ந்தான். 6

தத்தன் தடுத்தல்

கடையுடைக் காவ லாளர்
கைதொழு தேற நின்றே
உடையவர் தாமே வந்தார்
உள்ளெழுந் தருளும் என்னத்
தடைபல புக்க பின்பு
தனித்தடை நின்ற தத்தன்
இடைதெரிந் தருள வேண்டும்
துயில்கொளும் இறைவன் என்றான். 7

துயிலும் இடத்தை அடைதல்

என்றவன் கூறக் கேட்டே
யானவற் குறுதி கூற
நின்றிடு நீயும் என்றே
அவனையும் நீக்கிப் புக்குப்

பொன்றிகழ் பள்ளிக் கட்டில்
புரவலன் துயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல்
மாதேவி இருப்பக் கண்டான். 8

நாயனுர் வணங்குதல்

கண்டுசென் றணையும் போது
கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலை யானை
எழுப்பிட உணர்ந்து மன்னர்
அண்டர்நா யகனுர் தொண்டர்
ஆமெனக் குவித்த செங்கை
கொண்டெழுந் தெதிரே சென்று
கொள்கையின் வணங்கி நின்று 9

நாயனுரும் முத்தநாதனும்

மங்கலம் பெருக மற்றென்
வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற
தென்கொலோ என்று கூற
உங்கள்நா யகனுர் முன்னம்
உரைத்தவா கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று
கொடுவந்தே னியம்ப என்ருன். 10

முத்தநாதனின் கொடுஞ்செயல்

கைத்தலத் திருந்த வஞ்சக்
கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தக மவிழ்ப்பான் போன்று
புரிந்தவர் வணங்கும் போதில்

பத்திரம் வாங்கித் தான்முன்
நினைந்தஅப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப்
பொருளெனத் தொழுது வென்றார். 11

தத்தா...நமர் !

மறைத்தவன் புகுந்த போதே
மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கண் கூடி
வாளினு லெறிய லுற்றான்
நிறைத்தசெங் குருதி சோர
வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் தத்தா
நமரெனத் தடுத்து வீழ்ந்தார். 12

எல்லையில் கொண்டுபோய் விடு

வேதனை எய்தி வீழ்ந்த
வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனும் தத்தன் தானும்
தலையினால் வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கேன் என்ன
எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணம்
கொண்டுபோய் விடுநீ என்றார். 13

மற்றவன் கொண்டு போன
வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித்
தீதிலா நெறியில் விட்ட

சொற்றிறங் கேட்க வேண்டிச்
சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவர் முன்பு சென்ருன்
கோமகன் குறிப்பில் நின்ருன். 14

நாயனுர் மகிழ்ச்சி

சென்றடி வணங்கி நின்று
செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி
விட்டனன் என்று கூற
இன்றெனக் கையன் செய்த
தியார்செய வல்லார் என்று
நின்றவன் தன்னை நோக்கி
நிறைபெருங் கருணை கூர்ந்தார். 15

— சேக்கிழார்

---

## 3. திருவிளையாடற் புராணம்

### (தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம்)

[பாடப்பகுதிச் சுருக்கம் : மதுரையை ஆண்டுவந்த சண்பக மாறனுக்கு ஒருமுறை, மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டா என்ற ஐயம் தோன்றுகிறது. தன் ஐயத்தைத் தீர்ப்போருக்குப் பொற்கிழி பரிசளிப்பதாகப் பறைசாற்றுகிருன். அச் செய்தியை அறிகிருன் தருமி என்பவன். அவன் ஆதிசைவ மரபினன்; வறுமையால் வாடுபவன்; மணம் செய்துகொள்ள வேண்டுமென்னும் விருப்புடையவன், ஆலவாய்க் கடவுளிடம் அளவிலாத பக்திபூண்ட அவன் தன் குறை தீர்க்குமாறு இறைவனிடம் முறையிடுகிருன். இறைவனும் தருமியினுடைய குறைதீர்ப்பதற்காகப் பாடல் ஒன்றை எழுதிக் கொடுத்தனுப்புகிருர். பாடலுடன் அரசவையை

அடைந்த தருமி பாடலைப் பாடவே பாட்டின் பொரு ளுணர்ந்த அனைவரும் மகிழ்கின்றனர். பாண்டியனும் அக மகிழ்ந்து தருமிக்குப் பொற்கிழியை அளிக்கும்படி கூறு கிறான். தருமி மிக்க ஆவலுடன் பொற்கிழியை நெருங்கும் பொழுது நக்கீரர் அவனைத் தடுத்து நிறுத்தி, 'பாடலிற் குற்ற முளது' எனக் கூறுகிறார். அதனால் மனம் நொந்த தருமி இறைவனிடம் சென்று புலம்பவே, அவர் புலவர் வடிவங் கொண்டு அரசவையை அடைகிறார். 'எம் கவிக்குக் குற்றம் கூறியவர் யார்?' என வினவவும், நக்கீரர் அஞ்சாமல் முன் வந்து, 'யானே குற்றம் உண்டெனக் கூறியவன். பாடலிற் சொற்குற்றம் இல்லை; பொருட் குற்றம் உளது' எனக் கூறி வாதிடுகிறார். வாதத்தின் இடையே இறைவன் தம் நெற் றிக் கண்ணைக் காட்டுகிறார். நக்கீரர், 'உடல் முழுவதும் கண்ணாகக்கொண்டு என்னை எரித்தாலும் குற்றம் குற்றமே' என்று கூறுகிறார்.]

### தருமியின் வேட்கை

அந்த வேலையி லாதி சைவரில்
வந்த மாணவன் மணஞ்செய் வேட்கையான்
முந்தை யாச்சிம முயலும் பெற்றியான்
தந்தை தாயிலான் றருமி யென்றுளான். 1

### தருமி ஆலவாய் இறைவனிடம் இரத்தல்

தந்தை தாயிலேன் றனிய னாகிய
மைந்த னேன்புது வதுவை வேட்கையேன்
சிந்தை நோய்செயுஞ் செல்ல றீர்ப்பதற்
கெந்தை யேயிது பதமென் றேத்தியே 2

ஐய யாவையு மறிதி யேகொலாம்
வையை நாடவன் மனக்க ருத்துணர்ந்
துய்ய வோர்கவி யுரைத்தெ னக்கருள்
செய்ய வேண்டுமென் றிரந்து செப்பினான். 3

இறைவன் தருமிக்குப்'பாடல் வழங்குதல்

தென்ன வன்குல தெய்வ மாகிய
மன்னர் கொங்குதேர் வாழ்க்கை யின்றமிழ்
சொன்ன லம்பெறச் சொல்லி நல்கினர்
இன்ன றீர்ந்தவ னிறைஞ்சி வாங்கினன். 4

தருமி பாடலுடன் சங்கம் அடைதல்

பொற்ற னிச்சடைப் புவன நாயகன்
சொற்ற பாடல்கைக் கொண்டு தொன்னிதி
பெற்றெ டுத்தவன் போன்று பீடுறக்
கற்ற நாவலர் கழக நண்ணினன். 5

சங்கத்தார் பாடலைப் பாராட்டல்

கல்வி யாளர்தங் கையி னீட்டினன்
வல்லை யாவரும் வாங்கி வாசியாச்
சொல்லின் செல்வமும் பொருளுந் தூக்கியே
நல்ல நல்லவென் றுவகை நண்ணினர். 6

மீனவன் மகிழ்ச்சி அடைதல்

அளக்கில் கேள்வியா ரரசன் முன்புபோய்
விளக்கி யக்கவி விளம்பி னர்கடன்
உளக்க ருத்துநே ரொத்த லாற்சிரந்
துளக்கி மீனவன் மகிழ்ச்சி தூங்கினன். 7

மீனவன் பொற்கிழி பெறுமாறு கூறல்

உணர்ந்த கேள்வியா ரிவரொ டொல்லைபோய்ப்
புணர்ந்த வாயிரம் பொன்னு மின்றமிழ்
கொணர்ந்த வேதியன் கொள்க வின்றெண
மணந்த தாரினன் மகிழ்ந்து நல்கினன். 8

### நக்கீரன் தடுத்தல்

வேந்த னேவலால் விபுதர் தம்மொடும்
போந்து மீண்டவைப் புறம்பு தூங்கிய
ஆய்ந்த பொற்கிழி யறுக்கு நம்பியை
நேர்ந்து கீரனில் லெனவி லக்கினன். 9

### தருமியின் தவிப்பு

குற்ற மிக்கவிக் கென்று கூறலுங்
கற்றி லானெடுங் காலம் வெம்பசி
உற்ற வன்கலத் துண்ணு மெல்லைகைப்
பற்ற வாடினன் பண்பு பற்றினன். 10

### தருமி ஆலவாய் அண்ணலை நண்ணி வருந்துதல்

உலர்ந்த நெஞ்சுகொண் டொதுங்கி நாயகன்
நலந்த ருங்கழ னண்ணி னனவன்
மலர்ந்த பாடல்கொண் டறிஞர் வைகிடத்
தலந்த சிந்தைகொண் டடைந்த மைந்தனே. 11

செய்யுள் கொண்டுபோய்த் திருமுன் வைத்துளப்
பையுள் கொண்டவப் பனவ னென்னை நீ
மையுண் கண்டவிவ் வழுவு பாடலைக்
கையு ணல்கினய் கதியி லேற்கென. 12

வறுமைநோய் பிணிப்பப் பன்னள்
வழிபடு மடியே னின்பாற்
பெறுபொரு ளிழந்தே னென்று
பேசிலேன் யார்க்கு மேலாங்

கறைகெழு மிடற்ருேய் நின்றன்
கவிக்குற்றஞ் சில்வாழ் நாட்சிற்
றறிவுடைப் புலவர் சொன்ன
லாருனை மதிக்க வல்லார். 13

இறைவன் புலவராய் வேடங்கொள்ளல்

எந்தையிவ் விகழ்ச்சி நின்ன
தல்லதை யெனக்கியா தென்னுச்
சிந்தைநோ யுழந்து சைவச்
சிறுவனின் றிரங்க யார்க்கும்
பந்தமும் வீடும் வேதப்
பனுவலும் பயனு மான
சுந்தர விடங்க னங்கோர்
புலவனுய்த் தோற்றஞ் செய்தான். 14

நக்கீரரின் அஞ்சாமை

ஆரவை குறுகி நேர்நின்
றங்கிருந் தவரை நோக்கி
யாரைநங் கவிக்குக் குற்ற
மியம்பினு ரென்னு முன்னங்
கீரனஞ் சாது நானே
கிளத்தினே னென்ரு னின்ற
சீரணி புலவன் குற்றம்
யாதெனத் தேராக் கீரன் 15

பாடலில் குற்றம் உள்ளது எனல்

சொற்குற்ற மின்று வேறு
பொருட்குற்ற மென்ருன் றூய
பொற்குற்ற வேணி யண்ணல்
பொருட்குற்ற மென்னை யென்ருன்

தற்குற்றம் வருவ தோரான்
புனைமலர்ச் சார்பா லன்றி
அற்குற்ற குழற்கு நாற்ற
மில்லையே யென்று னையன். 16

நக்கீரர் வாதிடல்

பரவிநீ வழிபட் டேத்தும்
பரஞ்சுடர்த் திருக்கா ளத்தி
அரவுநீர்ச் சடையார் பாகத்
தமர்ந்தஞா னப்பூங் கோதை
இரவினீர்ங் குழலு மற்றே
வெனவஃது மற்றே யென்னு
வெருவிலான் சலமே முற்றச்
சாதித்தான் விளைவு நோக்கான். 17

நெற்றிக் கண்ணைக் காட்டினாலும் குற்றம் குற்றமே
என நக்கீரர் கூறல்

கற்றைவார் சடையா னெற்றிக்
கண்ணினைச் சிறிதே காட்டப்
பற்றுவா னின்னு மஞ்சா
னும்பரார் பதிபோ லாகம்
முற்றுநீர் கண்ணு னாலும்
மொழிந்தநும் பாடல் குற்றங்
குற்றமே யென்றான் றன்பால்
ஆகிய குற்றந் தேரான். 18

— பரஞ்சோதி முனிவர்

## 4. சீருப்புராணம்

### (கரம்பொருத்து படலம்)

[பாடப்பகுதிச் சுருக்கம் : நபிநாயகம் அவர்கள் வாணிகம் புரியும் பொருட்டுச் சில வணிகர்களுடன் ஷாம் என்ற நகரத்திற்கு வந்து தங்கியிருந்தார். அப்பொழுது அவரைக் காண யூதர்கள் சிலர் வந்தனர். அவர்கள் நபிநாயகத்தின் ஒளிவீசு மேனியைக் கண்டு, ‘நம் சமயத்தையும், வேதங்களையும் அழிக்கப் பிறந்தவன் இவனே யாவான். இவனைக் கொல்லாமல் விடக்கூடாது’ என்று தமக்குள் முடிவு செய்து கொண்டனர். கொல்வதற்குத் தக்க சூழ்ச்சி ஒன்றையும் வகுத்தனர். அதன்படி நபிநாயகத்தைத் தம் இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்றனர்; ஆதனம் இட்டு உபசரித்தனர். அங்ஙனம் உபசரிக்கும்பொழுது முன்னேற்பாட்டின்படி அவருடைய தலைமீது பாறையொன்றைத் தள்ளிக் கொல்வதற்காக ஒரு யூதன் முயன்றான். அவன் பாறையைப் புரட்டுகையில் அவனுடைய கை பாறைக்குக் கீழ் அகப்பட்டுக்கொள்ளவே, வலி தாளாமல் அவன் அலறினான். ஏனைய யூதர்கள் அவனுக்கு உதவப் பாறையை நகர்த்தினர். அதனால் அந்த யூதனின் கை அறுந்து தொங்கவே, யூதர்கள் அனைவரும் நபிநாயகத்திடம் சென்று நடந்ததைக் கூறிப் பொறுத்தருளும்படி வேண்டினர். நபிநாயகமும் அவர்களை மன்னித்தார். அத்துடன் தீமை செய்யமுனைந்த யூதனின் கையையும் பொருத்திவைத்து அருள் செய்தார். அந்த யூதனும் தன் பிழை பொறுத்து ஆட்கொள்ளுமாறு நபிநாயகத்தை வேண்டினான்.]

#### நபிநாயகத்தின் தெய்வத் தோற்றம்

மேனியிற் கதிர்விரி வியப்பும் மெய்யினில்
மான்மதம் கமழ்தரும் வடிந்த கைகளும்
தூநிறை மதியென முகமும் தோள்களும்
கானிலம் தோய்தராக் கார ணீகமும்

பன்னருஞ் சிறப்புடை யருட்கட் பார்வையும்
மன்னிய அவயவத் தழகு மாசிலா
நன்னிலே மொழிபல நவிற்றுஞ் செய்கையும்
இன்னன பலவுங்கண் டேகி னரரோ. 2

நூல்வலார் நுவன்றவன் இவனெனல்

மறைதெரி சமயமும் நமரு மாய்ந்திட
உறைகுவ னொருவனுண் டணித்தென் றோதுநூல்
துறைவலார் நாடொறும் சொற்ற சொற்படி
பிறவியா னிவனெனப் பின்னும் பேசினர். 3

யூதர்கள் நபிகளைக் கொல்லத் துணிதல்

தருபெரும் பதவியிச் சமயம் பாழ்பட
வருபவன் தன்னுயிர் வானி லேறிடக்
குருதிநீர் சிந்திடக் குவல யத்திடைச்
செருவிளைத் திடுதலே திறமென் றோதினர். 4

யூதர்கள் நபிகளைத் தம் இல்லிற்கு அழைத்தல்

சொல்லிய விலைப்பொருட் டொகையை நும்வயின்
ஒல்லையின் உதவுதற் குறுதி யாகவே
மல்லுடைப் புயத்திறல் முகம்ம தேயெம
தில்லிடை வருகவென் றிசைத்திட் டாரரோ. 5

நபிநாயகம் புறப்பட்டுச் செல்லல்

ஷாமுநாட் டவருரை யனைத்தும் சம்மதித்
தாமினு திருமகன் அகம கிழ்ச்சியாய்
நேமிவா னவர்திரை நிறைந்து சுற்றிய
பூமிநா யகர்தொழப் புறப்பட் டாரரோ. 6

### வஞ்ச மனத்தர் நபியைப் புகழ்தல்

மைதவழ் குடையீ ரிந்த
மனையிடைப் புகுத யாங்கள்
செய்தவப் பயனோ முன்னோர்
தினைத்தபுண் ணியத்தின் பேறோ
எய்திய பெற்றி யென்ன
இசைந்தநன் முகம னாக
பொய்திகழ் நாவால் வஞ்சம்
பொருந்திய மனத்தர் சொன்னார். 7

### தீவினையின் விளைவு

தீங்குறு மனத்த னேகிச்
செறித்தமேற் பலகை மெல்ல
வாங்கியங் கிருந்த கல்லை
வரைப்புயம் பிதுங்க வுன்னித்
தாங்கலில் உருட்டி மெல்லத்
தள்ளினன் தள்ள லோடும்
நீங்கருங் கரத்தைக் கவ்வி
நெரிபட இறுக்கிற் றன்றே. 8

### தீய யூதன் வருந்துதல்

கரத்தினிற் பதிந்த கல்லைக்
கழற்றினன் கழற்ற லாகா
துரத்தொடுங் காலை யூன்றி
யுதைத்திழுத் தசைத்து வெள்வாய்
நிரைத்தபல் லதரங் கவ்வி
நெற்றிமேற் புருவ மோட்டி
வரைத்தடப் புயங்கள் வேர்ப்ப
வலித்தறச் சலித்து ழன்றான். 9

### தீமை எண்ணின் தீமையே விளையும்

ஓங்கு மாநில மாக்களில் ஒருவருக் கொருவர்
தீங்கி யற்றிட நினைத்திடுங் கொடியவத் தீமை
நீங்கி டாதவ ருயிரினைப் பருகநே ரலர்கை
தாங்கும் வாளென ஒல்லையி லுறச்சமைந் திடுமே. 10

### தீயவர் திருந்துதல்

வெறுத்த புன்மனக் கொடியம்யாம் விளைத்திடும்
[வினையைப்
பொறுத்து நல்லரு ளெம்வயின் புரிகெனப் போற்றி
மறுத்து நன்மொழி புகன்றனர் வளருநல் லறத்தை
அறுத்துத் தீவினைப் பயிர்விளைத் திடநினைத் தவரே. 11

### நபிநாயகம் யூதனின் கரம்பொருத்தி அருளல்

கரிய கல்லினிற் பதிந்திடும் கரத்தினின் கரத்தைத்
தெரிய வைத்திடென் ரேதிய மொழியினைத் தேறிச்
சொரித ருங்குரு திகளொடும் துடுப்பெனுங் கரங்கள்
அரிதி னீட்டியே தொட்டிட வொட்டின அன்றே. 12

### யூதன் நபிநாயகத்தை வழிபடல்

முன்னை நாளினும் பலனுறு முழுமலர்க் கரத்தால்
வன்ன மாமலர் முகம்மதின் இணையடி வருடி
இன்னல் நீக்கினை இருகரம் பொருத்தினை இனியென்
தன்னை யாளுதி கடனென அடிக்கடி தாழ்ந்தான். 13

— உமறுப்புலவர்

———

## 5. தேம்பாவணி

### (வளன் சனித்த படலம்)

[பாடப்பகுதிச் சுருக்கம்: சூதேய நாட்டைச் சவூல் என்னும் மன்னன் ஆண்டுவந்தான். அம் மன்னனைப் பிலித்தையர்கள் என்போர் எதிர்த்து வந்தனர். பிலித்தையர்கள் யூதர்களின் பகைவர்களாவர். அவர்களுக்குக் கோலியாத்து என்னும் இரக்கமற்ற அரக்கன் துணையாக இருந்தான். அவ் வரக்கனை வென்று வருபவனுக்குத் தன் மகளை மணம் புரிவிப்பதாக மன்னன் நாடெங்கிலும் பறைசாற்றுவித்தான். அதன்பின்னும் நாற்பது நாட்கள் கோலியாத்தின் கொடுமைகள் அதிகரித்துவந்தன.

இங்ஙனமிருக்கையில் பெத்லெகம் என்னுமூரில் பிறந்த வீர இளைஞனை தாவீது தன் உடன்பிறந்தாரைப் போலவே பிலித்தையர்களிடம் பகை கொண்டிருந்தான். அவ் வுடன்பிறந்தோரின் வாயிலாகக் கோலியாத்தின் கொடுமைகளைப்பற்றிக் கேட்டறிந்த தாவீது சூதேய நாட்டு மன்னனுடைய அவையை அடைந்தான். அம் மன்னனுடைய ஐயத்தைத் தீர்த்துவைத்தபின் அவ் வரக்கனைக் கொன்றுவருவதாக உறுதிகூறிச் சென்றான். கவணும், வில்லுமாய்த் தன்னை எதிர்க்க வந்த இளைஞன் தாவீதைக் கண்டு கோலியாத்து எள்ளி நகையாடினான். அதனைப் பொருட்படுத்தாத தாவீது உறுதியுடன் கவண்கல் வீசி அவ் வரக்கனை மாய்த்தான்.]

#### அண்ணன்மார் தாவீதுக்கு உரைத்தல்

இன்ன வாய்ப்பகல் நாற்பதும் இரிந்தபின் அண்ணர்
முன்னர் மூவரே முரண்செயப் போயினர் அவரைத்
துன்ன ஆசையால் தொடர்ந்திள தாவீதன் எய்தி
அன்ன யாவையு மஞ்சின ரறைதலுங் கேட்டான். 1

### தாவீது வினுதல்

கேட்ட வாசகம் கிளர்திறம் நெஞ்சிடத் தெரியை
ஈட்ட லாமென எழுந்துளம் நினைந்தவை யாக்கிக்
காட்ட வாய்மையிற் கடந்தவல் கடவுளை நகைப்ப
வேட்ட லால்விளி விழுங்கிய கயவனு ரென்ருன். 2

### தாவீது தான் வெல்வதாகக் கூறல்

கைவ யத்திறு் கருத்திடத் துடலினூங் கோங்கும்
பொய்வ யத்தினுன் புகைந்தசொற் கஞ்சுவ தென்னே
மெய்வ யத்திறுல் விழைசெய மாவதோ கடவுள்
செய்வ யத்திறுற் சிறுவனுன் வெல்லுவே னென்ருன். 3

### மன்னனின் ஐயப்பாடு

என்ற தண்ணல்கேட் டிவன்றனைக் கொணர்மினென்
[றிசைப்பச்
சென்ற வன்னநற் சேடனை நோக்கலும் நீயோ
பொன்ற வுன்னினுய் பொருப்பினைப் பெயர்த்தெறிந்
[துவமை
வென்ற திண்மையான் வெகுளிமுன் நீயெவ
[னென்ருன். 4

### இளைஞன் தாவீது இயம்பியவை

ஏந்த லீரடி இறைஞ்சிய இளவலும் அறைவான்
காய்ந்த தோர்பகை கடுத்ததன் பவஞ்செயின் மீட்டும்
வேய்ந்த தோர்பகை வேண்டுமோ கடவுளைப்
[பகைத்து
வாய்ந்த ஆண்மையை மறுத்தனை எவன்வெலான்
[ஐயா. 5

திறங்க டுத்தகொல் சிங்கமும் உளியமும் பாய்ந்து
மறங்க டுத்ததிர் வல்லியத் தினங்களும் எதிர்ந்து
கறங்க டுத்தகால் கழுத்தினை முறுக்கியான்
[கொன்றேன்
அறங்கெ டுத்தவன் அவற்றினும் வலியனே
[என்றான். 6

அரசன் தாவீதை நோக்கிக் கூறுதல்

அரிய ஆண்மையை யதிசயித் தரசன் நன்றெனு
விரிய ளாவொளி வேலொடு தனது பல்கருவி
உரிய போர்செய ஒருங்குதந் தனனவற் றெடுதான்
திரிய ஆய்முறை தெரிகிலேன் எனமறுத் தகன்றான். 7

அனைவரும் ஆர்த்தல்

தெரிந்த வாய்ந்தஐஞ் சிலையொடு கவணெடுத் தெவரும்
இரிந்த பாலனை நோக்கியுள் ளதிசயித் திரங்க
விரிந்த வாசையால் வேதியர் ஆசியைக் கூறப்
பிரிந்த காலொலி பெருகவாங் கனைவரு மார்த்தார். 8

கோலியாத்து சீறி எழல்

ஆர்த்த வோதைகேட் டரக்கனின் றமர்க்கெதிர் வருகப்
பார்த்த பாலனைப் பழித்தெழுந் தியாவரு மஞ்சக்
கூர்த்த வேலொடு குறுகவந் தகல்கரு முகிலிற்
பேர்த்த கோடைநாட் பேரிடி யெனவுரை செய்தான். 9

கோலியாத்தின் பழிப்புரை

நீயடா! எதிர்நிற்பதோ? மதம்பொழி கரிமேல்
நாயடா! வினை நடத்துமோ? கதங்கொடு நானே
வாயடா! பிளந்துயிர்ப்பிட மறுகிநீ நுண்டுள்
ஆயடா! உலகப்புறத் தேகுவாய் என்றான். 10

### தாவீது கவண் சுழற்றல்

வெல்வை வேல்செயும் மிடலதுன் மிடலடா ! நானே
எல்லை யாதர வியற்றெதி ரிலாத்திறற் கடவுள்
வல்கை யோடுனை மாய்த்துடல் புட்கிரை யாக
ஒல்செய் வேனெனு வுடைக்கவண் சுழற்றினன்
[இளையோன். 11

### அரக்கனின் வீழ்ச்சி

கல்லை யேற்றுங் கவணினைச் சுழற்றலு மக்கல்
ஒல்லை யோட்டலு மொருவருங் காண்கிலர் ! இடிக்கும்
செல்லை யொத்தன சிலைநுதற் பாய்தலு மன்னன்
எல்லை பாய்ந்திருள் இரிந்தென வீழ்தலுங்
[கண்டார். 12

### தாவீது அரக்கனை மாய்த்தல்

கடையு கத்தினிற் கருமுகி லுருமொடு விழும்போற்
படைமு கத்தினிற் பார்பதைத் தஞ்சவீழ்ந் தனன்றன்
புடைய கத்தினிற் புணர்ந்தவா ளுருவியென் றெய்வ
முடையு ரத்தினை யுணர்மினென் றிருஞ்சிரங்
[கொய்தான். 13

### தாவீது அனைவரையும் தன்னடிப்படுத்துதல்

கார்முகத் தசனி கூசக் கடுத்தவவ் வரக்கன் வென்ற
சீர்முகத் திளவல் பின்னர் திறத்த தன்மை வேலாற்
போர்முகத் தெதிரொன் றில்லான் பொழிமறை
[பழித்த யாரும்
பார்முகத் ததற்கெஞ் ஞான்றும் பரிந்திட
[வகைசெய் தானே. 14

— வீரமாமுனிவர்

## 4. பல்சுவை

### 1. வருணனை

சூளாமணி　　　　　　　　　　　　　　　　　　உதயகால வருணனை

குளிரும் தென்றல் அசைந்தசைந்து
　　குலவி மகிழ்ந்து தவழ்ந்திடவே
மிளிரும் உதயச் செவ்வண்ணம்
　　விரைந்து கிழக்கில் பெருகிடவே
ஒளிரும் சிறைமென் புள்ளினங்கள்
　　ஒன்ருய் இசைகள் பாடிடவே
தளிரும் இலையும் வளர்காவில்
　　தண்ணர் மலர்கள் கண்விழிக்கும்.　　1

— தோலாமொழித்தேவர்

வீரசோழியம்　　　　　　　　　　　　　　　　　　எழுஞாயிறு வருணனை

இரவிடை மதியம் என்பான்
　　ஆடிப்போய் மறையும் எல்லை
விரியிருள் எழினி நீக்கி
　　விசும்பெனு மரங்கு தன்னில்
கரைகடல் முழவம் ஆர்ப்பக்
　　கதிரெனும் கைகள் வட்டித்
தெரிகதிர் என்னும் கூத்தன்
　　ஆடுவன் எழுந்து போந்தான்.　　2

— புத்தமித்திரனர்

குற்ருலக் குறவஞ்சி　　　　　　　　　　　　　　திரிகூடமலை வருணனை

ஆடுமர வீனுமணி கோடிவெயி லெறிக்கும்
　　அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்
வேடுவர்கள் தினைவிதைக்கச் சாடுபுனந் தோறும்
　　விந்தையகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்

காடுதொறு மோடிவரை யாடுகுதி பாயும்
காகமணு காமலையில் மேகநிரை சாயும்
நீடுபல வீசர்கயி லாசகிரி வாசர்
நிலைதங்கும் திரிகூட மலையெங்கள் மலையே. 3

— திரிகூடராசப்பக் கவிராயர்

கம்ப ராமாயணம் — வயல் வருணனை

சேலுண்ட வொண்க ணாரிற்
றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை. 4

— கம்பர்

பட்டினப்பாலை — கடைத்தெரு வருணனை

நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு. 5

— உருத்திரங்கண்ணனார்

## 2. சீட்டுக்கவி

**தனிப்பாடல்** **என் குறை கேளீரோ!**

மின்னு மாளிகை அநந்தை யாதிபதி
சந்த்ர வாணமகி பாலன்முன்
வீர ராகவன் விடுக்கும் ஓலைதன்
விருப்பி னுல்வலிய வேயழைத்
துன்னு காவிய மதிற்பெ ருத்ததொரு
கோவை யோதுகென ஓதினன்
ஓதி மாசமொரு மூன்று போகியொரு
நாலு மாசமள வாகவும்
இன்ன முந்தனது செவியில் ஏறவிலை
என்னில் என்னவுல கெண்ணுமோ
இராச ராசர்திறை கொள்ளும் என்கவிதை
இங்கு வந்துகுறை யாகுமோ
தன்னை யென்சொலுவர் என்னை யென்சொலுவர்
தான்தமிழ்க் குமணன் அல்லவோ
தன்பு கழ்க்குமிது நீதியோ கடிது
தானின் னேவருதல் வேணுமே.

— *அந்தகக்கவி வீரராகவர்*

## 3. இரட்டுற மொழிதல்

**தனிப்பாடல்** **வைக்கோல் யானையாம் விந்தை**

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும்—சீருற்ற
செக்கோல மேனித் திருமலைராயன் வரையில்
வைக்கோலும் மால்யானை யாம். 1

**பாம்பு பழமாகும் விந்தை**

நஞ்சிருக்குந் தோலுரிக்கும் நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது—விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம். 2

— *காளமேகப்புலவர்*

## 4. சிற்றிலக்கியங்கள்

### (1) பரணி

**கலிங்கத்துப் பரணி** **படையா? பிரளயமா?**

கடல்க லக்கல்கொல் மலையி டித்தல்கொல்
கடுவி டப்பொறிப் பணப்பணிப்
பிடரொ டித்தல்கொல் படைநி னைப்பெனப்
பிரள யத்தினில் திரளவே. 1

பார்சி றுத்தலின் படைபெ ருத்ததோ
படைபெ ருத்தலின் பார்சி றுத்ததோ
நேர்செ றுத்தவர்க் கரிது நிற்பிடம்
நெடுவி சும்பலால் இடமு மில்லையே. 2

— *சயங்கொண்டார்*

### (2) கலம்பகம்

**திருவெங்கைக் கலம்பகம்** **மன்னரா? பெண்கொடோம்!**

விற்ற தார்கலை பாதி யோடுவ
னத்தி லேயழ விட்டதார்
வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி
லுரிய விட்டுவி ழித்ததார்
உற்ற தாரமும் வேண்டு மென்றினி
மன்னர் பெண்கொள லொண்ணுமோ
உமிய டாமண மென்ற வாய்கிழித்
தோலை காற்றிலு ருட்டடா

வெற்றி யாகிய முத்தி தந்தருள்
வெங்கை மாநகர் வேடர்யாம்
விமல ரானவர் எமைய டுத்தினி
தெங்கண் மிச்சின்மி சைந்தபின்
பெற்ற வேலர்த மக்கு யாமொரு
பெண்வ ளர்ப்பினி லீந்தனம்
பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோவிதென்
பேய்பி டித்திடு தூதரே.

—சிவப்பிரகாச சுவாமிகள்

## (3) பிள்ளைத்தமிழ்

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் செங்கீரை ஆடுக!

விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன்
மென்குரல் கம்மாமே
கரைவுறு மஞ்சன நுண்டுளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல்
கருவடி வுண்ணுமே
உருவ மணிச்சிறு தொட்டி லுதைத்துநின்
ஒண்பதம் நோவாமே
ஒருதா ளூந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை.

— குமரகுருபர சுவாமிகள்

### (4) பள்ளு

முக்கூடற்பள்ளு — மழைக்கு அறிகுறிகள்

மேகமெல்லாம் நன்ருய்க்கூடித் தான்கருக்குதே—
[மெத்த
மின்னல் மின்னி வாசவன்கை வில்லெடுக்குதே
நாகரிகப் பொதியமலைக் காற்றடிக்குதே—கொண்டல்
நாலுதிக்கும் கோடையிடி தானிடிக்குதே
ஏகபோக மாமரத்தில் குயில்கள் கூவுதே—மழைக்
கேற்றமாம் சொறித்தவளை கூப்பிடுகுதே
ஆகையினுல் எங்கள்திருக் கூடல்நகரில்
அந்திநேர மெல்லாமழை வந்துபெய்யுமே.

— என்னுயினுப் புலவர்

### (5) அந்தாதி

திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி — முழுமுதலைக் கண்டேன்

உண்டென மறைக ளோது மொருதனி முதலே நாளும்
அண்டரும் முனிவர் தாமும் காண்கில ரடியே னுன்னைத்
தெண்டிரை வளாக முற்றுந் தேடினேன் தேடித் தேடிக்
கண்டனன் களாவி னீழல் கருவைமா நகரத் தானே.

— அதிவீரராம பாண்டியர்

## 5. வழிபாட்டுப் பாடல்கள்

கந்தர் அநுபூதி — குருவாய் வருவாய்!

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

— அருணகிரிநாதர்

அபிராமி அந்தாதி — அபிராமி அளிப்பவை

தனந்தரும் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந்தரு நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன வெல்லாந் தருமன்பர் [என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே.

— அபிராமிபட்டர்

சகலகலாவல்லிமாலை — பணியச்செய்வாய் !

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட [மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய்வாய் படைப்போன் [முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி யுண்டேனும் விளம்பி [லுன்போல்
கண்கண்ட தெய்வ முளதோ சகலகலா வல்லியே.

— குமரகுருபர சுவாமிகள்

இரட்சணிய யாத்திரிகம் — தீனரட்சகனின் பதம்

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட
ஞானமும் நன்மையும் நனிசி றந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீனரட் சகன்பதம் சிந்தித் தேத்துவாம்.

— கிருட்டின பிள்ளை

அருள்வேட்டல் — நபியே போற்றி!

அரபிய நாட்டில் தோன்றி ஆண்டவன் ஒருவன் [என்னும்
மரபினை வாழச் செய்த மகமது நபியே போற்றி
தரையினில் பொதுமை மல்கிச் சகோதர நேயம் [ஓங்கக்
கரவிலா மறையைத் தந்த கருணையே போற்றி [போற்றி.

— திரு வி. க.

———

# செய்யுட் குறிப்புரை

## 1. வாழ்த்துப் பகுதி

1. தேவாரம் :

தே+ஆரம்=தேவாரம். இச் சொற்றொடர் தெய்வத்திற்குச் சூட்டப்படுகின்ற பூமாலை போன்ற பாமாலை எனப் பொருள்படும். தே+வாரம் எனவும் பிரிக்கப்பட்டு, தெய்வத்தை வழுத்துவதற்குரிய இசைப்பாடல் எனவும் பொருள் கூறப்படும். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவரும் தேவாரம் பாடியவர்களாவர்.

திருநாவுக்கரசர் திருவாமூரிற் பிறந்தவர். இவருடைய பெற்றோர் புகழனாரும், மாதினியாருமாவர். திலகவதியார் என்றொரு சகோதரியும் இவருக்குண்டு. இவருடைய இயற்பெயர் மருணீக்கியார். இவருக்கு அப்பர், வாகீசர் என்ற வேறு பெயர்களுமுள. சைவவேளாளர் குலத்திற் பிறந்த இவர் இளமையிற் சமண மதத்தைப் பின்பற்றித் தருமசேனர் என்ற பெயருடன் சிறப்புற்றிருந்தார். பின் திலகவதியாரின் வேண்டுகோளுக்கு இணங்கிய இறைவன் இவருக்குச் சூலைநோய் தந்து ஆட்கொண்டு அருளியமையால் சைவ சமயத்திற்கு மீண்டார். சிவத் தலங்கள்தோறும் சென்று உழவாரத் தொண்டு புரிந்து இறைவனடி சேர்ந்தார். இவர் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

பொன்—பொலிவு. என்+ஆவி=என்னாவி. இருங்கூற்று—சமணரோடு தொடர்பு கொண்டிருந்தவன் என்ற பழிச்சொல். மின்+ஆரும்=மின்னாரும். மூன்று+இலை=மூவிலை. கொண்டல்—மேகம். துன்னுதல்—நெருங்குதல். கடந்தை—பெண்ணாகடம் என்பதன் திரிபு; மரூஉமொழி. தூங்கு+ஆனை+மாடம்=தூங்குகின்ற ஆனை வடிவிற் கட்டப்பட்ட விமானம் (பெண்ணாகடத்திலுள்ள சிவாலயத்தின் பெயர்). கொழுந்து—கொழுந்துபோன்றவன்.

**2. திவ்வியப் பிரபந்தம் :**

திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்ட பன்னிரண்டு ஆழ்வார்களாலும் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பு, திவ்வியப் பிரபந்தம் எனப்படுகிறது. இந்நூலில் நாலாயிரம் பாடல்கள் உள்ளன. அதனால் இதனை 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' எனக் கூறுவர்.

ஆழ்வார் பன்னிருவருள் திருமங்கையாழ்வார் ஒருவர். இவர் திருக்குறையலூரிற் பிறந்தவர். இவருடைய இயற்பெயர் நீலன். பரகாலன், நாலுகவிப் பெருமாள், திருமங்கை மன்னன் என வேறு பெயர்களும் இவருக்கு உள. வைணவ மதத்தவராகிய இவர் சோழ மன்னனின் படைத் தலைவராகப் பணியாற்றிவந்தார். இவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

மன்னி—நிலைபெற்று. நந்தாத—கெடாத. கொழுமை+ சுடர்=கொழுஞ்சுடர். சுடர்—ஆகுபெயர். மேய—மேவிய (பொருந்திய). எந்தாய்—எம் தந்தையே. திருவேங்கடம்—திருப்பதி மலை.

**3. தேம்பாவணி :**

தேம்பாத+அணி=தேம்பாவணி. இச் சொற்றொடர் வாடாத மாலை எனப் பொருள் பெறும். கிறித்தவ மதக் காப்பியமான இந்நூலில், ஏசுநாதர், சூசை முதலியோரின் வாழ்க்கை வரலாறுகள் விவரிக்கப்பட்டுள்ளன.

இந்நூலைப் பாடியவர் வீரமாமுனிவர். இவர் இத்தாலி நாட்டிற் பிறந்தவர். இவரது இயற்பெயர் கான்ஸ்டண்டைன் ஜோசப் பெஸ்கி. தைரியநாத சுவாமி என்று வேறொரு பெயரும் இவருக்குண்டு. கத்தோலிக்கக் கிறித்தவ மதத்தவரான இவர் நம் நாட்டிற்கு வந்து மதத்தொண்டும், தமிழ்த் தொண்டும் செய்தவர். இவர் கி.பி. 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

கண்படுதல்—கண்மூடித் தூங்குதல். உளைதல்—வருந்துதல். பொருவா—ஒப்பிலா ; ஈறுகெட்ட எதிர்மறைப்

பெயரெச்சம். மருந்து—மருந்துபோன்றவன் மருள்—மயக்கம். கருணாகரன்—கருணைக்கு இருப்பிடமாக விளங்குபவன். செல்வம்+அரசு=செல்வரசு.

4. சீறாப்புராணம்:

'சீறா' என்பது 'சீறத்' என்னும் அரபுச் சொல் மருவி வந்த வழக்காகும். சீறா என்பது வாழ்க்கை வரலாறு எனப் பொருள்படும். நபிநாயகத்தின் வரலாறு இந்நூலில் விரித்துக் கூறப்பட்டுள்ளது.

இந்நூலின் ஆசிரியர் உமறுப் புலவர் ஆவார். இவர் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கீழக்கரைக்கு அருகிலுள்ள ஒரு சிற்றூரிற் பிறந்தவர். சேகு முதலியாரின் மகனாரான இவர் எட்டையபுர அவைப்புலவரான கடிகை முத்துப் புலவரிடம் கல்வி பயின்றவர். அவருக்குப் பிறகு எட்டையபுர அவைப் புலவராகத் திகழ்ந்தவர். கி.பி. 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

ஞான வாரிதி—மேம்பட்ட அறிவுக்கடல்; உருவகம். நானிலம்—பூமி. சுவடு—பாத அடையாளம். இருநிதி—பெருஞ்செல்வம். தரு—கற்பக தரு. மோனம்—மௌனம் என்பதன் திரிபு. நவமணி—ஒன்பதுவகை இரத்தினங்கள். தரு, மணி என்பன ஆகு பெயர்களாம்.

5. திருவருட்பா:

திரு+அருள்+பா=திருவருட்பா. இச் சொற்றொடர் இறைவனின் திருவருள் பெறுவதற்குக் காரணமாக உள்ள பாடல்கள் எனப் பொருள்படும்.

இந்நூலைப் பாடியவர் இராமலிங்க அடிகளாவார். இவர் சிதம்பரத்தை அடுத்துள்ள மருதூரிற் பிறந்தவர். இவர் பெற்றோர் இராமையா பிள்ளையும், சின்னம்மையாருமாவர். அருட்பிரகாச வள்ளலார் என இவருக்கு வேறொரு பெயர் உண்டு. கருணீகர் மரபினரான இவர் சமரச சன்மார்க்க நோக்கமுடையவர். கி.பி. 1823 - 1873இல் வாழ்ந்தவர்.

அருளா—அருள் வடிவான இறைவா. சினம், காமம்—உம்மைத்தொகை. சினம்—அடங்காத கோபம். காமம்—அடங்காத ஆசை. ஞான மன்று—சிதம்பரத்திலுள்ள பொற்சபை. மருள்+நீங்கி = மருணீங்கி. புணர்ந்து—சேர்ந்து. பொருந்துதல்—இரண்டறக் கலத்தல். வடிவில் உடையாய்—வடிவுடைய நீ.

### வினாக்கள்

I. 1. திருநாவுக்கரசர் எவ்வூர் இறைவனிடம் யாது வேண்டுகிறார்?

2. திருமங்கையாழ்வார் திருவேங்கடமுடையானை நோக்கி வேண்டுவது யாது?

3. வீரமாமுனிவர் ஏசுபிரானை எவ்வெவ்வாறு சிறப்பித்துள்ளார்?

4. உமறுப் புலவர் நபிகள் பெருமானைச் சிறப்பித்துரைப்பது எவ்வாறு?

5. இராமலிங்க அடிகளாரின் வேண்டுகோள்கள் யாவை?

II. பிரித்து எழுதுக: மின்னாரும், கொழுஞ்சுடர், செல்வரசு, தேவாரம் (இருவிதமாக).

III. இலக்கணக் குறிப்புத் தருக: கடந்தை, பொருவா, ஞானவாரிதி, சினங்காமம்.

———

# 2. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

நூலும், நூலாசிரியரும் :

திரு+குறள்=திருக்குறள். அழகிய குறுகிய அடிகளைக் கொண்ட வெண்பாக்களால் ஆகிய நூல் என்பது இதன் பொருளாகும். இந்நூலில் அறம், பொருள், காமம் என்னும் மூன்று பால்களும், 133 அதிகாரங்களும் உள்ளன. அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் 1330 குறள் வெண்பாக்கள் இந்நூலில் உள்ளன. ஓதுவதற்கு எளிதாய், உணர்வதற்கு அரிதாய் விளங்குகிறது இந்நூல். இந்நூலுக்கு முப்பால், தமிழ் மறை, பொதுமறை என வேறு பெயர்களும் உள்ளன. உலக மொழிகள் பலவற்றில் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூலுக்குப் பத்து ஆசிரியர்கள் உரை எழுதியுள்ளனர். இந்நூலின் உரையாசிரியர்களுட் சிறந்தவர் பரிமேலழகர். திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களாவன :

1. நாலடியார்
2. நான்மணிக்கடிகை
3. கார் நாற்பது
4. களவழி நாற்பது
5. இன்னா நாற்பது
6. இனியவை நாற்பது
7. ஐந்திணை ஐம்பது
8. ஐந்திணை எழுபது
9. திணைமாலை நூற்றைம்பது
10. திணைமொழி ஐம்பது
11. சிறுபஞ்ச மூலம்
12. முப்பால்
13. பழமொழி
14. ஆசாரக் கோவை
15. திரிகடுகம்
16. ஏலாதி
17. முதுமொழிக் காஞ்சி
18. இன்னிலை அல்லது கைந்நிலை.

திருக்குறளைப் பாடியவர் திருவள்ளுவப் பெருந்தகையார். இவரது பிறப்பிடம் மயிலாப்பூர் என்றும், மதுரை என்றும் சொல்வர். இவரைப்பற்றிப் பல கதைகள் சொல்

லப்படுகின்றன. இவருடைய பெயர், சமயம், காலம், மரபு முதலியவைபற்றித் தெளிவாக அறியக்கூடவில்லை. எனினும், இவர் எக்காலத்தார்க்கும், எத்தேசத்தார்க்கும், எம்மரபினருக்கும் பொருந்தும்படிப் பொதுவாக நூலைப் பாடிவைத்துள்ளார். இப் பெருந்தகையார், பொய்யில் புலவர், செந்நாப் போதார், நாயனுர், தேவர், பெருநாவலர், தெய்வப் புலவர் முதலான பெயர்களால் சிறப்பிக்கப் பெறுகிருர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. அகரம் - 'அ' என்னும் எழுத்து. முதல - முதலாகக் கொண்டுள்ளன. உலகு - உலகத்தில் வாழும் உயிர்கள். ஆதிபகவன் - ஆதியாகிய கடவுள். முதற்று - முதலாக உடையது.

2. துப்பார் - உண்பவர். துப்பு - உணவு. துப்பு+ஆக்கி= துப்பாக்கி. துப்பு ஆயதூஉம் - தானும் உணவாக நிற்பதும். தானும் உணவாதலாவது குடிநீராகப் பருகப்படுதலாம். இப் பாடலில் ஒரு சொல்லே திரும்பத் திரும்ப வந்து அழகுறப் பொருளை விளக்குவது காண்க.

3. மாசு+இலன்=மாசிலன். மாசு - தீயவற்றை நினைத்தலாகிய குற்றம். இலன்+ஆதல்=இலனுதல் ; இல்லாதவன் ஆக விளங்குக. அனைத்து - அந்நிலைமை. பிற - சொல்லும், வேடமும். ஆகுலம் - ஆரவாரம். நீர - தன்மையுடையவை.

4. வையம்-உலகம். 'வையகம்' என்னும் சொல் 'வையம்' என வந்துள்ளது. வாழ்வாங்கு - வாழவேண்டிய முறைப்படி. வான் - தேவ உலகம். தெய்வம் - தேவர்; பிறப்பால் மனிதனுக இருந்தாலும் வாழும் சிறப்பால் தேவனுகக் கருதப்படுவான்.

5. அன்பு - மனைவி, மக்கள் முதலிய தொடர்புள்ளவர்களிடத்தில் ஏற்படும் பாச உணர்ச்சி. தாழ் - தாழ்ப்

பாள். ஆர்வலர் - அன்புக்குரியவர். புன்மை+கண்+நீர்=புன்கணீர்; துன்பத்தைக் கண்ட மாத்திரத்தில் அன்புள்ளவர்களின் கண்களிலிருந்து வழியும் நீர். பூசல்+தரும்=பூசறரும்; எல்லாரும் அறிய உள்ளன்பை வெளிப்படுத்திக் காட்டும்.

6. மோப்ப - மோந்து பார்க்குங்கால். அனிச்சம் - ஒரு மலர். விருந்து - விருந்தினர். (விருந்தினர் என்போர் புதியராய் வீடுதேடி வருபவர்.)

7. இனிமை+சொல்லன்=இன்சொலன். ஒருவன்+கு+அணி=ஒருவற்கணி.

8. காலத்தினுல் - தக்க வேளையில். நன்றி - உதவி. ஞாலம் - உலகம். காலத்தை நோக்க வேண்டுமே தவிரப் பொருளையோ, உதவியின் அளவையோ நோக்கக் கூடாது என்பதாம்.

9. புண்+உள்+ஆறும்=புணுள்ளாறும். உள் - மனம். தீயினுற் சுடுவது ஆறிப் போய்விடும். அதனுல் அதனைப் 'புண்' என்ருர். நாவினுல் கூறப்படும் கொடுஞ்சொல் எப்பொழுதும் ஆருமல் நிலைத்து நிற்கும். அதனுல் அதனை 'வடு' என்ருர். தீயைவிடக் கொடியது கொடுஞ் சொல் கூறும் நா.

10. நன்றிக்கு-அறத்திற்கு. இடும்பை-துன்பம். நன்மை+ஒழுக்கம் = நல்லொழுக்கம். தீமை + ஒழுக்கம் = தீயொழுக்கம்.

11. 'பகுத்து' என்னும் சொல் 'பாத்து' என மருவி வந்துள்ளது. பாத்து + ஊண்=பாத்தூண். 'மருவியவன்' என்னும் சொல் 'மரீஇயவன்' என மருவி வந்துள்ளது. மரீஇயவன் - பயின்றவன்.

12. தன்+நெஞ்சு=தன்னெஞ்சு. நெஞ்சை ஒளித்துப் பொய் கூறமுடியாது என்பதாம்.

13. நகை - முகமலர்ச்சி. உவகை - அகமலர்ச்சி.

**சொற்பொருள் விளக்கம் :**

1. முற்ற - முழுவதும். பூண் - ஆபரணம்.
2. மெய் விதிர்ப்பார் - உடல் நடுங்குபவர். நவை - குற்றம். பூத்தல் - தோன்றல்.
3. மெலியார் - செல்வத்தில் குறைந்தவர். உடைமை - செல்வமுடைமை. கருத்து அழிக - மனம் வருந்துக. எற்றே - எத்துணையது.
4. வாய்ப்படூஉம் - வாயிலிருந்து வெளிப்படும். வெறுமை + உரை = வெற்றுரை — வீண் பேச்சு.
5. குறையிரந்து - குறைகளைக் கூறி யாசித்து.

## 5. ஏலாதி

**நூலும், நூலாசிரியரும் :**

ஏலம் + ஆதி = ஏலாதி. ஏலம், இலவங்கம், சிறு நாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் ஆறும் மருத்துவ நூலில் 'ஏலாதி' எனக் கூறப்படுகின்றன. இவை ஆறையும் கூட்டிச் செய்யப்படும் மருந்து மக்களுடைய உடற்பிணியை நீக்கும். இந்நூலில் ஒவ்வொரு செய்யுளிலும் ஆறு ஆறு நீதிகள் கூறப்பட்டுள்ளன. இவை அறியாமைப் பிணியை நீக்கும்.

இந்த நூலைப் பாடியவர் கணிமேதையார். இவர் சோதிடக் கலையில் வல்லுநர் போலும். இவர் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. அளாவல் - உள்ளங் கலந்து உரையாடுதல். ஊண் - உணவு. முருந்து - மயிலிறகின் அடிப்பகுதி. ஏய்க்கும் - போன்ற.
2. உலையான் - தளர்ச்சியடையாதவன். எள்ளான் - இகழாதவன். ஈத்து - உணவு இட்டு. ஏதம் - குற்றம். கூர்ந்து - செல்வம் மிக்கு.
3. மை ஏர் - மை தீட்டப்பெற்ற அழகு. சாயல் - நிறம்; அழகு. உணர்ந்தார் - ஆன்றோர். குறளை - கோள் சொல்லுதல். மறலை - கீழோர்.

4. சாதல் - நண்பர் இறந்தபொழுது பிரிவாற்ருமல் இறத்தல். கவறல் - கவலைப்படுதல். மென்புடையார் - மென்மைத் தன்மையுடைய புலவர்கள்.

5. காப்பு - ஆதரவு. கைத்து - பொருள். பயின்று - அளவளாவிப் பழகி.

## 6. சிறு பஞ்சமூலம்

**நூலும், நூலாசிரியரும் :**

சிறுமை+பஞ்சம்+மூலம்=சிறு பஞ்சமூலம். ஐந்து சிறு வேர்கள் என்பது இதன் பொருளாம். மருத்துவ நூலில் கண்டங் கத்தரி வேர், சிறு வழுதுணை வேர், சிறுமல்லி வேர், நெருஞ்சி வேர், பெருமல்லி வேர் என்னும் ஐந்து வேர்களும் 'பஞ்சமூலங்கள்' எனக் குறிக்கப்பட்டுள்ளன. இவற்ருலாம் மருந்து மக்களின் பிணியை நீக்குவதுபோல, இந்நூலில் அமைந்த ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்பட்டுள்ள ஐந்தைந்து நீதிகளும் உளநோய் தீர்த்து உறுதி தருவனவாகும்.

இந்த நூலின் ஆசிரியர் காரியாசான். இவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்தவர்; சமண சமயத்தைப் பின்பற்றி ஒழுகியவர்; 'மாக்காயனுர்' என்ற நல்லாசிரியரின் மாணவர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. வெளவன்மின் - கைப்பற்ருதீர். கருங்குணத்தார் - தீய குணமுடையவர். கேண்மை - நட்பு.
2. வார் சான்ற கூந்தல் - நீளமான கூந்தலையுடைய பெண்ணே. தாவா-கெடாத. ஓவாது-இடைவிடாது.
3. நீர்+அறம் = நீரறம் - தண்ணீர்ப் பந்தல் அமைத்தல். நிழல் - நிழல் தரும் மரங்களைப் பயிராக்கல்.
4. உடைபடை - பின் வாங்கிக் கலைந்தோடும் தன் பக்கத்துப் படை. குழவி பலி - குழந்தைகட்கு உணவு.
5. இல் - குடும்பம் (குடி). கருதற்பாடு - மதிக்கப்படும் செயல்கட்கு எடுத்துக்காட்டாக நிற்றல்.

# 3. கதைப் பகுதி

## 1. கம்பராமாயணம்

**நூலும், நூலாசிரியரும் :**

கம்பர் + ராம + அயனம் = கம்பராமாயணம். கம்பரால் பாடப்பெற்ற இராமனுடைய வரலாறு என்பது இதன் பொருளாம். இந் நூலுக்குக் கம்பர் சூட்டிய பெயர் 'இராமாவதாரம்'. இந்நூல் ஒரு வழிநூலாம். இதன் முதல் நூல் வான்மீகி முனிவரால் வடமொழியில் எழுதப் பெற்ற இராமாயணமாகும்.

கம்பர் சோழவள நாட்டிலுள்ள திருவழுந்தூரில், உவச்சர் குடியில், ஆதித்தனுக்கு மகனுகப் பிறந்தார். திருவெண்ணெய்நல்லூரில் வாழ்ந்த சடையப்ப முதலியார் என்ற வள்ளலாலும், குலோத்துங்கச் சோழனுலும் ஆதரித்துப் போற்றப்பெற்ருர். வைணவ சமயத்தைப் பின்பற்றி ஒழுகிய இவர் கி. பி. 12ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தார். 'கல்வியிற் பெரியர் கம்பர்', 'கவிச் சக்கரவர்த்தி கம்பர்', 'விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பர்' என்று இவர் பாராட்டப்பெறுகிருர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. நீத்தல் - கைவிட்டு விடுதல். தாதை - தந்தை.
2. ஒடுங்கினுன் - உடல் மெலிந்தான். கண்ணன் - இராமபிரான். புண்டரீகம் - தாமரை மலர்.
3. அயா உயிர்த்தல் - பெருமூச்சு விடுதல். உயாவுற - பெருக. புல்லினுன் - தழுவினுன். தயா முதல் - கருணையுடைய முழுமுதற் கடவுள்.
4. அழுங்குதல் - மூழ்கி வருந்துதல். மல் - மற்போர்.
5. அரியவன் - இராமபிரான். கரியவள் - கரிய நிறமுடைய மூதேவி (இங்குக் கைகேயிக்கு உவமை).
6. வெய்ய - கொடிய. அயில் - வேல். கறங்கு - காற்ருடி. உம்பரான் - இராமபிரான்.

7. துறையோன் - கலைக்கோட்டு முனிவர் (ரிசிய சிருங்கர்). நவை - குற்றம்.

8. திருநாடு - கோசல நாடு. தரியாது - மனம் பொறுக்காமல். தெவ்வர் - பகைவர். அடைந்த - கவர்ந்த.

9. வரதன் - வள்ளலான தசரதன். துஞ்சினுன் - இறந்தான். சரதம்-உண்மை. விரத வேடம்-தவவேடம்.

10. 'மனத்துக்கு' என்னும் சொல் 'மனக்கு' என மருவி வந்துள்ளது. நேமியான் - சக்கரப் படையுடைய தசரதன்.

11. பாவ காரி = பாவமான காரியத்தைச் செய்தவள் (கைகேயி). ஓர்கிலேன் - துணிந்தேனல்லன். யாவனுகி - எத்தன்மையனுகி. ஏறுவேன் - ஈடேறுவேன்.

13. மேவினேன் - ஏற்றேன். புலம் - அறிவு.

14. இசை - புகழ். வேய்தல் - அடையச் செய்தல். ஓவுதல் - நீங்குதல். புனைதல் - சூட்டுதல்.

15. மரபு - முறை. தரணி - நாடு. உரன் - வலிமை.

## 2. பெரிய புராணம்

**நூலும், நூலாசிரியரும் :**

பெரியர் + புராணம்=பெரிய புராணம். செயற்கரிய செயல்களைச் செய்த பெரியவர்களின் வரலாற்றை விவரித்துக் கூறும் நூலாதலின், பெரிய புராணம் என்று அழைக்கப் பெற்றது. பெருமை வாய்ந்த புராணம் ஆதலின், பெரிய புராணம் என்று பெயர் பெற்றது எனினும் பொருந்தும். இது சைவத் திருமுறைகளில் பன்னிரண்டாவதாக வைத்து மதிக்கப்படுகிறது. இந்நூல் அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரலாற்றை விளக்கிக் கூறுகிறது. இது திருத்தொண்டர் புராணம் என்றும் அழைக்கப்பெறும்.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் சேக்கிழார். இவர் தொண்டைநாட்டில் உள்ள குன்றத்தூரில் சைவ வேளாளர் மரபில் பிறந்தவர். சேக்கிழார் என்பது குடியின் பெயர். அப்பெயரே இவருக்கு வழங்கலாயிற்று. இவரின் இயற்

பெயர் அருண்மொழித்தேவர். இவர் அநபாய சோழ னிடம் முதல் அமைச்சராய் இருந்தவர். இவருடைய காலம், கி.பி. பன்னிரண்டாம் நூற்றுண்டாகும்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. மன்னி-நிலைபெற்று. மாதொருபாகர்-சிவபெருமான்.
2. வழாமல் - தவருமல். வரை - மலை. மாற்றலர் - பகை வர். திறம்பாத - மாறுபடாத. நீர்மை - தன்மை.
3. இகல் - பகைமை. ஓடை - யானையின் நெற்றிப்பட் டம். பரி - குதிரை. பரிபவம் - அவமானம்.
4. சீலம் - ஒழுக்கம். அற்றம் - தக்க சமயம்.
5. வேணி - சடை. கரந்த - மறைந்த. புத்தகக் கவளி - சுவடிக் கட்டு. மை - கருமை.
6. வன்கணுன் - கொடியவன். கோதை - மாலை. அளகம்- கூந்தல். குழை - காதணி. சோதி - ஒளி. மறுகு - வீதி.
7. இடை தெரிந்தருளவேண்டும் - சமயமறிந்து செல்ல வேண்டும். தத்தன் - மெய் காப்பாளன். துயில் - தூக்கம்.
8. உறுதி - நன்மை. புரவலன் - அரசன். மாடு - பக்கம். மன்றல்-நறுமணம். குழல்-கூந்தல்.
9. அண்டர் நாயகன் - தேவர்களுக்குத் தலைவன்.
10. மங்கலம் - நன்மை. இயம்ப - சொல்ல. கொடுவந் தேன் - கொண்டு வந்தேன்.
11. கைத்தலம் - கையிடம். பத்திரம் - வாள். பரிசு - தன்மை.
12. இறைப் பொழுது - கணப்பொழுது. சோர - வடிய. எறியல் - வெட்டல். நமர் - நம்மைச் சார்ந்தவர்.
13. வேதனை - துன்பம். தாதன் - அடிமைப்பணி புரிபவன். இடை - நடுவில்.
14. செற்றவர் - கோபம் கொண்டவர். நெறி - வழி. ஆவி - உயிர். கொற்றவர் - மன்னர்.
15. இடையூறு - துன்பம். ஐயன் - சிவபெருமான்.

## 3. திருவிளையாடற் புராணம்

**நூலும், நூலாசிரியரும் :**

சிவபெருமான் ஆலவாய்ச் சொக்கராகி மதுரை மாநகரில் செய்த அறுபத்துநான்கு திருவிளையாடல்களைக் கூறுகின்றது இந்நூல்.

இந்நூலாசிரியரான பரஞ்சோதி முனிவர் சோழவள நாட்டிலுள்ள வேதாரணியம் எனப்படும் திருமறைக் காட்டில், சைவவேளாளர்குடியிற் பிறந்தவர். இவருடைய தந்தையார் மீனுட்சிசுந்தர தேசிகர். பரஞ்சோதியார் துறவு மேற்கொண்டு மதுரையில் வாழ்ந்தவர். அங்ஙனம் வாழ்க்கையில் மதுரைநகர மக்களின் வேண்டுகோளின்படி இந்நூலைப் பாடினர் என்பர். இவர் இற்றைக்குச் சுமார் 300 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்தவர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. ஆதிசைவர் - சிவமறையோர். மாணவன் - வேதம் ஓதுதலும், விரதங்களைத் தவருது கடைப்பிடித்தலும் ஆகிய ஒழுக்க நெறியில் நிற்பவன். 'ஆச்சிரமம்' என்னும் சொல் 'ஆச்சிமம்' எனப் பாட்டில் வந்துள்ளது.
2. புது வதுவை-புதிய திருமணம். செல்லல்-வறுமை, துன்பம். பதம் - தருணம் (காலம்). ஏத்தி - துதித்து.
3. யாவையும் அறிதி - யாவற்றையும் அறிவாயல்லவா? இறைவன் முற்றும் உணர்ந்தவன் என்பதை இதனுல் விளக்குகிருர் ஆசிரியர்.
4. தென்னவன் - பாண்டியன். இன்னல் - துன்பம். சோமசுந்தரக் கடவுள் தருமிக்கு எழுதியளித்த பாடல் பின்வருமாறு :

> '' கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
> காமம் செப்பாது கண்டது மொழிமோ
> பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
> செறியெயிற் றரிவை கூந்தலின்
> நறியவு முளவோ நீயறியும் பூவே.''

இப்பாடலின் பொருள் : 'மலர்களிலுள்ள தேனை ஆராய்ந்து திரிகின்ற வாழ்க்கையையும், அழகிய சிறகினையுமுடைய வண்டே! பயிற்சிமிகுந்த நட்பும், மயிலைப் போன்ற சாயலும், நெருங்கிய பற்களுமுடைய இந்தப் பெண்ணின் கூந்தலைப்போல நறுமணமுடைய ஒன்று நீ ஆராய்ந்தறியும் பூக்களில் உள்ளதோ? நீ என்னிடம் கொண்டுள்ள விருப்பத்திற்காகக் கூறாமல் உண்மையைக் கூறுவாய்.'

5. பொன் + தனி + சடை = பொற்றனிச் சடை. புவனம் - உலகம். கழகம் - தமிழ்ச் சங்கம்.

6. வல்லை - விரைந்து. வாசியா - வாசித்து.

7. சிரம் துளக்கி - தலையசைத்து ஏற்றுக்கொண்டு. மீன வன் - மீனக் கொடியையுடைய பாண்டியன். மகிழ்ச்சி தூங்கினான் - மகிழ்வடைந்தான். கேள்வியார் - நூற் கேள்வியுடைய புலவர்கள்.

8. புணர்ந்த - பொருந்திய. தமிழ் - தமிழ்ப் பாடல். மணந்த தார் - மணம் வீசும் மாலை.

9. விபுதர் - சங்கப் புலவர். புறம்பு - வெளியில். தூங் கிய - தொங்கிய. கிழி - முடிப்பு. நம்பி - தருமி. நேர்ந்து - எதிர்த்து. கீரன் - நக்கீரன்.

10. கற்றிலான் - தமிழ்ப்புலமை இல்லாதவனான தருமி. கலம் - உண்கலம். வாடினான் பண்பு - வருந்துபவ னுடைய தன்மை.

11. ஒதுங்கி-நடந்து. கழல் - திருவடி. மலர்ந்த - திருவாய் மலர்ந்தருளிய. அலந்த சிந்தை - வாடிய மனம்.

12. உளப் பையுள் - உள்ளத்தில் கவலை. பனவன் - சிவ மறையோனாகிய தருமி. மையுண் கண்டன் - நீலகண் டன். வழுவு பாடல் - குற்றமுள்ள பாடல். கையுள் - கையில்.

13. பிணிப்ப - கட்டிவருத்த. பேசிலேன் - குறை கூறி லேன். கறைகெழு மிடறு - நஞ்சுக் கறை பொருந்திய கழுத்து. சில் = சில.

14. சைவச் சிறுவன் - ஆதிசைவப் பிரமசாரியான தருமி. பந்தம் - உறவு. பனுவல் - பாடல். பயன் - வேதத்தின் பயன். சுந்தர விடங்கன் - சோமசுந்தரக் கடவுள்.

15. ஆர் அவை - நிறைந்த சபை. கிளத்தினேன் - குற்றங் கூறினேன். சீர் அணி - புகழ் வாய்ந்த. தேராக் கீரன் - பொருளிலக்கணம் முழுமையையும் அறியாத நக்கீரன்.

16. பொன் குற்ற வேணி - பொன்னின் அழகைப் பறித்த (வென்ற) சடை. குற்றல் - பறித்தல். அல் குற்ற - இருளைப் பறித்த (இருளை வென்ற). குழல் - மகளிர் கூந்தல். நாற்றம் - மணம்.

17. பரவி - துதித்து. நீர் - கங்கை. பாகம் - இடப் பாகம். இரவின் ஈர்ங்குழல் - இருளைப் போன்று கரிய குளிர்ந்த கூந்தல். வெருவுதல் - அஞ்சுதல். சலம் - பொய்.

18. வார் சடை - நீண்ட சடாமுடி. நெற்றிக் கண் - தீவிழி. பற்றுவான் - தீயினுல் பற்றப் படுபவனுகிய நக்கீரன். உம்பரார் பதி - தேவேந்திரன். ஆகம் - உடல்.

## 4. சீருப் புராணம்

**நூலும், நூலாசிரியரும் :**

சீரு + புராணம்=சீருப்புராணம். சீறத் என்பது அரபு மொழிச் சொல். இது தமிழில் சீரு என வழங்கப்படுகிறது. பெரியோருடைய புகழ் என்பது இச் சொல்லின் பொருளாகும். இஸ்லாமிய மதத் தலைவராகிய மகமது நபியின் வரலாற்றைக் கூறுவதால் இந்த நூல் ‘சீருப் புராணம்” எனப் பெயர் பெற்றது.

இந் நூலைப் பாடிய ஆசிரியர் உமறுப் புலவர். இவர் இராமநாதபுரம் மாவட்டத்தில் கீழக்கரை எனுமூரையடுத்துள்ள சிற்றூரில் சேகு முதலியாருக்கு மகனுகப் பிறந்தார். கடிகை முத்துப் புலவர் என்பவருடைய மாணுக்கர் இவர். தம் குருவுக்குப் பின் எட்டையபுர அவைக்களப் புலவராய் அணிசெய்தவர். சீதக்காதி வள்ளலின் அமைச்சரான

அப்துல் காசிம் இவரை ஆதரித்துப் போற்றியுள்ளார். இவர் கி.பி. 17ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்.

**சொற்பொருள் விளக்கம் :**

1. மேனி - உடல். வியப்பு - விந்தை. மான்மதம் - கத்தூரி. வடிந்த - முழந்தாள் வரை நீண்டுவளர்ந்த. நிறைமதி - முழுமதி. தோய்தரா - படியாத. காரணீகம் - நடுநிலைத்தன்மை.
2. மாசு - குற்றம். நவிற்றும் - சொல்கின்ற. இன்னன - இப்படிப்பட்ட.
3. நமர் - நம்முடைய உறவினர். அணித்து - சமீபத்தில்.
4. குருதி - இரத்தம். குவலயம் - உலகம். செரு - போர்.
5. பொருள் + தொகை = பொருட்டொகை. மல்லுடை - வளமுடைய. புயம் - தோள். திறல் - ஆற்றல். இசைத்திட்டார் - கூறினர். நும்வயின் - நும்மிடம்.
6. நேமி வானவர் - வட்டவடிவமான வானுலகத்திலுள்ள தேவர்கள். திரை - அலைகளையுடைய கடல்.
7. மை - கருமேகம். புகுத - புகுந்தருள. பேறு - பயன். முகமன் - உபசாரமொழி.
8. செறித்த - (கல்லைத் தாங்கும்படி) செருகிவைத்த. வரைப் புயம் - மலை போன்ற தோள். தாங்கல் - கல் வைக்கப்பட்டிருந்த இடம்.
9. தடம் புயம் - பெரிய தோள். வலித்து - இழுத்து. அறச் சலித்து-முழுவதும் தளர்ச்சியடைந்து. உழலல்- வருந்துதல். உரம் - வன்மை. அதரம் - உதடு.
10. மா - பெரிய. நேரலர் - பகைவர். சமைந்திடும் - உண்டாகும்.
11. புன்மை + மனம் = புன்மனம் - கீழான மனம். தீவினைப் பயிர் - பாவம் என்னும் பயிர். நினைத்தவர் - யூதர்கள்.
12. அரிதின் + நீட்டியே - அரிதினீட்டியே.

13. மலர்க் கரம் - மலர்போன்ற கை. இணையடி - இரு பாதங்கள். இன்னல் - துன்பம். தன்னை - என்னை. தாழ்ந்தான் - வணங்கினான்.

## 5. தேம்பாவணி

நூலும், நூலாசிரியரும் :

தேம்பாத + அணி = தேம்பாவணி; மங்காத மலர்மாலை என்பது இதன் பொருளாம். இந்நூல் கிறித்தவ மதக் காப்பியமாகும். சூதேய நாட்டிற் பிறந்து புகழ்பெற்ற வளன் என்னும் சூசையப்பரின் பெருமையையும், ஏசு நாதருடைய வரலாற்றுச் சிறப்பினையும் விவரிக்கிறது இந் நூல். (நூலாசிரியர் பற்றிய குறிப்பு வாழ்த்துப் பகுதிக் குறிப்புரையில் உள்ளது.)

சொற்பொருள் விளக்கம் :

1. இரிந்தபின் - நீங்கியபின். முரண்செய - போரிட. துன்ன ஆசை - பின்தொடரும் விருப்பம். அறைதல் - சொல்லுதல். (சொன்னவர் உடன் பிறந்தோர்.)
2. கிளர்திறம் - தூண்டும் தன்மையால். ஈட்டல் - மூட்டு தல். வல் கடவுள் - வல்ல கடவுள். வேட்டல் - விரும் புதல். விளிதல் - இறத்தல்.
3. கைவயம் - கைவலிமை. பொய்வயம் - பொய்வலிமை. புகைந்த - கூறிய. வயம் - வலிமை.
4. அண்ணல் - அரசன் சவூல். சேடன் - சிறுவன். பொன்ற - அழிய. பொருப்பு - மலை. திண்மையான் - வலிமை படைத்த அரக்கன். எவன் - எம்மாத்திரம்.
5. ஏந்தல் - அரசன். இளவல் - தாவீது. கடுத்த - கொடிய. பவம் - பாவம். வேய்ந்தது - அமைந்தது. மறுத்தனை - மறுத்தவனை.
6. திறம் கடுத்த - விரைந்துவந்த. உளியம் - கரடி. மறம் - வீரம். அதிர் வல்லியம் - ஆர்ப்பரிக்கும் புலி. கறங்கு அடுத்த கால் - சுழல் காற்று.
7. ஆண்மை - வீரம். விரி அளாவு ஒளி - பரவி அளாவிய சுடர். ஆய்முறை - பயிற்சி.

8. சிலை - வில். இரிந்த - விரைந்து சென்ற. பிரிந்த கால் - சென்றபோது. ஆர்த்தார் - ஆரவாரம் செய்தனர்.

9. ஓதை - ஓசை. முகில் - மேகம். பேர்த்த - உண்டான.

10. மதம் பொழி கரி - மதநீர் பெருகிப் பாயும் ஆண்யானை. கதம் - கோபம். வாய்பிளந்து உயிர்ப்பிட - வாயைத் திறந்து ஊத. நுண் தூள் - மென்மையான புழுதி.

11. எல்வை - காலம். வல்கை - வலிய துணை. ஒல் - விரைவாக. எனு - என்று. மாய்த்தல் - இறத்தல். புட்கு - பறவைகட்கு. இளையோன் - தாவீது.

12. ஏற்றும் - செலுத்தும். செல் - மேகம். சிலை - வில்லினின்று பாய்ந்த கவண்கல். எல்லை - கதிரவன். இரிந்தென - நீங்கினுற்போல.

13. கடையுகம் - ஊழிக் காலம். உரும் - இடி. பார் - நிலம். புடையகம் - இடுப்பு. உரம் - வலிமை.

14. கார் - மேகம். அசனி - இடி. இளவல் - இளைஞனை தாவீது. நாம வேல் - அச்சந்தரும் வேல். எஞ்ஞான்றும்—எப்பொழுதும்.

## 4. பல்சுவைப் பகுதி

### 1. வருணனை

1. இப்பாடல் சூளாமணியிலிருந்து எடுக்கப்பெற்றதாகும். சூளாமணியின் ஆசிரியர் தோலாமொழித் தேவர். இவர் கி. பி. 10 ஆம் நூற்ருண்டினர்.

குலவி - விளங்கி. மிளிர்தல் - விளங்குதல். செவ்வண்ணம் - சிவந்த நிறம். சிறை - சிறகு. கா - சோலை. தண்ணுர் - குளிர்ச்சி பொருந்திய. கண் விழிக்கும் - மலரும்.

2. இப்பாடல் 'வீர சோழியம்' என்னும் இலக்கண நூலில் உதாரணப் பாடலாகக் காணப்படுகிறது. வீரசோழியத்தைப் பாடியவர் புத்தமித்திரனுர். இவர் கி. பி. 11ஆம் நூற்ருண்டினர்.

எழினி - திரைச் சீலை. விசும்பு - ஆகாயம். முழவம் - மத்தளம். ஆர்த்தல் - ஒலித்தல். கதிர் - கிரணங்கள். வட்

டித்து - சுழற்றி. எரி கதிர் - ஒளி வீசும் கதிரவன். போந்தான் - தோன்றினன்.

3. இப்பாடல் 'குற்றாலக் குறவஞ்சி'யிலிருந்து எடுக்கப் பெற்றது. இந்நூலின் ஆசிரியர் திரிகூட ராசப்பக் கவிராயர். இவர் கி. பி. 18ஆம் நூற்றாண்டினர்.

மணி - மாணிக்கம். தும்பி - யானை. கவளம் - சோற்றுருண்டை. சாடு புனம் - அழிக்கும் காடு. வரை ஆடு - மலை ஆடு. நிரை - கூட்டம். பலவு - குறும்பலா மரம். கிரி - மலை.

4. இப்பாடல் கம்பராமாயணத்திலிருந்து எடுக்கப் பெற்றது. மருதநில வளம் இப்பாடலில் சிறப்பிக்கப் பெற்றுள்ளது.

சேல்-கெண்டை மீன். ஒண் க(ண்)ணார்-ஒளி படைத்த கண்களையுடைய மகளிர். மால் - பெருமை. நளினம் - தாமரை. பள்ளி - படுக்கை. மழலைப் பிள்ளை - இளங் குஞ்சு. சேறு உண்ட கால் - சேறு படிந்த கால். மேதி - எருமை. உள்ளி - நினைத்து. சோர்ந்த - வழிந்த. தேரை - தவளை. பண்ணை - வயல்.

5. இப்பகுதி 'பட்டினப்பாலை' என்னும் நூலினின்று எடுக்கப்பெற்றுள்ளது. இந்நூலைப் பாடியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இவர் கடைச்சங்க காலத்தவர்.

நீர் - கடல். நிமிர் பரிப் புரவி - உயர்ந்து விரைந்து செல்லும் குதிரை. கால் - வண்டி. கறி மூடை - மிளகு மூட்டை. வடமலை - இமய மலை. குடமலை - மேற்கே உள்ள மலை (பொதிய மலை). ஆரம் - சந்தனம். குண கடல் - கீழைக் கடல். துகிர் - பவளம். வாரி - வளமான பொருள். ஈழம் - இலங்கை. காழகம் - கடாரம். ஆக்கம் - நுகரப்படும் பொருள். நெரிய - நெருங்கி. தலைமயங்கிய - கலந்து நிறைந்த. நனந்தலை - அகன்ற இடம். மறுகு - வீதி.

## 2. சீட்டுக் கவி

சீட்டுக் கவி என்பது கடிதம் போல் பனையோலைச் சீட்டில் எழுதியனுப்பப்படும் பாடலாகும்.

இப்பாடலைப் பாடியவர் அந்தகக் கவி வீரராகவர். இவர் பூதூர் என்னுமிடத்திற் பிறந்தவர்; பிறவிக் குருடர்; கி. பி. 17ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்.

அனந்தபுரத்து அரசன் சந்திரவாணனின் வேண்டுகோட் படி இவர் அம்மன்னன்மீது ஒரு கோவைநூல் பாடி முடித் தார். அச்செய்தியை அம்மன்னனுக்கு உணர்த்த எழுதி அனுப்பிய சீட்டுக் கவிப் பாடலே இது.

மின்னுதல் - ஒளி வீசுதல். அனந்தை - அனந்தபுரம். அதிபதி - தலைவன். உன்னுதல் - எண்ணுதல். திறை - கப் பம். கடிது - விரைவாக.

## 3. இரட்டுற மொழிதல்

இரு பொருள்கள் தோன்றுமாறு சொல்லையேனும், தொடரையேனும் அமைத்துப் பேசுவதோ அல்லது பாடு வதோ இரட்டுற மொழிதல் அல்லது சிலேடை எனப்படும்.

பாடப் பகுதிப் பாடல்களைப் பாடியவர் காளமேகப் புலவர்; கி. பி. 15ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்.

1. இப்பாடல் வைக்கோலுக்கும், யானைக்கும் சிலேடை யாகப் பாடப்பட்டுள்ளது.

களம் - நெற்களம், போர்க்களம். கோட்டை - நெற் கோட்டை, கோட்டை மதில். போர் - வைக்கோற்போர், சண்டை. செக்கோலம் - செம்மையும், அழகும் வாய்ந்த உடல். வரை - மலை. மால் - கரிய, பெரிய.

2. இப்பாடல் பாம்புக்கும், வாழைப் பழத்திற்கும் சிலேடையாகப் பாடப்பட்டுள்ளது.

நஞ்சிருக்கும் - விடத்தைப் பெற்றிருக்கும், நைந்து போயிருக்கும். தோல் - பாம்புச் சட்டை, பழத்தோல். நாதர் முடிமேல் இருக்கும் - சிவபிரான் தலையில் அணிகல ஞக விளங்கும், பஞ்சாமிர்தமாகச் செய்யப்பட்டு முடிமீது அபிடேகம் செய்யப்படும். வெஞ்சினம் - கொடுங் கோபம், கறிவகை. மீளாது - உயிர் பிழைக்காது, மீண்டு வெளி வராது. தேம் - தேன்.

## 4. சிற்றிலக்கியங்கள்

*1.* **பரணி :** ஆயிரம் யானைகளைப் போரில் வெற்றி கொண்ட பெருவீரன்மீது பாடப்படும் பிரபந்தம். பாடப் பகுதிப் பாடல்கள் கலிங்கத்துப் பரணியிலிருந்து எடுக்கப் பெற்றவை. இந்நூல் குலோத்துங்கச்சோழன் கலிங்க நாட்டை வென்றதைப் பாராட்டிச் செயங்கொண்டாரால் பாடப்பட்டது. இவர் கி. பி. **12**ஆம் நூற்றாண்டினர்.

கலக்கல் கொல் - கலக்குவதோ. கடுவிடம் - கொடிய நஞ்சு. பொறி - புள்ளி. பணம் - படம். பணி - ஆதிசேடன். பிடர் - கழுத்து. பிரளயம் - வெள்ளம். நினைப்பு - நோக்கம்.

பார் - பூமி. செறுத்தவர் - சினத்துடன் போரிடும் வீரர். நிற்பிடம்—நிற்றலுக்கு உரிய இடம். நெடு விசும்பு - பரந்த ஆகாயம்.

*2.* **கலம்பகம் :** இந்நூல் பலவகைப் பாக்களால் அந்தாதித் தொடை அமையப் பாடப்படும். பாடப் பகுதிப் பாடல் திருவெங்கைக் கலம்பகத்திலிருந்து எடுக்கப் பெற்றுளது. திருவெங்கை, திருச்சிராப்பள்ளி மாவட்டத்தி லுள்ளதோர் ஊர். இக்கலம்பகத்தைப் பாடியவர் சிவப் பிரகாச சுவாமிகள்.

மனைவியை விற்றவன் - அரிச்சந்திரன். கலை - ஆடை. அழவிட்டவன் - நளன். சிறைப்புக விட்டவன் - இராமன். துகில் - ஆடை. விழித்தவர் - பாண்டவர். தாரம் - மனைவி. விமலர் - சிவபெருமான். மிச்சில் - எச்சில். மிசை தல் - உண்டல். மிச்சில் உண்டது - கண்ணப்பர் கொடுத்த ஊனை உண்ட நிகழ்ச்சி. ஈந்தனம் - கொடுத்தோம்.

*3.* **பிள்ளைத் தமிழ் :** இதனைப் 'பிள்ளைக் கவி' எனவும் கூறுவர். கடவுள், அரசர், வள்ளல், புலவர் முதலியோருள் யாரேனும் ஒருவரைக் குழந்தையாகப் பாவித்து, அந்தக் குழந்தைகட்குரிய செயல்களைப் பத்துப் பருவங்களாக அமைத்துப் பாடப்படுவது.

பாடப்பகுதி முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழி லிருந்து எடுக்கப்பெற்ற பாடலாகும். இந்நூலைப் பாடியவர் குமர குருபர சுவாமிகள் ; கி. பி. **17**ஆம் நூற்றாண்டினர்.

மென்மை + இதழ்—மெல்லிதழ் - மென்மையான உதடுகள். புலர்தல் - காய்தல். கம்முதல் - ஒலி குறைதல். அஞ்சனம் - கண் மை. நுண் + துளி = நுண்டுளி. கண் மலர் - கண்ணாகிய மலர். கலுழ்தல் - சிந்துதல். கலுழி - வெள்ளம். கரு வடிவு - கரிய வடிவம். மணி - அழகிய. ஒண் - ஒளிபொருந்திய. வயித்திநாதபுரி - வைத்தீச்சுரன் கோவில்.

**4. பள்ளு:** பள்ளர் எனப்படும் உழவர்குடிமக்களின் வாழ்க்கையைப்பற்றிப் பாடப்படும் பிரபந்தம். பாடப் பகுதிப் பாடல் முக்கூடற் பள்ளு என்னும் நூலிலிருந்து எடுக்கப்பெற்றுள்ளது.

முக்கூடற்பள்ளு :— முக்கூடல் என்னும் ஊர் நெல்லை மாவட்டத்தில் பொருநை ஆற்றின் வடகரையில் உள்ளது. தற்பொழுது 'சீவலப் பேரி' என வழங்கப்படுகிறது. முக்கூடற் பள்ளு என்னும் நூல் கூடலழகர்க்குரிய பண்ணையில் பணிபுரியும் பள்ளர்களைப் பற்றிப் பாடப்பட்டுள்ளது. 'என்னயினாப் புலவர்' என்பவர் இதனைப் பாடியதாகக் கூறுகின்றனர். இவர் கி. பி. 17ஆம் நூற்றாண்டிலிருந்தவர்.

மெத்த - மிகவும். வாசவன் - இந்திரன். வாசவன் கை வில் - இந்திர தனுசு (வானவில்). கொண்டல் - மேகம். திக்கு - திசை. ஏகபோகம் - தனிப்பட்ட உரிமை.

**5. அந்தாதி :** ஒரு பாட்டின் அந்தத்தை, அடுத்த பாட்டின் ஆதியாக அமைத்துப் பாடப்படும் நூல். பாடப் பகுதிப் பாடல் திருக்கருவை பதிற்றுப்பத்தந்தாதியிலிருந்து எடுக்கப்பெற்றது. இந்நூலைப் பாடியவர் அதிவீர ராம பாண்டியர். இவர் கி. பி. 16ஆம் நூற்றாண்டினர்.

மறைகள் - வேதங்கள். தனி முதல் - முழுமுதற் கடவுள். அண்டர் - தேவர். தெள் + திரை = தெண்டிரை - தெளிந்த அலை. வளாகம் - கடலால் சூழப்பட்ட உலகம். களா - களா (தல விருட்சம்) மரத்தடி. கருவை - கரிவலம் வந்த நல்லூர்.

## 5. வழிபாட்டுப் பாடல்கள்

**1.** இப்பாடல் 'கந்தர் அநுபூதி' என்னும் நூலில் உள்ளது. இந்நூலைப் பாடியவர் அருணகிரிநாதர். திருப்புகழ் பாடிய பெரியார் இவர்.

அரு - உருவமற்றது. உளதாய் - உள்பொருளாய். இல தாய் - இல்பொருளாய். மரு - மலரின் மணம். கரு - உடல்.

2. இப்பாடல் 'அபிராமி அந்தாதி' என்னும் நூலில் உள்ளது. இந்நூலைப் பாடியவர் திருக்கடவூரில் வாழ்ந்த அபிராமி பட்டர். இவர் தஞ்சையையாண்ட சரபோஜி மன்னரின் காலத்தில் இருந்தவர்.

தனம் - செல்வம். இனம் - சேர்ந்து பழகும் கூட்டம். கனம் - மேகம். குழலாள் - கூந்தலையுடையாள்.

3. இப்பாடல் 'சகல கலாவல்லி மாலை' என்னும் நூலில் உள்ளது. இந்நூலைப் பாடியவர் குமரகுருபர சுவாமிகள். இவர் காசிக்குச் சென்று மகமதிய மன்னனிடம் அவனுடைய தாய்மொழியில் பேச முடியாமல் வருந்திக் கலைமகளைக் குறித்து இந்நூலைப் பாடி அம்மொழியிற் பேசும் திறமை பெற்றுர் என்பர்.

பண் - பாடல். படைப்போன் - பிரமன். சகல கலா வல்லி - எல்லாக் கலைகளுக்கும் தலைவியாகிய கொடி போன்ற கலைமகள்.

4. இப்பாடல் 'இரட்சணிய யாத்திரிகம்' என்னும் நூலில் உள்ளது. இந்நூலைப் பாடியவர் பாளையங்கோட்டை யில் வாழ்ந்திருந்த எச். ஏ. கிருட்டின பிள்ளையாவார். இக் கிறித்துவமதக் கவிஞர் கி. பி. 19ஆம் நூற்றுண்டினர்.

ஊனம் - குறை. தீன ரட்சகன் - ஏழைகட்கு இரங்கிப் பாதுகாப்பவன். பதம் - திருவடி.

5. இப்பாடல் 'அருள் வேட்டல்' என்னும் பாடற் பகுதியில் உள்ளது. இதனைப் பாடியவர் திரு. வி. க. அவர் கள். இவருடைய காலம் கி. பி. 1883 - 1953.

தரை - உலகம். பொதுமை - பொது நோக்கம். மல் குதல் - நிறைதல். நேயம் - அன்பு. கரவு - வஞ்சகம். மறை - வேத நூல் (குர்ஆன்).

---

# 1. தமிழ்த் திலகம்

உலகில் வாழவேண்டிய முறைகளை நன்கறிந்து வாழ்பவரைச் சான்ருேர் எனக் கூறுவர். அத்தகைய சான்ருேருள் ஒருவர் திருவாரூர் கலியாண சுந்தரனுர். இவரைத் தமிழ் மக்கள் அனைவரும் திரு. வி. க. அவர்கள் எனப் பெருமதிப்புடன் குறிப்பிடுகின்றனர். இப் பெரியார் தமிழ் மொழிக்கும், தமிழ் நாட்டுக்கும் செய்துள்ள தொண்டுகள் மிகப் பலவாகும். தொழிலாளர்களின் நல்வாழ்வுக்காக இவர் பெரிதும் பாடுபட்டுள்ளார். உழைப்புக்கும், நேர்மைக்கும் எடுத்துக் காட்டாக இவர் விளங்கினுர். தமிழ்ப் புலமையில் வல்ல இவர் 'எம்மதமும் சம்மதம்' எனக் கொண்டு வாழ்ந்து வந்தார். உயிரைவிட மேலானதாக மதிக்கப் பெறும் ஒழுக்கத்திற் சிறந்த உத்தமராக இவர் திகழ்ந்தார். இச்சான்ருேருடைய வரலாறு நமக்கு வழிகாட்டியாக இருக்கிறது.

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாரூர், கலியாண சுந்தரனுரின் முன்னேர்கள் வாழ்ந்த இடமாகும். கலியாண சுந்தரனுரின் பாட்டனுரான வேங்கடாசலனுர் தமிழறிவோடு ஆங்கிலப் பயிற்சியும் பெற்றிருந்தார். இவர் பெற்ற ஆங்கில அறிவின் பயனுகச் சென்னையில் கம்பெனி ஒன்றில் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. இவர் இராயப்பேட்டையில் தங்கி வசித்து வந்தார். இவருடைய இரு பிள்ளைகளில் ஒருவர் விருத்தாசலனுர். விருத்தாசலனுர் சென்னையில் அரிசி மண்டி ஒன்று வைத்து வாழ்க்கை நடத்திவந்தார். இசையிலும் நாடகத்திலும் இவருக்கு மிகுந்த பற்று உண்டு. தாமே பாடல்கள் இயற்றும் வன்மை

யும் இவரிடம் இருந்தது. இவர் தம் வாழ்க்கையை நன்முறையில் நடத்தி வருகையில், இவருடைய மனைவியார் காலமானார். பின் சின்னாட்களில் உற வினரின் வற்புறுத்தலுக்கிணங்கிச் சின்னம்மாள் என் பவரை மணந்துகொண்டார். தாம் நடத்திவந்த தொழிலைத் தம் மூத்த மனைவியின் மகனாரான சதா சிவனாரிடம் ஒப்படைத்துவிட்டு, விருத்தாசலனார் பூவிருந்தவல்லிக்கு அருகே உள்ள துள்ளம் என்னும் கிராமத்திற்குச் சென்று, அங்கே சிறிய கடையொன்று வைத்துக் குடும்பத்தை நடத்திவரலானார். இக் கிராமத்தில்தான் 26—8—1883 அன்று கலியாண சுந்தரனார் பிறந்தார். 'சின்னசாமி' எனச் செல்லப் பெயரிட்டு இவரை யாவரும் அழைத்து வந்தனர்.

கலியாண சுந்தரனார் தம் இளமைப் பருவத்தில் எல்லையிலாக் குறும்புகளைச் செய்தார். அஞ்சா நெஞ்சமும், அசைக்கமுடியாத மன உறுதியும் இவரிடம் இருந்தன. சுறுசுறுப்பும், துடிதுடிப்பும் இவருடைய இளமைக்கு மெருகிட்டன. மனத்தில் எதனை எண்ணுகிறாரோ அதனை உடனே எங்ஙன மேனும் செய்து முடிப்பார். பசு மேய்த்தல், நாய் வளர்த்தல், கால்பந்து ஆடல், புள் ஆட்டம், சடுகுடு, கிளித் தட்டு, கத்தி சுழற்றல், மற்போர் செய்தல், உப்புக் குந்தம், தண்டால் செய்தல் முதலியவற்றில் இவருக்கு இணை இவரே எனலாம். இளம் பருவத்தில் இவற்றால் இவர் அடைந்த இன்னல்களும், காயங் களும் பலவாகும். ஆயினும், இவர் அவற்றைச் சிறி தேனும் பொருட்படுத்தமாட்டார்.

குறும்புகளிலும், விளையாட்டுக்களிலும் ஈடுபட்ட போதிலும் உரிய பருவத்தில் பள்ளியில் சேர்க்கப்

பெற்றமையால் இவர் தவருமல் பள்ளிக்குச் சென்று வந்தார்; வகுப்பிலும் முதல்வராக இருந்து வந்தார்.

தம் மக்களின் உயர்நிலைக் கல்விக்காக விருத்தா சலனுர் மீண்டும் இராயப்பேட்டையில் குடியேறினர். இராயப்பேட்டையிலிருந்த ஆரம்பப் பள்ளியில் கலியாண சுந்தரனுர் சேர்க்கப்பெற்ருர். அப்பள்ளிக் கல்வி முடிவுக்குப்பின் 1894ஆம் ஆண்டில் வெஸ்லி கலாசாலைப் பள்ளியில் சேர்க்கப்பெற்ருர் இவர். வெஸ்லி கலாசாலைப் பள்ளியில் படித்து வருங்கால் இவர் உடல் விகாரமாகப் பருக்கத் தொடங்கவே இவருடைய தந்தையார் நாட்டு வைத்தியர் ஒருவரைக் கொண்டு பருமனைக் குறைக்க மருந்து கொடுத்துவரச் செய்தார். வைத்தியர் கொடுத்துவந்த மருந்தும், மருந்துண்பதற்கு வைத்த உணவுக் கட்டுப்பாடும் பிள்ளைப் பிராயத்துக்கு ஏற்றனவாக இல்லை. ஆயினும் சுந்தரனுர் மிகவும் பொறுமையுடன் மருந்துண்டு வந்தார். இங்ஙனம் மருந்துண்டு வருகையில் ஒரு நாள் பள்ளித் தோழர்களுடன் மகிழ்ச்சியாக இருக்கும் வேளையில் அவர்கள் வாங்கித் தின்ற வடையில் தாமும் பங்குபெற்று உண்டார். மகிழ்ச்சியின் எல்லையில் கவனக் குறைவாகச் சுந்தரனுர் செய்த அத்தவறு அவரை நன்கு தண்டித்துவிட்டது. அன்று மாலைக் குள்ளாகவே அவருடைய கை கால்கள் முடங்கிவிட் டன; இரண்டாண்டுகள் பள்ளிப் படிப்புக்குத் தடையும் ஏற்பட்டது.

முடக்கு நோயிலிருந்து குணமடைந்தபின் சுந்தர னுர் மீண்டும் பள்ளிப் படிப்பைத் தொடர்ந்தார். பள்ளியில் எல்லாப் பாடங்களிலும் முதல்வராக விளங் கினர். இவர் பெற்ற பரிசுகளும், பதக்கங்களும்,

பாராட்டிதழ்களும் கணக்கிலடங்கா. அறிவுடை ஒரு வரை அனைவரும் விரும்புவர்; போற்றுவர். சுந்தர ஞர் தலையாய மாணவராய்க் கல்வியறிவு, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, பிறர்க்கு உதவும் பெருந்தன்மை, கூட்டுணர்ச்சி முதலிய நற்பண்புகளைப் பெற்றிருந்த மையால் யாவருக்கும் நல்லவராய், வழிகாட்டியாய் விளங்கினர். இவரை நேசித்த ஆசிரியர்கள் பலர். இவரால் நேசிக்கப்பெற்ற ஆசிரியர்களும் பலராவர். அவர்களுள், முன்னறி தெய்வங்களில் முதல் தெய்வ மாம் அன்னையார் கற்றுக்கொடுத்த அருந்தமிழைப் போதிக்கும் ஆசானிடம் பெருமதிப்புக் கொண்டிருந் தார். தமிழ்ச் சுவையூட்டிய கதிரைவேலரிடம் ஓய்வுக் காலங்களிற் சென்று பல தமிழ் நூல்களைப் பாடங் கேட்டு வந்தார். தக்க சான்றோர்களை அணுகிச் சமயத் தொடர்பான நூல்களையும் பாடங் கேட்டு வந்தார். இவற்றுடன் 'புக்கீப்பிங்'கும் பயின்று நன்முறையில் தேர்ச்சிபெற்ருர். இங்ஙனமாகச் சுந்தர ஞர் கிடைத்தற்கரிய கல்விப் பருவத்தைப் பயனுடைய பருவமாக்கிக் கொண்டார்.

சுந்தரனுர் காளைப்பருவம் அடைந்ததும் இவ ருடைய தந்தையார் காலமாகிவிட்டார். ஆதலால் குடும்பத்தைக் காக்கவேண்டிய பொறுப்பில் இவருக் கும் பங்கு ஏற்பட்டது. இவருடைய தமையன்மார்கள் ஈட்டிவந்த வருவாய் குடும்பத்திற்குப் போதியதாக இல்லை. ஆதலால் உடன்பிறந்தோர் தடுத்தும் கேளா மல் இளவயதிலேயே வேலைதேடத் தொடங்கினர். பின்னி கம்பெனியில் சின்னுட்கள் பணியாற்றியபின், ஸ்பென்சர் கம்பெனியில் சேர்ந்து பணியாற்றி வரலா ஞர். இங்ஙனமிருக்கையில் மக்களிடையே உரிமை

வேட்கை அதிகரிக்கவே ஆட்சியாளராக அப்பொழு திருந்த ஆங்கிலேய அரசாங்கத்தார் அடக்குமுறை களை மேற்கொண்டனர்; தேசபக்தர்கட்குக் கடுமை யாகத் தண்டனைகளையும் வழங்கினர். நாட்டுப்பற்று மிக்கவரான சுந்தரனார் அச்செயல்களைக் கண்டு உள் ளம் வருந்தினார். தாம் அலுவலாற்றிவந்த அந்நியர் களால் நடத்தப்பட்ட அந்தக் கம்பெனியினின்றும் வெளியேறினார்.

பின் தம் தமையனார் நடத்தி வந்த 'உமாபதி குருப்பிரகாசம்' அச்சுக்கூடத்தில் சில திங்கட்கள் வேலைசெய்து திருமந்திரம் என்னும் நூலைப் பதிப்பித்து வெளியிட்டார். தம்முடன் பயின்ற டேனியல் சிங் என்பவரின் உதவியால் இவருக்குத் தாம் படித்த பள்ளியிலேயே தமிழ் ஆசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பு ஏற்பட்டது. சுந்தரனார் அவ்வாய்ப்பை நன்கு பயன்படுத்திக்கொண்டார். தம் போதனைத் திறமை, தமிழறிவு, மாணவரை எளிதில் கவரும் சக்தி இனிய குணம், நல்லொழுக்கம் முதலியவற்றால் பலரும் பாராட்டப் பணியாற்றி வந்தார் சுந்தரனார்.

இந்நிலையில் நாட்டுப்பணியாம் நற்பணியில் இவருடைய உள்ளம் நாட்டங் கொண்டது. அதனால் ஆசிரியப்பணியினின்றும் விலகிக்கொண்டு, 'தேச பக்தன்' என்னும் செய்தித்தாளின் ஆசிரியரானார். உறங்கிக் கிடந்த மக்களின் உள்ளத்தில் தேசீய உணர்ச்சியும், தாய்மொழிப் பற்றும் நிலைபெறுமாறு அச்செய்தித்தாளில் பல கட்டுரைகளை வெளியிட் டார். தமிழகத்தில் தமிழ்மொழியிலேயே அனைத்தும் நடைபெறவேண்டும் என்பதற்கு அடிகோலினார். தூய தமிழில் எழுதவேண்டும், பேசவேண்டும் என்ற

எண்ணத்தை மக்களிடையே வளர்த்தார். சில காரணங்களால் பிறருடைய கட்டுப்பாட்டின் கீழ்த் தொடர்ந்து பணியாற்ற விரும்பவில்லை. ஆதலின் ‘நவசக்தி’ என்றொரு வார இதழைத் தாமே தொடங்கி நடத்திவந்தார். ‘சாது அச்சுக்கூடம்’ என்னும் அச்சுக்கூடத்தையும் நிறுவினார். 1920ஆம் ஆண்டு முதல் நவசக்தியை வெளியிட்டுச் சமூகச் சீர்திருத்தம், பெண் விடுதலை, கலை வளர்ச்சி, சமரசக் கொள்கை, தேசப்பற்று முதலியவற்றிற்குப் பெரிதும் பாடுபட்டார். காடுதிருத்தியும், நாடாக்கியும், கடல்கடந்தும், மலை பிளந்தும், ஆழ்கடல் மூழ்கியும், அருஞ் சுரங்கம் பெயர்த்தும் பணியாற்றும் தொழிலாளர்களின் வாழ்வை வளமாக்கவும், அவர்களுடைய உரிமை களைக் காக்கவும் 1928இல் ‘சென்னைத் தொழிலாளர் சங்க’த்தைத் தோற்றுவித்தார். இவர் தோற்று வித்த இந்தச் சங்கமே பிற்காலத்தில் இந்தியத் தொழி லாளர் சங்கங்களுக்கெல்லாம் அடிப்படையாக அமைந் தது. இச்சங்கத்தின்மூலம் தொழிலாளர்கள் பல நன்மைகளைப் பெறுமாறு செய்தார். அவர்களுடைய உரிமைகளைப் பாதுகாத்து, வாழ்க்கையையும் சீரடை யச் செய்தார். அவர்களிடையே கூட்டுப் பொறுப் புணர்ச்சியையும் வளர்த்தார்.

சுந்தரனார் ஓய்வு வேளைகளில் பிற தொண்டு களிலும் ஈடுபட்டார். ‘பாலசுப்பிரமணிய பக்த சன சபை,’ ‘சிவனடியார் திருக்கூட்டம்’ முதலியவற்றில் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றி மக்களின் உள்ளத் தைச் செம்மைப்படுத்தினார். இராயப்பேட்டையில் ‘மாதர் சங்க’த்தைத் தோற்றுவித்துப் பெண் கல்விக்குப் பெரிதும் பாடுபட்டார். பெண்ணின் பெருமை,

முருகன் அல்லது அழகு, இளமை விருந்து, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் முதலாய பல உரை நடை நூல்களையும், பொதுமை வேட்டல், புதுமை வேட்டல், திருமால் அருள் வேட்டல், முருகன் அருள் வேட்டல், கிறித்துவின் அருள் வேட்டல் முதலிய கவிதை நூல்களையும் எழுதி வெளியிட்டுத் தமிழ்த் தொண்டாற்றினர்.

இங்ஙனம் பல தொண்டுகள் ஆற்றிய இச் சான்றோர் 17—9—1953இல் தம் எழுபத்திரண்டாம் வயதில் காலமானர். இவர் மறைந்தாலும் இவர் ஆற்றிய தொண்டுகள் தமிழர் உள்ளத்தை விட்டகல வில்லை.

ஒழுக்கத்தின் உறைவிடமாய், உண்மையின் உறைவிடமாய், சமரசத்தின் சிறப்பிடமாய், கருணைக் கோர் எடுத்துக் காட்டாய், சமூகச் சீர்திருத்தச் சிற்பி யாய் விளங்கிய உத்தமர் கலியாண சுந்தரனரின் வாழ்க்கை இளைஞர் சமுதாயத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாகுமன்றே?

**அருஞ்சொற்பொருள்கள் :** குறிக்கோள் - இலட்சியம். பெற்றி - தன்மை. பொன்னி - காவிரி. கழனி - வயல். இன்னல் - துன்பம். வேட்கை - விருப்பம்.

**வினக்கள்**

1. திரு. வி. க. அவர்களின் பெருமைகளைக் கூறுக.
2. கலியாண சுந்தரனரின் இளமைப் பருவத்தினைப் பற்றி விளக்குக.
3. சுந்தரனரின் பள்ளிப் படிப்புக்குத் தடையேற்படக் காரணம் என்ன ?
4. கல்விப் பருவத்தைத் திரு. வி. க. எவ்விதம் பய னுள்ள பருவமாக்கிக் கொண்டார் ?

5. சுந்தரனுர் ஸ்பென்சர் கம்பெனியை விட்டு விலகி யது ஏன் ?
6. சுந்தரனுரின் பத்திரிகை ஆசிரியப்பணியை விவரி.
7. சுந்தரனுர் செய்த தொண்டுகளைச் சுருக்கி வரைக.
8. சுந்தரனுர் எழுதி வெளியிட்ட நூல்களுள் மூன் றினைத் தெரிவி.

---

## 2. இடைக்காட்டுப் புலவர்

சங்கம் வைத்து மொழிவளர்த்த மதுரைக்குக் கிழக்கே இடைக்காடு என்ருேர் ஊர் உள்ளது. அவ் வூரில் ஆயர் குலத்தில் பிறந்த இவர், தம் குல வழக் கிற்கேற்ப ஆட்டுமந்தையை ஓட்டிக்கொண்டு சென்று காடுகளில் மேய்த்துவிட்டு வருவது வழக்கம். இவ் வாறு ஒழுகும் நாளில் பிள்ளைப்பிராயம் முதிர்ந்து வாலிபப் பருவத்தை அடைந்தார்.

ஒரு நாள் வழக்கம்போல் ஆடுகளை மேய விட்டு விட்டுச் சுற்றுகையில் காட்டின் ஒருபுறத்தே எல்லாம் வல்ல சித்தர் ஒருவரைக் கண்டார். அன்றுமுதல் அந்தச் சித்தருக்குப் பால் அளிப்பதும், அவருக்குப் பணிவிடை செய்வதும் இடைக்காடருடைய வேலைகளுள் ஒன் ருயிற்று. முன்பின் அறியாமல் தனக்கு இவ்வாறு உதவி வரும் இடைக்காடருக்குத் தாமும் உதவவேண்டும் என்று எண்ணினுர் சித்தர். மாண்புடைய கல்வியை இடைக்காடருக்குப் போதிப்பதே நலமென்று முடிவு செய்துகொண்டு, தமிழ் இலக்கிய, இலக்கணங்களைக் குறைவின்றியும், ஐயம் திரிபுகள் இன்றியும் சித்தர் போதித்தார். இடைக்காடரும் அவற்றைப் பிழையறக் கற்றுத் தேர்ந்து கவிபாடும் வல்லமை பெற்ருர்.

கல்வியால் வேற்றுமை மறைகிறது; குலப் பாகுபாடு கரைகிறது; களர்நிலத்தில் பிறந்தாலும், உப்பை விளைநிலத்து விளைந்த நெல்லைக்காட்டிலும் உயர்ந்த பொருளாகச் சான்றோர்கள் மதிப்பர். கீழ்க் குலத்திற் பிறந்தவன் கற்றிருந்தால் மேற்குலத்தவனாயினும் அவனிடம் சென்று வணங்கி வழிபட்டுக் கல்வியைப் பெறுவான். அம்மட்டோ! கற்றோர்க்கு உள்ள மதிப்பு, சொல்லுந்தரத்தது அன்று. ஆதலால் ஆயர்குலத்தில் பிறந்தவராயினும் அறிவு நிறைந்தும், கல்வி கேள்விகளிற் சிறந்தும் விளங்கிய இடைக் காடரை யாவரும், இடைக்காட்டுப் புலவர் என்று போற்றினர்.

இடைக்காட்டுப் புலவருடைய பெருமை, மதுரையிலும் பரவியது. மதுரையில் அப்பொழுது இருந்த கடைச்சங்கப் புலவருள் ஒருவரான கபிலர், இவருடைய பெருமையைப்பற்றிக் கேள்விப்பட்டு இவரைக் காணவந்தார். கபிலரின் வருகையைக் கேள்விப்பட்ட இடைக்காடர், எதிர்கொண்டு சென்று முறைப்படி வரவேற்று உபசரித்தார். புலவர்கள் இருவரும் நெடு நாட் பழகியவர்கள்போல உரையாடி மகிழ்ந்தனர்.

பின் கபிலரின் வேண்டுகோட்படி இடைக்காடரும் அவரோடு மதுரைக்குச் சென்றார். அவருடைய புலமைத் திறத்தாலும், கபிலரின் முயற்சியாலும் சங்கப் புலவருள் ஒருவரானார். அங்ஙனம் சங்கப் புலவராகித் தமிழாராய்ச்சி செய்துவருகையில்தான், திருவள்ளுவர், திருக்குறளைப் பாடி முடித்துக்கொண்டு அரங்கேற்ற வந்தார். ஔவையார், கபிலர், இடைக் காடர், பரணர் முதலிய சங்கப் புலவர்கள் முன்னிலையில் திருக்குறள் அரங்கேற்றம் நடைபெற்றது. திருக்

குறளின் சிறப்பையும், அமைப்பையும் கேட்டுக்கேட்டு வியந்து யாவரும் பாராட்டினர். பலரும் தம் மனப் பாங்கிற்கு ஏற்பக் கவிபாடி வள்ளுவரையும், திருக் குறளையும் சிறப்பித்தனர். இடைக்காடரும்,

> கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள்

என்று பாடித் திருக்குறளையும், அதனை நுட்பமாகப் பாடிய வள்ளுவப் பெருந்தகையையும் போற்றி மகிழ்ந் தார். குறள் வெண்பாக்களால் ஆகியதொரு நூலுக்கு, அக்குறளைப் போலவே கருத்தை நுட்பமாக உள் ளடக்கிக் குறட்பாப் பாடிய இடைக்காடரின் புலமைத் திறத்தைக் கண்டு யாவரும் வியந்து பாராட்டினர்.

இங்ஙனமாகச் சங்கப் புலவர் யாவரும் போற்ற வாழ்ந்து வரும்பொழுது, தம் நண்பராகிய கபில ரின் விருப்பப்படி ஒரு பிரபந்த நூல் பாடவேண்டும் என்ற ஆசை இவருக்கு உண்டாயிற்று. அவ்விதமே சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்து விளங்குமாறு சிறந்ததொரு பிரபந்த நூலைப் பாடி முடித்தார்.

அப்பொழுது மதுரை மாநகரைக் குலசே பாண்டி யர் என்னும் தமிழ்ப்புலமை மிக்க மன்னர் ஆண்டு வந் தார். அவர் தமிழினிடத்தும், தமிழ்ப் புலவரிடத்தும் அளவற்ற அன்புடையவராக விளங்கினர். ஆதலால், அம்மன்னவர்முன் தம் நூலைப் பாடிப் புகழும், பொரு ளும் பெற்றுவரலாம் என்று எண்ணிய இடைக் காடர், தம் நூலுடன் அரசவையை அடைந்தார்.

புலவரின் வருகையைக் கண்ட பாண்டியர், அவரை எதிர்கொண்டு வரவேற்றார். தம் அவை யில் தகுந்தபடி இருக்கையிட்டு உபசரித்தார்.

பின்பு புலவருடன் தமிழ் நூல்களைப்பற்றி நெடு நேரம் உரையாடி மகிழ்ந்துவிட்டு, வந்த காரியம் ஏதென்று புலவரை வினவினர். இடைக்காடரும் தாம் வந்த காரணத்தைக் கூறி, மன்னர்முன் தம் நூலைப் பாடி விளக்கலானர். அந்நூலின் சிறப்பு, அந்நூலி லுள்ள சொல் நயம், பொருள் நயம், அவற்றைப் புலவர் விளக்கிய முறை ஆகியவற்றைக் கேட்ட பாண்டியர் உள்ளத்தில் மகிழ்ச்சி ஏற்படுவதற்குப் பதில் பொருமை தோன்றி அறிவை மறைக்கவே, தலை யசைத்து முக மலர்ந்து பாராட்ட வேண்டியவர் அவ்விதம் செய்யாது எங்கோ பார்த்துக்கொண் டிருந்தார். புலவர் நூலைப் பாடி முடித்ததும் அரசர் ஒன்றும் கூருமல் எழுந்து சென்றுவிட்டார்.

அரசர் ஒன்றுமே கூருமல் உள்ளே சென்ற செயல் புலவருடைய உள்ளத்தை வாட்டியது. துருத்தியால் ஊதப்பட்ட உலையைப் போலப் புலவரின் உள்ளம் கனன்றது. ' அரசர் என்னை இகழ்ந்தாலும், என் நூலை இகழ்ந்தாலும் பொறுத்துக்கொள்வேன். ஆனல், இப்பொழுதோ மொழியை இகழ்ந்தார் ; தமிழை இகழ்ந்தார் ; தமிழ்ச் சொற்களின் வடிவ மாக இருக்கும் இறைவியை இகழ்ந்தார்; சொற்களின் உட்பொருளாக விளங்கும் இறைவனை இகழ்ந்தார். இதற்கொரு வழி காணவேண்டும்' என்று எண்ணி நேரே ஆலவாய்க் கோவிலை அடைந்தார்.

அங்கு அங்கயற்கண்ணியுடன் வீற்றிருக்கும் சொக்கேசனின் திருமுன்பு விழுந்து வணங்கி எழுந் தார். தலைமீது கைகளைக் கூப்பியவாறு கண்ணீர் வடித்து நின்று, ' தமிழறியும் பெருமானே! அடைந் தாரைக் காக்கும் ஆலவாய் எம் அண்ணலே! பாண்டி

யர் கல்வி கேள்விகளில் வல்லவர் என்று கேட்டறிந்து அவர்முன் யான் நூலைப் பாடினேன். ஆனால், அவரோ அஃறிணைப் பொருள்போல அசைவற்று இருந்தார். அம்மட்டோ! இறுதியில் ஒன்றுமே கூறாமல் எழுந்தும் சென்றுவிட்டார். அவர் அவ்விதம் செய்த செயல், என்னையும், நூலையும் இகழ்ச்சி செய்தது போல இல்லை. சொல் வடிவாக விளங்கும் இறைவியையும், சொற்பொருளாக விளங்கும் உன்னையும் இகழ்ந்ததுபோல இருந்தது. இது தகுமோ ? எனக்கு இதனால் ஒன்றும் குறைந்து விடவில்லை' என்று சினமும், துக்கமும் பொங்கக் கூறி விட்டு வெளியேறினர்.

அதனால் இடைக்காடருடைய உள்ளம் மகிழுமாறு அன்றிரவே சொக்கேசர் தம் இலிங்க உருவை மறைத்து அங்கயற்கண்ணியோடு அக்கோவிலுக்கு நேர் வடக்கே வைகையாற்றின் தென்கரையில் ஒரு கோவிலைக் கண்டு அதனுள் அமர்ந்தார். அவ்வாறு இறைவன் கோவிலை விட்டுச் சென்றதை யுணர்ந்த சங்கப் புலவர்கள் யாவரும், இறைவன் சென்ற இடத்திற்கே சென்றுவிட்டனர்.

மறுநாள் விடியற்காலையில் கோவிலை யடைந்த அடியவர்கள் அங்குக் கடவுளின் உரு இல்லாததைக் கண்டு மனம் பதைத்தனர் ; நடுங்கினர். 'என்ன அதிசயம் இஃது!' என்று வியந்தனர். பின்னர் யாவரும் ஓடிச் சென்று பாண்டியருக்கு அச்செய்தியை அறிவித்தனர். செய்தி கேட்ட பாண்டியர் மனம் நடுங்கிக் கோவிலை அடைந்தார் ; அங்குக் கடவுள் உருவைக் காணாது கலங்கினர். 'இறைவா ! நான் என்ன பிழை செய்தேன் என்று என் நகரை விட்டு

நீர் நீங்கி விட்டீர்? எங்குச் சென்றீர்?' என்று கதறிப் புலம்பினர்.

அப்பொழுது சிலர் அவரை நாடி வந்தனர். "மன்னவா! நாங்கள் வடதிசையிலிருந்து வருகிறோம். வைகையின் தென்கரையில் இக்கோவிலுக்கு நேர் வடக்கே ஒரு கோவில் இருக்கிறது. அங்கு நம் ஆல வாய் இறைவன், சங்கப் புலவர்களோடும், அங்கயற் கண்ணியோடும் வீற்றுள்ளதைக் கண்டோம்' என்று கூறினர்.

அவர்கள் கூறியதைக் கேட்டவுடன் மன்னர் ஒரு வாறு மனந்தேறி வைகைக்கரையிலுள்ள அந்த ஆலயத்தை அடைந்தார். அங்கே இறைவன் சங்கப் புலவர்கள் புடைசூழ வீற்றிருப்பதைக் கண்டு அள வில்லாத உவகை கொண்டார். ஆனந்தக் கண்ணீர் பெருகிவழிய ஓடோடிச் சென்று இறைவன் திருவடி களில் அடியற்ற மரம்போல் வீழ்ந்தார். நாக்குழறவும், மெய்ந் நடுங்கவும் எழுந்து நின்று, 'மறை முதல்வா! விண்ணோர் தலைவா! அடியேன் செய்த பிழை யாதோ? இங்ஙனம் ஊரைவிட்டு நீங்கிவந்தது ஏனோ? பகைவர், கள்வர் இவர்களில் யாராலாவது இடையூறு ஏற்பட்டதா? விலங்குகள் ஊறு விளைத்த தனவா? குடிமக்கள் அறவொழுக்கங்களிலிருந்து தவறி நடந்தார்களா? தானமும், தவமும், தருமமும் சுருங்கி விட்டனவா? இல்லறமும், துறவறமும் நெறி முறை தவறினவா? ஐயனே! தாங்கள் இவ்விதம் ஊரைவிட்டு வரக் காரணந்தான் யாதோ? திருவாய் மலர்ந்தருளுங்கள்' என்று கதறிப் பலவாறாகத் துதி செய்தார்.

பாண்டியருடைய தோத்திர மொழிகளால்

உள்ளம் மகிழ்ந்தான் இறைவன். உடனே அசரீரி மூலமாக, 'தென்னவா ! உன்னுடைய தோத்திரங்கள் என்னுள்ளத்தைக் குளிரச்செய்துவிட்டன. ஆயினும் நீ இடைக்காடன் பாடிவந்த நூலை இகழ்ந்தமை யாலும், அன்னவன் என்னிடத்து வந்து முறையிட்ட தனுலும் அவனிடம் யான் கொண்ட அருளினுலும் நகரைவிட்டு நீங்கி வந்தேன். யான் ஒரு பொழுதும் கடம்ப வனமாகிய மதுரையைவிட்டு நீங்க மாட் டேன். இவ்விடத்திலுள்ள இலிங்கம் என் தோழன் குபேரனுற் பூசிக்கப்பட்டது. ஆதலினுல் இங்கு வந் தேன். இவ்விடம் இன்றுமுதல் வட திருஆலவாய் என்று அழைக்கப்படட்டும்' என்று கூறினுர்.

அசரீரி கேட்ட அரசர் தம் பிழையை யுணர்ந்து வருந்தினுர் ; சங்கப் புலவர்களிடத்தும், இறைவ னிடத்தும் தம்மை மன்னித்தருளுமாறு வேண்டினுர். இடைக்காடரை அணுகித் தம் பிழை பொறுக்குமாறு இறைஞ்சினுர். இடைக்காடரும் மனமகிழ்ந்து மன் னரை வாழ்த்தினுர். சான்ருேரின் சினம் நீர்கிழிய எய்த வடுவன்ருே !

பின் பாண்டியர், யாவரையும் உடனழைத்துக் கொண்டு தம் அரண்மனையை அடைந்தார். முறைப் படி அலங்கரிக்கப்பட்ட மண்டபமொன்றில், உயர்ந்த இருக்கையில் இடைக்காடரை இருத்தி, நூலை அரங் கேற்றுமாறு செய்தார். அரங்கேற்றம் முடிந்தபின் இடைக்காடருக்கும், மற்றச் சங்கப்புலவர்கட்கும் தக்க பரிசுகளும், பொன்னுடைகளும், மணியாரங்களும் வழங்கினுர். மன்னர் செய்த சிறப்புக்களாலும், அளித்த பரிசுகளாலும், புலவர்கள் யாவரும் உவகை கொண்டு விடைபெற்றனர். மன்னவரும் அவர்

களின்பின் ஏழடி தூரம் நடந்துசென்று, 'புலவீர்! யான் இடைக்காடருக்குச் செய்த பிழையைப் பொறுத் தருளுங்கள்' என இறைஞ்சினர். புலவர்களும், 'மன்ன! நீ இப்பொழுது பணிவாகக் கூறிய சொற்க ளாகிய அமுதம் எங்கள் உள்ளத்திலிருந்த கோபத் தீயை அவித்துவிட்டது. நீ நீடூழி வாழ்க!' என்று கூறி விடைபெற்றுச் சென்றனர். இறைவன் அருள் பெற்ற இடைக்காடர், பின்னர்ச் சிலகாலம் தமிழ்த் தொண்டாற்றி இறைவனடி நிழலை அடைந்தார்.

**அருஞ்சொற்பொருள்கள் :** ஐயம் - சந்தேகம். திரிபு - ஒன்றை மற்றொன்றாக எண்ணுதல். களர்நிலம் - உவர் நிலம். துருத்தி - காற்றெழுப்பும் கருவி. கனன்றது - கொதிப் படைந்தது. அங்கயற்கண்ணி - மீனாட்சியம்மை. ஆலவாய் - மதுரைக்கு வேறொரு பெயர். திருவாய் மலர்ந்தருளுதல் - கூறுதல். அசரீரி - வானிலிருந்து எழுப்பப்படும் குரல். இறைஞ்சினர் - கெஞ்சி வணங்கினர். மணியாரம்-இரத்தின மாலை.

### வினாக்கள்

1. இடைக்காடர் கவிபாடும் வல்லமை பெற்றது எவ்வாறு?
2. இடைக்காடரைக் காண வந்தவர் யார்? அவரால் இடைக்காடர் அடைந்த பெருமை யாது?
3. இடைக்காடரின் உள்ளம் கொதிப்படையக் கார ணம் என்ன?
4. ஆலவாய் அண்ணலை நோக்கி இடைக்காடர் கூறியவை யாவை?
5. பாண்டிய மன்னர் இடைக்காடரை அவமதித்த தால் ஏற்பட்ட விளைவைத் தெரிவி.
6. சங்கப் புலவர்களின் சினம் தணிந்தது எவ்வாறு?

———

## 3. வலியோட்டிய வல்லவர்

ஒரு நாள், ஒரு சிறுவன் தன் தந்தை யாருடன் மருத்துவச்சாலை ஒன்றிற்குச் சென்றான். நோய்வாய்ப்பட்ட தம் நண்பரைச் சந்திக்கச் சென்றார் பெரியவர். இருவரும் மருத்துவ மனையை அடைந்தனர். நோயாளிகளின் இருமல் ஒலியும், முனகல் ஓசையும், 'ஐயோ', 'அப்பா' என்னும் அலறல் ஓசையும் மருத்துவச் சாலையில் நிறைந் திருந்தன. அவ்வொலிகள் யாவும் சிறுவனுக்குப் புதியனவாகையால், அவன் உள்ளத்தில் அச்ச மும், நடுக்கமும் ஏற்படத் தொடங்கின. எனினும், துணிவை இழக்காமல் அடிமேல் அடிவைத்துத் தந்தை பின்னே சென்றுகொண்டிருந்தான். ஆனால், பெரியவரோ அவ்வொலிகளைப் பொருட்படுத்திய தாகவே தெரியவில்லை. தம் நண்பர் படுத்திருக்கும் இடத்தை நாடி விரைவாக நடந்துகொண்டிருந்தார். பின்னால் தம் மைந்தன் வருகிறானா இல்லையா என்று கூட அவர் கவனிக்கவில்லை.

இந்த நிலையில், தந்தையைப் பின்தொடர்ந்த சிறுவன் ஓரிடத்தில் நின்றான். அவ்விடத்திற்குச் சற்று அப்பால், ஒருவரைக் கட்டிலில் கிடத்திப் பலர், அவரை அமுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தனர். மருத்துவர் ஒருவர், தம் கையில் பளபளப்பான கத்தியுடன் குனிந்து காற்சதையை அறுத்துக் கொண்டிருக்கவே கட்டிலில் படுக்க வைக்கப்பட்டிருந்தவர் அச்சமுண் டாகும் வகையில் அலறிக் கொண்டிருந்தார். இந்தக் காட்சி சிறுவன் சிந்தனையைத் தூண்டிற்று. 'பாவம்! வலி தாங்காமல் அலறுகிறார். அதைச் சிறிதும் கவனி

யாமல் அனைவரும் இருக்கிறார்களே! காலில் சிறு முள் தைத்தாலே வலி தாங்கமுடிவதில்லை. கூரிய கத்தியால் கண்ணெதிரிலேயே அறுத்தால் வலியைத் தாங்குவதுதான் எப்படி? அவ்வலியைப் போக்க வழியேயில்லையா? சரி; நான் பெரியவனானவுடன் மருத்துவனாகி வலிபோக்கும் மருந்தைக் கண்டு பிடிப்பேன்.' இவ்வாறு எண்ணமிட்டது அச் சிறுவனின் மனம். அச் சிறுவனே ஜேம்ஸ் சிம்ப்சன்.

ஸ்காட்லாந்து தேசத்திலுள்ள ஒரு சிற்றூரில் பெயர்பெற்ற அப்பக்கடை ஒன்று இருந்தது. அக்கடையில் செய்யப்படும் அப்பங்கள் யாவும் தூய கோதுமை மாவைக்கொண்டு தயாரிக்கப்பட்டு வந்தன. அத்துடன் அவை தனிப்பட்ட சுவையும், மணமும் உடையவாயுமிருந்தன. அதனால் அச்சிற்றூர் மக்களிற் பலர் அந்தக் கடைக்கு நாடொறும் வந்து செல்வர்.

அக்கடைக்குரியவர், நாடொறும் நடக்கும் வாணிகத்தில் வரும் சிறிதளவு இலாபத்தைக்கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார். அவ்வணிகருக்கு முன்பே ஆறு குழந்தைகள் இருந்தார்கள். மேலும் ஏழாவது குழந்தையாகச் சிம்ப்சன் பிறந்தார். சிம்ப்சன் பிறந்தபோது குடும்பநிலை வறுமையில்தான் வாடியது என்றாலும், குழந்தையை வெறுக்காமல் பெற்றோர் கண்ணுங் கருத்துமாக வளர்க்கலாயினர்.

கல்வி பயில்வதற்குரிய வயது வந்ததும் பெற்றோர் சிம்ப்சனைப் பள்ளியில் வைத்தனர். சிம்ப்சனும் பள்ளிச் சூழ்நிலையில் அதிக விருப்பமுடையவராய், விரைந்து கற்கலானார். சிம்ப்சன் ஓய்வு நேரத்தை வீணாகக் கழித்ததேயில்லை. தம் நாட்டு வீரர்களின் வரலாறுகளையெல்லாம் படித்தார். அதன் பயனாக,

அவர்களைப் போலவே தாமும் நாட்டுக்காகப் பாடுபட வேண்டும் என்று எண்ணினர். மற்றும் தம் ஊருக்கு அருகிலுள்ள மலைகளில் ஏறுவதும், குகைகளில் அச்சமின்றி நுழைந்து ஆராய்வதும், காடுகளில் வானுற வளர்ந்த மரங்களிடையே நுழைந்து நுழைந்து செல்வதும் இவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தன. இவ்விடங்களில் திரியும்பொழுதெல்லாம் அம்மலைகளும், காடுகளும் உலக மக்களுக்கு உதவுவன போலவே தாமும் ஏதாவது ஒன்றைச் செய்து உதவ வேண்டும் என்று அடிக்கடி எண்ணி வந்தார். இவ்வாறு இளமையில் சிம்ப்சன் இருந்து வந்தாலும், படிப்பில் அவர் ஊக்கம் குன்றவேயில்லை.

பள்ளிக்குரிய பாடங்களை மட்டும் படிப்பது போதாது. பாடத்தோடு தொடர்புடைய ஏனைய நூல்களையும் அவ்வப்போது படித்து விடவேண்டும். கல்வி பயிலக் கவலையற்ற இளமைப்பருவமாகிய மாணவப்பருவமே ஏற்றது. அப்பருவம் போனல் மீண்டும் வராது. அப்பருவத்தை வீணுக்கியவர்கள் பின் வாழ்க்கையில் மிகவும் வருந்துவார்கள். துள்ளித் திரிந்து, விளையாடி மகிழும் அப்பள்ளிப் பருவ வாழ்க்கைதான் மனிதனுடைய பல பருவங்களிலும் தலைசிறந்தது. ஊண், உடை, உறைவிடம், உற்ருர், மற்றவர் முதலிய எந்தக் கவலையும் இன்றித் தன் விருப்பம்போல் வேறு எந்தப் பருவத்தில் சுற்றித் திரிய முடியும்? இவற்றை நன்குணர்ந்தவர் சிம்ப்சன். ஆதலின், பள்ளிப்பருவத்தைப் பாழாக்காமல் பயிலவும் பயின்ருர். பருவத்திற்குரிய பிள்ளைக் குறும்புகளும் செய்தார்.

பள்ளி விடுமுறை நாட்களில், தம் தந்தையாருக்கு

உதவியாகச் சிம்ப்சன் வியாபாரமும் செய்தார். சில சமயங்களில், கோதுமை அப்பங்களை எடுத்துக் கொண்டு வெளியூர்க்குச் சென்று விற்று வந்ததுமுண்டு. 'நேரத்தை வீணுக்குவது கூடாது. காலம் பொன்னுனது. போனுல் மீண்டும் வராதது' என்பது அவருடைய கொள்கையாகும்.

பள்ளிப்படிப்பு முடிந்ததும், கல்லூரியிலே படிக்க வேண்டுமெனச் சிம்ப்சன் விரும்பினுர். கல்லூரிப் படிப்புக்குச் செலவிடும் வகையில் குடும்ப வருவாய் இல்லாவிட்டாலும், அக்காளும், அண்ணனும் தம் தம்பியின் விருப்பத்தை நிறைவேற்ற அயராமல் உழைத்துப் பொருளீட்டி உதவினர்.

சிம்ப்சனின் கல்லூரிப்படிப்பு, எடின்பரோ கலா சாலையில் தொடங்கியது. இவர் தம் இளமை முடிவுப் படி, மருத்துவத் துறையையே தேர்ந்தெடுத்துக்கொண் டார். மருத்துவத் தொடர்புடைய பல நூல்களையும் நூலகத்திலிருந்து எடுத்துப் படித்தார். இடையிடையே மருத்துவ முறைகளைப்பற்றிப் பேராசிரியர்கள் செய்யும் சொற்பொழிவுகளை யெல்லாம் விடாமல் கேட்டுக் குறிப்புக்கள் எடுத்து வந்தார். இதற்கிடையில் சிம்ப்சனின் தந்தை மரணமடைந்தார். தந்தை யின் மரணத்தினுல் கல்லூரிப்படிப்புக்குத் தடை ஏற் பட்டது. அதனுல், கல்லூரிப்படிப்பை நிறுத்திவிட்டு அதுவரையிற் படித்த அனுபவத்தைக் கொண்டு, வைத் தியத் தொழிலில் ஈடுபட்டுப் பொருளீட்ட எண்ணினுர் சிம்ப்சன். தம் தம்பியின் மன நிலையையறிந்த உடன்பிறந்தவர்கள், மீண்டும் கவலையின்றிக் கல்லூரி யில் சேர்ந்து படிக்குமாறு அவரை வற்புறுத்தியதால், சிம்ப்சன் மீண்டும் எடின்பரோ கலாசாலையில் தம்

படிப்பைத் தொடர்ந்தார். முன்னிலும் அதிக ஊக்கத்துடன் பயின்று, 'டாக்டர்' பட்டம் பெற்ருர். பட்டத்திற்குரிய தகுதிப்பத்திரத்தைக் கையில் பெற்றுக் கொண்டதுமே, 'இனி உலகிற்கு உதவும் தகுதியைப் பெற்றுவிட்டேன். என் இலட்சியத்தில் வெற்றி காண்பேன்' என்று உறுதி செய்துகொண்டார்.

வீட்டை அடைந்ததும் சிம்ப்சன், தாம் பட்டம் பெற்றுயர்வதற்குத் தங்களேயே தியாகம் செய்து உழைத்து உதவிய உடன்பிறந்தோர்களே மண்டி யிட்டு வணங்கினர். 'நான் பெற்ற டாக்டர் பட்டம் உங்களுடைய உழைப்பின் பரிசு. நான் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?' என்று அவர்களே நோக்கி ஆனந்தக் கண்ணீர் வழியக் கூறினர். பின்பு, பட்டம் பெற்ற சிம்ப்சன், பயிற்சி பெற விழைந்து, ஐரோப்பா முழுவதிலும் உள்ள சிறந்த மருத்துவர்கள் செய்யும் சிகிச்சை முறைகளே யெல்லாம் கூர்ந்து கவனித்து அறிந்தார். சிற்சில முறைகளேப் பயிலவும் செய்தார். சின்னுட்களில் தம் ஊர் திரும்பிய சிம்ப்சன், மருத்துவத் தொழிலே மேற்கொண்டார். அக்காலத்தில் நோயாளிகள், மருத்துவர்களேக் கண்டாலே அஞ்சி நடுங்கி வந்தனர். ஏனெனில் நோயாளிகளேக் கண்டால் மருத்துவர்கள் இனிமையாகப் பேசமாட்டார்கள். கடுகடுப்பாக முகத்தை வைத்துக்கொண்டு கடுஞ்சொற்களேச் சலிப் புடன் சொல்வார்கள். நோயாளிகளுடைய நோய் தீர்ந்தாலும், தீராவிட்டாலும் அவர்கள் கவலேப்பட் டதே இல்லே. பொருள் சேர்ப்பதே தம் இலட்சியமாகக் கொண்டு தொழில் நடத்தி வந்தார்கள். புனிதமான மருத்துவத் தொழில் அவர்கள் செய்கையால் புகழ்

மங்கத் தொடங்கியது. மற்றும், மக்கள் மருத்துவர் களைக் கண்டு வெறுக்க மற்றொரு காரணம், அவர்கள் இரக்கமின்றிச் செய்துவந்த அறுவை மருத்துவம் (ஆபரேஷன்) ஆகும்.

இவற்றையெல்லாம் நன்கு அறிந்தவர் சிம்ப்சன். ஆகவே, மேற்கண்ட குறைகள் எவையுமின்றித் தொழிலை நடத்தலானார். அவருடைய இனிய பேச்சும், மருத்துவ முறையும் மக்களைக் கவர்ந்தன. அத்துடன் அவர் செய்த சிகிச்சை யாவும் வெற்றியாகவே முடிந் தன. அவரிடம் சென்றால் எத்தகைய நோயும் குண மாகி விடும் என்ற அசைக்கமுடியாத எண்ணம் மக்களிடம் வேரூன்றியது. ஆகவே ஸ்காட்லாந்திலும், இங்கிலாந்திலும் உள்ள மக்கள் திரள்திரளாக அவரை நாடி வந்தனர். நாளடைவில் ஐரோப்பா முழுமையுமே அவரை நாடி வரலாயிற்று. அதனால் பொருளும் நிரம்பக் குவிந்தது; அவரது புகழும் மேலும் மேலும் வளர்ந்தது.

இங்ஙனமிருக்கையில், ஹம்பிரி டேவி என்னும் பெரியார், நோவை மறக்கும் வழிகளை ஆராய்ந்து, நைட்டிரஸ் ஆக்சைடின் ஆவியை முகர்ந்தால் பல்வலி தீரும் என்ற செய்தியை வெளியிட்டார். அவர் கூறியதைத் தொடர்ந்து பலர், நோவை மறக்கச் செய்யும் வழிகளை அறிவதில் தீவிரமாக முனைந் தனர். அவர்களுள் ஒருவரே வில்லியம் மோர்டன். பல் வைத்தியம் செய்வதில் இவர் நிபுணர். பல்லைப் பிடுங்கும்போது வலியேற்படாதிருக்க, இவர் நோயாளி களை ஈதர் முதலிய பொருள்களை முகரச்செய்து மயக்கமடையச் செய்தார். பின், பல்லைப்பிடுங்கும் பொழுது நோயாளிகள் துன்பமின்றி யிருப்பதைக்

கண்டு அச் செய்தியைக் கட்டுரைமூலமாக வெளி யிட்டார்.

வில்லியம் மோர்டனைவிட நல்லதொரு மயக்க மருந்தைத் தாம் கண்டுபிடிக்க வேண்டுமென முடிவு செய்துகொண்டார் சிம்ப்சன். ஆகவே, பணி யாற்றிய நேரம்போக மீதிநேரத்தில், பலவகையான மருந்துப்பொருள்களை வரவழைத்து, அவற்றைப் போதை தருவனவாக ஆக்குவதெப்படி என ஆராய்ந்து வந்தார். பலவகை மருந்துகளையும் கலந்து உண்டும், முகர்ந்தும் வந்தார். இதனால் அவர் உடலுக்குத் தீங்கு ஏற்பட்டது. ஆயினும், அவர் அதனையும் பொருட்படுத்தாமல் தாம் மேற்கொண்ட ஆராய்ச் சியை மிகுந்த ஆர்வத்தோடு செய்து வந்தார்.

இங்ஙனம் பலவகையான மருந்துப்பொருள் களையும் வரவழைத்து ஆராய்ந்து வருகையில், ஒரு நாள் ஒரு புதிய மருந்துப்பொருள் அவர் பெயருக்கு வந்தது. பார்வைக்கு அம் மருந்துப்பொருள் நன் றாக இல்லை. அதனால், அதனை அறையின் ஒரு மூலை யில் தூக்கி எறிந்துவிட்டார். சில நாட்கள் கடந்த தும், தூக்கி எறியப்பட்ட அம் மருந்துப்பொருளிலும் ஏதாவது சக்தியிருக்கலாம் என்றெண்ணி அதனை எடுத்து முகர்ந்தார். முகர்ந்தவுடன், முதலில் சிறிது மயக்கமாக இருந்தது. பின், தம் நண்பர்கள் இரு வருக்குக் கொடுத்து முகரச்செய்து, தாமும் முகர்ந் தார். சிறிது நேரத்தில் இறந்தவர்கள்போல யாவ ரும் மயங்கிக் கீழே விழுந்துவிட்டனர். பின், மூவ ரில் சிம்ப்சனே முதலில் தெளிவடைந்து எழுந்தார். தம் நண்பர்கள் இருவரும் மயங்கிக் கிடப்பதைக் கண்டார். அவர்களைப் பன்முறை எழுப்பியும்,

மாண்டவர்போல உணர்ச்சியற்று அவர்கள் கிடந்தார்கள். நெடு நேரம் கடந்தபின்பே அவ்விருவருக்கும் தந்நினைவு ஏற்பட்டது.

சிம்ப்சன், தாம் முகர்ந்த அந்த மருந்தைக் கண்டு அளவிலா உவகை கொண்டார். அம் மருந்து வலி எனும் அரக்கனை மாய்க்க வல்லதாகும் என்று எண்ணினர். பின், அம் மருந்தைப் பக்குவப்படுத்தி மயக்கந்தரும் மருந்தாகக் கொணர்ந்தார். அம் மருந்தே ‘ குளோரோபாரம் ’ ஆகும்.

தாம் கண்ட புதுமையை உலகிற்கு உணர்த்தினர் சிம்ப்சன். தம் உயிரையும் மதியாமல் பிறர்வலி தீர்க்கப் பாடுபட்ட அவ்வுத்தமரை உலகமே போற்றி வருகிறது.

அருஞ்சொற்பொருள்கள் : குன்றுதல்-குறைதல். ஊண் - உணவு. உறைவிடம் - தங்குமிடம். இலட்சியம் - கொள்கை. கைம்மாறு - எதிர் உதவி. நோவு - வலி. போதை - மயக்கம். உவகை - மனமகிழ்ச்சி.

**வினாக்கள்**

1. சிறுவனாக இருக்கும்பொழுது சிம்ப்சன் எவ்வாறு எண்ணமிட்டார்? அதற்குக் காரணம் என்ன?
2. ஓய்வு நேரத்தைச் சிம்ப்சன் எப்படிப் பயன் படுத்தினர்?
3. மாணவப் பருவத்தின் மேன்மைகளைத் தெரிவி.
4. சிம்ப்சனின் நன்றியுணர்ச்சியினை விளக்குக.
5. அக்கால மருத்துவர்களை மக்கள் ஏன் வெறுத்தனர்?
6. சிம்ப்சன் குளோரோபாரம் கண்டுபிடித்த விதத்தைப்பற்றிச் சுருக்கிக் கூறுக.
7. சிறு குறிப்பு எழுதுக : வில்லியம் மோர்டன்.

---

## 4. வினையும் விளைவும்

மங்கலப் பாண்டி வளநாட்டில், சீருற்றுத் திகழ்ந்தவற்றுள் பொதிகை மலையும் ஒன்றாகும். இப்பொதிய மலை ஓங்கி உயர்ந்து நின்று திங்களை முடி சூடும் சிறப்புடையது; தென்றல் பிறந்து இனிதே தவழ்ந்து வீசுதற்குத் தோற்றிடமாக விளங்குவது; பொங்கிப் பெருகி வீழும் கீதம் பாடும் அருவிகளைத் தன்பாற் கொண்டது; குன்றாத வளங்கட்கு எல்லாம் உறைவிடம் எனத் திகழ்வது; இலக்கியங்களாலும், புராணங்களாலும் பாராட்டப் பெற்ற பெருஞ்சிறப் புடன் மிளிர்வது.

இப்பொதிய மலையைத் தன் இருப்பிடமாகத் தேர்ந்து எடுத்துக்கொண்டு தங்கி வாழ்ந்துவந்தார் அகத்தியர். 'தமிழ் முனிவர்', 'குறு முனிவர்' என் றெல்லாம் இவரைத் தமிழகத்தார் சிறப்பிப்பர். இம் முனிவர் உருவத்தாற் சிறியவராக இருந்தபோதிலும், உருள் பெருந்தேர்க்கு அச்சாணியன்ன சிறப்புடைய வராய் விளங்கினர். இவருடைய ஆற்றலை விளக்கிக் கூறும் பற்பல கதைகள் வழக்கில் இருந்து வருகின்றன.

இவர் இறைவனருள் பெற்ற ஏற்ற முடையவர்; இறைவனால் தென்னகத்திற்கு அனுப்பப் பெற்றுத் தமிழ்த் தொண்டு புரிந்தவர்; குணமென்னும் குன் றேறி நின்ற சான்றாண்மையுடையவர்; முக்காலமும் நன்குணர்ந்த ஞானி. செருக்குற்ற கடலைத் தம் குடங்கையில் ஏற்று உட்கொண்டது, விந்திய மலை யின் செருக்கை அடக்கியது, வாதாபி, இல்வலன் என்னும் இரண்டு அரக்கர்களைக் கொன்றது முதலாய

சுவைமிக்க கதைகள் இவருடைய ஆற்றலையும், பெருமையையும் விளக்குவன வாகும்.

> ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந்நாளும்
> ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்'

என ஔவைப் பெருமாட்டியின் கூற்றை மெய்ப்பிக்கும் காவிரி நதியின் தோற்றத்திற்கு இவர் காரணமானவர் என்றொரு கதையும் வழக்கிலுள்ளது. இத்தகைய பெருமை பொருந்திய இம்முனிவர்க்கு மண்ணுலகத்தே மட்டுமின்றி விண்ணுலகத்தும் நல்ல மதிப்பு இருந்தது.

ஒருமுறை அகத்தியர் விண்ணுலகத்திற்குச் சென்றார். விண்ணவர் வேந்தனான இந்திரன் முனிவரை எதிர்கொண்டழைத்துச் சென்று பலவாறாக உபசரித்தான்; அவ்வுபசரிப்பால் அகத்தியர் பெரிதும் மகிழ்ந்து மனநிறைவு கொண்டார். அதனால் மேலும் இவரை மகிழ்விக்க விரும்பிய இந்திரன், சித்திரசேனன் என்னும் கந்தருவனை அழைத்து ஆடல், பாடல் நிகழ்ச்சிகளை அமைக்குமாறு ஆணையிட்டான்.

ஆயிரங்கண்ணோனின் ஆணையை ஏற்ற சித்திரசேனன் இந்திர சபையில் ஆடிப்பாடுபவர்களில் வல்லவளும், அழகு மிக்கவளுமான ஊர்வசிக்குச் செய்தி அனுப்பினான். அனைவராலும் போற்றிப் புகழப்படும் அகத்திய முனிவரின் முன்னால் ஆடிப்பாடும் பேறு தனக்குக் கிட்டியதை எண்ணி ஊர்வசி உளமகிழ்ந்தாள். அகத்தின் மலர்ச்சியை முகம் காட்டத் தன்னை ஒப்பனை செய்துகொண்டு ஆடவும் பாடவும் முன்னின்றாள்; அவளுடன் இணைந்து பாடத் தோரிய மடந்தை ஒருத்தி உடன் நின்றாள். யாழிசை மீட்ட

முன்வந்தார் நாரத முனிவர். ஆடல் காணவும், பாடல் கேட்கவும் முன்வந்து குழுமினர் தேவர்கள். இங்ஙனம் யாவரும் குழுமியதால் இந்திரனுடைய அவைக்களம் பல்வகை ஒலிகளால் நிறைந்து விளங்கியது.

சில விநாடிகளில் அவைக்கள ஒலிகள் யாவும் அடங்கின. அனைவரும் எழுந்து பணிந்து அமைதியுடன் வரவேற்கக் குறுமுனிவரை வாசவன் அழைத்து வந்து இருக்கையில் இருத்தினன். குறுமுனிவரும் அனைவருக்கும் ஆசிமொழிந்து அமர்ந்தார். உடனே நாரதர் தம் யாழினை மீட்டி மங்கலகீதம் இசைக்கலானர். தோரிய மடந்தையும், சித்திரசேனனும் மெல்லிசை பாடத் தொடங்கினர். யாழிசையும், குரலிசையும் யாவர் உள்ளத்திலும் இன்பத்தை நிரப்பின. யாழிசைக்கும், குரலிசைக்கும் ஏற்பப் பாதச் சிலம்பு பலவிசை பாட மெல்லமெல்ல நடந்துவந்தாள் ஊர்வசி. அவள்முன் இருவர் மெல்லிய திரைச் சீலை யொன்றைப் பிடித்துக்கொண்டு வந்தனர். மெல்லிய அந்தத் திரைச்சீலையின் வழியே தெரிந்த அவள் தோற்றம் காண்பவர் எவரையும் கருத்தழியச் செய்ய வல்லதாக இருந்தது.

அவைக் களத்தில் அகத்தியர்க்கு அருகில் இந்திரனின் மகன் சயந்தன் அமர்ந்திருந்தான். அவனும் அன்று தன்னை அழகாக ஒப்பனை செய்துகொண்டிருந்தான். நாரதரின் வீணையிசையால் அவன் மனம் இன்பத்தில் மூழ்கியிருந்தது. அத்துடன் அறிவையும் பறிகொடுத்துத் தன்நிலை கலங்கியிருந்தான். இந்நிலையில் மெல்லிய திரைக்குப்பின் வரும் ஊர்வசியின் தோற்றம் அவன் உள்ளத்தில் பெருவேட்கையை எழுப்பியது.

எனவே, தன்னை மறந்தான்; தானிருக்கும் இடத்தை மறந்தான்; தன்னருகில் இருப்பவரை மறந்தான்; 'நாம் இன்னது செய்கிறோம்' என்னும் உணர்வில்லாத வனாய் ஊர்வசியின் தோற்றத்தையே உற்று உற்று நோக்கினான். அனைத்தையும் அறியும் ஆற்றல் படைத்தவரான அகத்தியர், சயந்தனுடைய மெய்ப் பாடுகளையும், அகக்கருத்தையும் அறிந்தாராயினும் அறியாதவர்போல் அமர்ந்திருந்தார்.

அவையின் நடுப்பகுதியை அடைந்ததும் தன் முன்னிருந்த திரையை விலக்கி அவையோரைப் பணிந்தாள் ஊர்வசி. தன் கூரிய விழிகளால் அவை முழுவதையும் ஒருமுறை நோக்கியபின் ஆடத் தொடங்கினாள். ஆடலின் இடையே அவள் சயந் தனையும் நோக்கினாள். ஏனையோரைப் போலின்றிச் சயந்தன்மட்டும் தன்மீது வைத்த விழி வாங்காமல் நோக்குவதைக் கண்டு நிலைதடுமாறினாள். அதனால் ஆடலில் கொண்டிருந்த அவள் எண்ணம் சிதறியது. தன்னை எவ்வளவோ கட்டுப்படுத்திப் பார்த்தும், அவளையும் மீறி அவள் பார்வை சயந்தனிடமே சென் றது. அதனால் ஆடல் தவறியது; பாடல் தவறியது; தாள ஒலிக்கு ஏற்பத் தாள்களில் சதி அமையவில்லை; கைகள் அபிநயம் புரிய மறுத்தன. என்ன செய்வாள் பாவம்!

அவ்விருவருடைய நிலைமையையும் கண்ட அகத் தியருக்குச் சினம் பொங்கலாயிற்று. அவருடைய முக மும், கண்களும் சிவந்தன. தம்மை அவ்விருவரும் அவமதித்து அலட்சியப்படுத்தினர் என்று எண்ணி னார். அகத்தியர் அளவுக்கு மீறிய சினங்கொண்டுள் ளார் என்பதனைச் சயந்தனும், ஊர்வசியும் உணர

வில்லை. ஆனால் அவருக்கு அருகில் அமர்ந்திருந்த இந்திரன் உணர்ந்துகொண்டான். செய்வது அறியாமல், சொல்லவும் முடியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு என்ன தீங்கு விளையுமோ என நடுங்கிக் கொண்டிருந்தான்.

அதற்கேற்றாற்போல அகத்தியர் தம் ஆதனத்தினின்றும் எழுந்துகொண்டது அவனுடைய நடுக்கத்தை மேலும் அதிகரிக்கச் செய்தது.

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது

அல்லவா? எழுந்து நின்ற அகத்தியர் சயந்தனை விந்திய மலையில் மூங்கிலாக வளருமாறும், ஊர்வசியைக் காஞ்சிமா நகரத்தில் ஆடற்கணிகையாகப் பிறக்குமாறும் சபித்தார். சாப மொழிகளைக் கேட்ட அவ்விருவரும் இடியோசை கேட்ட நாகம்போல நடுங்கினர். அகத்தியரை அணுகி அவருடைய பாதங்களில் வீழ்ந்து கதறிப் புலம்பினர். தாங்கள் அறியாமையாற் செய்த பிழையைப் பொறுத்தருளும்படி வேண்டினர். அவ்விருவரும் நெடுநேரம் வேண்டியதால் மனமிரங்கிய குறுமுனிவர், 'ஊர்வசி ஆடற்கலையில் வல்லமை பெற்றுத் தலைக்கோல் கொள்ளும் பொழுது, அக்கோலுக்குரிய சிறப்புடைய மூங்கிலாக விளங்கிப் பின் இருவரும் சாபம் நீங்கப் பெறுவீர்கள்' என்று சாபவிடுதலைக்கு உரிய வழியையும் கூறினார். அகத்திய முனிவரின் சாபப்படியே சயந்தன் விந்தியமலைக் காட்டில் தலைக்கோலுக்கு ஏற்ற மூங்கிலானான். ஊர்வசியும் காஞ்சிமா நகரில் பிறந்து 'மாதவி' என்ற பெயரில் வளர்ந்து ஆடற்கலையில் தேர்ச்சி பெற்றாள். பின் அகத்தியர் அருளியபடி இரு

வரும் சாபம் நீங்கிப் போயினர் என்பது பழைய வரலாறு.

இம் மாதவியின் வழியில் வந்தவளே சித்திராபதி. இவள் கோவலனுடன் வாழ்ந்த மாதவியின் தாயாவாள்.

அருஞ்சொற்பொருள்கள் : திங்கள் - சந்திரன். செருக்கு - கர்வம். பெருக்கு - வெள்ளம். ஆயிரங்கண்ணேன் - இந்திரன். ஒப்பனே - அலங்காரம். தோரிய மடந்தை - ஆடல், பாடல்களில் முதிர்ந்த பயிற்சி உடையவள். ஆதனம் - இருக்கை. கானம் - இசைப் பாட்டு. சதி - தாளக் கட்டு.

தலைக்கோல் கொள்ளல் - ஆடல், பாடல், அழகு மூன்றுனும் நிறைந்து விளங்குபவர்க்குத் 'தலைக்கோல் அரிவை' என்னும் பட்டம் அக்காலத்தில் கொடுக்கப்பட்டது. தோற்று ஓடிய மன்னரிடமிருந்து கைப்பற்றப்பட்ட வெண் குடையின் மூங்கிற்காம்பு, பகைவர்களின் காவற்காட்டிலிருந்து வெட்டப்பட்ட மூங்கில், புண்ணிய மலையில் வளரும் மூங்கில் - இம் மூன்றில் ஒன்று தலைக் கோலாகும் சிறப்புப் பெறும். இம் மூங்கிற்கோலை நவமணிகளாலும் பொன்னுலும் அலங்கரித்துப் பூசிப்பர். இக் கோலை ஊர்வலம் செய்வித்த பின் ஆடலரங்கில் கொணர்ந்துவைத்து இதன் எதிர்நின்று ஆடுவர். இதனையே 'தலைக் கோல் கொள்ளல்' என்பர்.

**விஞக்கள்**

1. பொதிய மலையின் சிறப்புக்களைத் தெரிவி.
2. அகத்திய முனிவரின் மாண்புகளைக் கூறுக.
3. இந்திரன் ஆணையைக் கேட்டுச் சித்திரசேனன் செய்தவை யாவை ?
4. ஊர்வசியின் தோற்றத்தைக் கண்ட சயந்தனின் நிலைமை எவ்வாறு இருந்தது ?
5. அகத்தியர்க்குச் சினம் பொங்கக் காரணம் என்ன ?
6. அகத்தியரின் சாபத்தைத் தெரிவி.

## 5. கென்னடி வாழ்க்கையில்......!

'நம்முடைய ஆற்றல் முழுவதையும் சிறந்த காரியங்களைச் சாதிக்கப் பயன்படுத்துவதே வாழ்க்கையில் இன்பம் காணும் வழியாகும்' என்று ஒரு முறை முழங்கினர் உலகப் பெருந்தலைவருள் ஒருவரான ஜான் கென்னடி அவர்கள். முழங்கியதுடன் மட்டுமின்றி அவர் தம் வாழ்க்கையையும் அவ்வாறே நடத்திவந்தார். அண்மையில் அமரரான அமெரிக்க மக்கள் தலைவரான இந்தக் கென்னடியின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவற்றைப்பற்றி இப்பொழுது நாமறிவோம்.



கென்னடி

கென்னடி பிறந்த குடும்பம் மிகப் பெரியதாகும். கென்னடியின் தந்தையார் மன உறுதியும், நினைத்ததை முயன்று நிறைவேற்றி விடவேண்டும் என்னும் தளராத ஊக்கமும் படைத்தவர்; தாயாரோ அழகும், கவர்ச்சியும், அரசியலறிவும் மிக்கவர்; ஆயினும் அடக்கமுடையவர். கென்னடியின் உடன்பிறந்தவர்கள் எண்மராவர். அவர்கள் அனைவரும் வலிவும், வனப்பும், மகிழ்வும், சுறுசுறுப்பும் மிக்க சகோதர, சகோதரியராவர். கென்னடியின் வாழ்க்கை சிறப்படைவதற்குக் காரணம், இத்தகைய பலர் அடங்கிய - அன்பு நிறைந்த,

ஊக்கம் மிகுந்த - குடும்பத்துள் ஒருவராக அவர் வளர்ந்தமையே எனலாம்.

கென்னடியின் குடும்பம் ஓர் ஐரிஷ் குடும்பம் ஆகும். நாட்டுப் பற்று, தாய்மொழிப் பற்று, துணி வான செயல்களில் ஈடுபாடு, எதற்கும் கலங்காத மன உறுதி, இன்ப துன்பங்களைச் சமமாக நோக்கும் இயல்பு, சாதுரியமாகப் பேசும் சொல் வன்மை, அரசி யலில் ஈடுபாடு, உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசாமை, வாய்விட்டுச் சிரித்து மகிழும் தன்மை ஆகிய இவற்றை ஐரிஷ் குடும்பத்தாரிடையே காணலாம். இப்பண்புகளில் பெரும்பான்மையானவை கென்னடியிடம் காணப்பெற்றன.

எந்தக் காரியத்தை எப்படிச் செய்தால் நல்லது, எப்படி அச்செயல் நடைபெறுகிறது என அறிவதில் கென்னடிக்கு மிகுந்த ஆவல் உண்டு. ஒரு செயலைப் பற்றி விளக்கிக் கூறும்பொழுது தெளிவாகக் கூற வேண்டும் என்ற கருத்துடையவர். தெளிவில்லாமற் கூறப்படுவனவற்றைக் கேட்டு அவர் மனநிறைவு அடைவதில்லை. மேலும் அவருக்கு ஒவ்வொன்றையும் பற்றி நன்கு அறிய வேண்டும் என்ற அவா நிரம்பவும் உண்டு.

பல செய்திகளைப்பற்றிப் படிப்பதும், அவற்றைப் பற்றி உரையாடுவதும் கென்னடிக்கு மிகவும் பிடித்த மான செயல்களாகும். அவர் ஒன்றைப் படிக்கத் தொடங்கினாரானால் அதனைப்பற்றி மனத்தில் தெளிவு ஏற்படும்வரை படிப்பார். அச்சமயத்தில் அவர் படிப் பில் வெறிபிடித்தவர் போன்று காணப்படுவார். ஒரு நிமிடத்திற்குள் சுமார் 1200 சொற்களைப் படித்து முடித்து விடுவார். படிக்க வாய்ப்பும் வசதியும்

ஏற்படும்பொழுதுதான் அவர் படிப்பார் என எண்ண வேண்டா. நேரம் கிட்டியபொழுதெல்லாம் இடை யருது படிப்பார்.

'உலகில் நாம் ஈடுபடும் எதுவும் ஒரு நோக்க மும், நல்ல முடிவு ஏற்படும் போக்கும் உடையதாக இருக்கவேண்டும். எதையும் முயன்ருல் பெற முடியும்; முயன்று பெறத்தான் வேண்டும். எதிலும் இரண் டாவது இடம் கிடைத்தால் தனக்குப் போதும் என்ற மனப்பான்மை ஒருவனுக்கு வந்துவிடுமாளுல் அவன் வாழ்வில் என்றும் பின் தங்கியேதான் இருப் பான் என்று என் தந்தை அடிக்கடி எனக்கும், என் உடன்பிறந்தோர்க்கும் கூறிவந்தார். அவர் கூற்று உண்மை' என்பதைத் தாமே தம் வாழ்க்கையில் கண்டிருப்பதாகக் கென்னடி ஒரு முறை தெரிவித் திருக்கிருர்.

எடுத்துக்கொண்ட செயல் அருமையானதாயி னும் அதனை வெற்றியோடு நிறைவேற்றும் திறமை அவரிடம் இயல்பாகவே இருந்தது. அவர் எத்தனைத் துன்பங்கள் வந்தபோதிலும் மனம் தளர்ந்ததில்லை. தம் தமையனுரைப் போரில் இழந்தபோதும், வெளி நாட்டில் தம் சகோதரி ஒருத்தி விமான விபத்தில் உயிர்விட்டபோதும் அவர் தம் துக்கத்தை மறைத்துக் கொண்டு முகமலர்ச்சியுடன் தம்முடைய கடமைகளைச் செய்து வந்தார்.

எந்தப் பகைவரையும் அவர் ஒருபோதும் வெறுத்ததில்லை. ஆடம்பரத்தையும், வெளிவேடத்தை யும் அவர் என்றும் விரும்பியதில்லை.

கென்னடி சிறந்த இலட்சியவாதியாக விளங்கி ஞர். வாலிப வயதில் கப்பற்படையில் சேர்ந்து பணி

யாற்றவேண்டும் என்னும் இலட்சியத்தை நிறை வேற்றிக் கொண்டார். அங்ஙனம் பணியாற்றுங்கால் பற்பல வீர தீரச் செயல்களைக் கடலிடையே செய் துள்ளார் அவர். பின்னர் மக்கள் தலைவராக வந்து உலகுக்கு நல்வழி காட்டவேண்டும் என்னும் இலட்சி யத்திலும் வெற்றியே பெற்றார். தற்பொழுதைய உலகம் படும்பாடு யாது, அவ்வுலகுக்கு என்னென்ன தேவை, நாடுகள் தம்மைத்தாமே மதித்துக்கொண்டு போர் செய்வதையும், போட்டியிடுவதையும் தடுக்கும் வகை யாது, என்பன போன்றவற்றை நன்கு ஆராய்ந்து உலக சமாதானத்துக்காகப் பெரிதும் பாடுபட்டார். இளைஞர்கட்கும், சுறுசுறுப்புள்ளவர் கட்கும்தாம் உலகம் சொந்தம் என்னும் நம்பிக் கையை உலகில் வளர்த்தார்.

அமெரிக்க மக்கள் தலைவராகப் பதவியேற்றவர் களில் கென்னடிக்கு ஈடாகச் செயல்பட்டவர்கள் சிலரே இருக்க முடியும். மூன்றும் மனிதரின் நிலை மையில் நின்று தம் குற்றங்குறைகளைப்பற்றித் தாமே ஆராய்ந்து பார்க்கும் பண்பு அவரிடம் அமைந் திருந்தது. தவறுகள் செய்திருப்பின் அவை வெளிப் படும் முன்பே உணர்ந்து அவர் திருத்திக்கொண்டு விடுவார்.

தம் நாட்டின் முன்னேற்றம் மட்டுமின்றி, உலகி லுள்ள மனித சமுதாயம் அனைத்தும் முன்னேற்றம் பெறவேண்டும் என்று எண்ணிச் செயலாற்றியவர் அவர். சிற்சில சமயங்களில் அவர் தம்முடைய முன்னோடியான ஆபிரகாம் லிங்கனைப்போலத் தம் குற்றங்குறைகளைத் தாமே உணர்ந்துகொண்டு தம்மையே கேலி செய்துகொண்டதும் உண்டு.

கொடியவன் ஒருவனின் துப்பாக்கிக் குண்டுக்கு ஆளாகி உலகத்தையே துன்பவெள்ளத்தில் மூழ்கச் செய்த மக்கள் தலைவராம் கென்னடியின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் நமக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்கும்.

**அருஞ்சொற்பொருள்கள் :** அண்மை-சமீபகாலம். வலிவு - உடல் வலிமை. வனப்பு - அழகிய தோற்றப் பொலிவு. சாதுரியம்—புத்திசாலித்தனம். அவா - ஆசை. முயன்று - முயற்சி செய்து. கூற்று—உரை.

### வினாக்கள்

1. வாழ்க்கையில் இன்பம் காணும் வழியாகக் கென்னடி கூறியது யாது?
2. கென்னடியின் வாழ்க்கை சிறப்படையக் காரணமென்ன?
3. ஐரிஷ் குடும்பத்தாரிடையே காணப்படும் சிறப்பான பண்புகளைத் தெரிவி.
4. கென்னடிக்கு மிகவும் பிடித்தமான செயல்கள் யாவை?
5. கென்னடியின் படிப்பைப்பற்றிக் குறிப்பு எழுது.
6. தம் தந்தை கூறியனவாகக் கென்னடி தெரிவிப்பன யாவை?
7. கென்னடி சிறந்த இலட்சியவாதியாவார் என்பதை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.
8. கென்னடியின் குண நலன்கள் என்பதுபற்றி 20 வரிகளில் கட்டுரை ஒன்று வரைக.

———

## 6. இடமுண்டு ; இறையில்லை !

அழகிய கோவில் உண்டு; ஆனால் அதனுள் இறைவன் உரு இல்லை. இத்தகைய அற்புதத்திற்கு இடமாக விளங்குகிறது வேலூர். இவ்வூரிலமைந்துள்ள மூர்த்தியிலாக் கீர்த்தியுடைய அக் கோவிலைப் பற்றிய சில செய்திகளை நாம் இங்கு அறிவோம்.

வேலூரிலுள்ள கோட்டைக்குள் நுழைந்து வலப்புறமாகத் திரும்பி நோக்கினால் அழகுமிக்க கோவில் கோபுரம் கம்பீரமாகக் காட்சியளிக்கும். அது சலகண்டேச்சுரர் கோவில் கோபுரமாகும். அக் கோபுரத்தை இலக்காக வைத்து அருகில் சென்றோமானால், கோபுர வாயிலுக்கு வெளியே இரு சிலைகள் நிறுத்திவைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். அவ்விரு சிலைகளும் அழகிய வேலைப்பாடுகள் அமைந்த துவார பாலகர்களின் சிலைகளாகும். அச்சிலைகளின் தோற்றப் பொலிவே முதன்முதல் நம் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்துவிடும். அவைகளைக் கண்டு மகிழ்ந்தபின் சற்றே தலையை நிமிர்த்தினோமானால் அழகிய சிற்பங்களுடனும் அமையவேண்டிய அமைப்புடனும் திகழும் கோபுரத்தைக் காணலாம். கோபுரம் இறைவனின் தூல உருவல்லவா? ஆதலின் அதனைத் தொழுது வணங்கியவாறு உட்புகுந்தால், அகன்ற பரந்ததொரு முற்றத்தைக் காணலாம். அம்முற்றத்தின் தெற்குப் புறத்தில் அழகிய மண்டபம் ஒன்று நம்மை 'வா ! வா !' என அழைப்பதுபோன்று காட்சி அளிக்கும். அதன் அமைப்பிலும், அழகிலும் நம் மனத்தைப் பறி கொடுத்துவிடுவோம். நம் கால்கள் நம்மைக் கேட்

காமலேயே அம்மண்டபத்தினருகில் கொண்டுபோய் நிறுத்திவிடும்.

அம்மண்டபம் கல்யாண மண்டபம் எனக் கூறப் படுகிறது. சிற்பக் கலைத் திறமைக்கு ஓர் எடுத்துக்காட் டாக அம்மண்டபம் இலங்குகிறது. மண்டபம் முழுவ தும் பெரும் பெருந் தூண்களைக் காணலாம். அத்தூண் களின் நாற்புறங்களிலும் சிற்பங்கள் செதுக்கப் பட்டிருக்கின்றன. விக்கினம் தீர்க்கும் விநாயகப் பெரு மான், அஞ்சனை மைந்தனும் அநுமன், மகிடனைக் கொன்ற மாதேவியாம் மகிடமர்த்தினி, திருமாலின் பத்து அவதாரங்கள், பிட்சாடனர், நடராசர், சந்திர சேகரர், உமாமகேசர், அர்த்தநாரீச்சுரர் முதலான சிவபெருமானுடைய பற்பல வடிவங்கள், மற்றும் பல் வகைப் பூவேலைப்பாடுகள் ஆகிய அனைத்தும் கற் களிலே உயிர்ச் சிற்பங்களாகத் திகழ்கின்றன. மண்ட பத்தின் முன்வரிசையில் உள்ள தூண்கள் அனைத் தும் முன்கால்களைத் தூக்கிப் பாயும் குதிரைகளின் மீது அமர்ந்து சிறுத்தைகளுடன் வேல்கொண்டு போரிடும் வீரர்களின் சிற்பங்களைத் தாங்கி நிற் கின்றன. மண்டபத்தின் மேல் தளத்தையும் சிற்பி விட்டுவைக்கவில்லை. பொதுவாகக் கூறினுல், சிற்பக் கலைக்கருவூலமாக அம்மண்டபம் திகழ்கிறது என் பதை யாரும் மறுத்துரையார்.

அம்மண்டபத்தினழகில் ஈடுபட்டு ஒன்றிய மனத்தை மீட்டுக்கொண்டு கோவிலுக்குள் நுழை வோம். நுழைந்தவுடன் நம் பார்வை நேரே இறை வன் இருக்கவேண்டிய இடமாகிய கருவறைப் பக்கம் செல்லும். கண் சென்ற வழியே கால்களையும் செல்ல விட்டுக் கருவறையை அணுகியதும், நம் உள்ளத்தில்

னம் புரியாத வேதனை உண்டாவதை உணரலாம். 'எங்கும் நிறை பரம்பொருளாம் இறைவனின் திரு வுருவம் இங்கு இல்லையே' என எண்ணி மறுகுவோம். பின் அவ்விடத்தை நோக்கி வணக்கம் செலுத்தி விட்டு அதனைச் சுற்றி அமைந்துள்ள திருச்சுற்றில் வலம் வருவோம். அப்பொழுது அங்கு அமைந் திருக்கும் அமைதி நம் மனத்தில் பற்பல கேள்வி களை எழுப்பும். அதனல் குழம்பிய மனத்துடன் ஏனைய திருச்சுற்றுக்களிலும் வலம் வந்து கோவிலை விட்டு வெளியேறுவோம். வெகு காலமாக, 'அமைப்பும், சிறப்பும், அழகும் குலையாமல் விளங்கிவரும் இத் திருக் கோவில் உள்ளது; ஆனல், இதனுள் இறை வன் உருவம் இல்லையே' என்ற எண்ணந்தான் ஒவ்வொருவரின் இதயத்திலும் சுரக்கும்.

இக் கோவிலைப்பற்றிச் சொல்லப்பட்டுவரும் செவி வழிச் செய்தியை நோக்குவோம்: தற்பொழுது கோட்டை அமைந்துள்ள பகுதியைச் சுற்றி வெகு காலத்திற்கு முன் ஏரியாக இருந்தது. அவ்வேரியின் நடுவே இருந்த திட்டுப் பகுதியில் பெரிய பாம்புப் புற்று ஒன்று இருந்தது. அப்புற்றில் ஐந்தலை நாக மொன்று வசித்து வந்தது. நாகம் வாழ்ந்துவந்த அப்புற்றை நாடி ஒரு பசு நாடொறும் சென்றுகொண் டிருந்தது. அதன் காரணத்தை அறிய விரும்பிய சிலர் ஒருநாள் அந்தப் பசுவைப் பின்தொடர்ந்து சென்று ஏரியின் கரையில் நின்றுகொண்டனர். ஏரியில் இறங்குவதற்கு அவர்கட்குத் துணிவில்லை. பசுவோ, தன் வழக்கப்படி நீரில் இறங்கி நீந்திச் சென்று நடுவி லிருந்த திட்டை அடைந்தது. அத்திட்டிலிருந்த புற்றின் அருகில் சென்று நின்றவுடன், புற்றினுள்

ளிருந்து ஐந்தலை நாகம் ஒன்று வெளிவந்து தன் ஐந்து நாக்குகளையும் நீட்டிப் பால் உண்டது. அவ் வற்புதத்தைக் கரையில் நின்றவர்கள் வியப்பும் திகிலும் தோன்றக் கண்டனர். நாகம் பாலுண்டு புற்றினுள் புகுந்தபின் பசு நீரில் நீந்தி இக்கரை வந்தடைந்தது. அதனை உற்றுநோக்கிய கரையில் நின்றவர்கள் அதன் மடியில் ஐந்து காம்புகள் இருப்பதைக் கண்டு மேலும் வியந்தனர். தாம் கண்ட அதிசயங்களை அப்பகுதியை ஆண்டுவந்த நாயக்க மன்னரான பொம்மிரெட்டிக்குத் தெரிவித் தனர். பொம்மிரெட்டி சிவபெருமானிடம் எல்லை யற்ற பக்தியும், ஈடுபாடும் உடையவர். அதனால் அவ்வதிசயத்தின் உண்மையைத் தமக்குத் தெரிவித் தருளுமாறு சிவபெருமானை வேண்டித் தவஞ் செய்தார். அவர் தவத்தினைக் கண்டு உளமகிழ்ந்த இறைவன் கனவில் தோன்றி, 'புற்றில் இருப்பவன் யானே. புற்றினை அகற்றினால் அதனுள் என் இலிங்க உருவை யும், அதனடியில் பெரும்புதையலையும் நீ காணலாம். அப்புதையலைக்கொண்டு எனக்கு அங்கொரு கோவில் அமைப்பாயாக' என்று திருவாய்மலர்ந்தருளி மறைந் தான். விழித்தெழுந்த மன்னர் திட்டையடைந்து புற்றினை அப்புறப்படுத்தவே, அதனுள் இலிங்க உருவத்தையும், புதையலையும் கண்டறிந்தார். உடனே இறைவன் கனவில் கட்டளையிட்டபடி கோவிலைக் கட்டத் தொடங்கினார். சுக்கில ஆண்டு (கி. பி. 1247) பங்குனித் திங்கள் பத்தொன்பதாம் நாளன்று கோவிலுக்கு அடிக்கல் நாட்டப்பெற்றது. அதன்பின் வட இந்தியச் சிற்பியாரான பத்திரிகாசி அமாம் என்பவரின் தலைமையில் ஒன்பது ஆண்டு

களில் கோவில் கட்டி முடிக்கப்பட்டது. புற்றிலிருந்து கண்டெடுக்கப்பட்ட இலிங்கம் அதனுள் பிரதிட்டை செய்யப்பட்டுச் சலகண்டேச்சுரர் என்ற திருநாமம் சூட்டப்பட்டது. பொம்மிரெட்டி தலைமைச் சிற்பி யாருக்குப் பொன்னும் பொருளும் நிரம்ப வழங்கி மகிழ் வோடு இருந்தார்.

சில மாதங்கள் கடந்தபின் தலைமைச் சிற்பி யாரை நாடி அவருடைய மகன் வந்தான். பொம்மி ரெட்டியின் ஆதரவில் தன் தந்தையார் சிறப்போடு வாழ்வதைக் கண்டு மகிழ்ந்தான். தந்தையாரைப் போலவே சிற்ப நூல் அறிவு படைத்த அவன், வரு வது அறிந்து முன்னதாக உரைப்பதில் வல்லமையும் பெற்றிருந்தான். தந்தையார் நிறுவிய கோவிலைப் பார்வையிட்டபின் அவன் அதனுடைய வருங்காலத் தைப்பற்றியும் சிந்தித்து மன்னரை அணுகி, 'தாங்கள் அரும்பாடுபட்டு எழுப்பிய கோவிலுக்கு அழிவு நேரிடக் கூடும். ஆதலால் அதனைத் தடுக்கச் சுற்றிலும் வலிமைமிக்க கோட்டையை எழுப்புதல் நலம்' என்றுரைத்தான். மன்னரும் அவ்வாறே கோவிலைச் சுற்றிக் கோட்டையைக் கட்டிமுடித்தார்.

சின்னாட்கள் கடந்தபின் சலகண்டேச்சுரர் பொம்மிரெட்டியின் கனவில் தோன்றிக் கோவிலையும், கோட்டையையும் தெங்கனிக் கோட்டையை ஆண்டு வந்த வேங்கடதேவ மகாராயலு என்பவரிடம் ஒப் படைத்து விடும்படி கூறவே அந்த மன்னரும் அவ்வாறே செய்தார். வேங்கடதேவ மகாராயலு வின் ஆட்சிக்குட்பட்டபின் அக்கோட்டை இராய வேலூர்க் கோட்டை என அழைக்கப்படலாயிற்று. கி. பி. 17ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை

இராயலுவின் சந்ததியர் வேலூரை ஆண்டனர். பின் அது பீசப்பூர்ச் சுல்தான்களின் வசமாயிற்று. சுல்தான் களில் ஒருவரான அப்துல்கான் சலகண்டேச்சுரருக்குக் கீழே விலை மதிப்பிலா இரத்தின வகைகள் புதைக்கப் பட்டுள்ளன என்ற பொய்ச்செய்தியை மெய்யென நம்பி அவ்வீசரின் உருவைக் கோவிலைவிட்டு அப்புறப் படுத்திவிட்டார். அதன்பின்னர் வேலூரைக் கைப் பற்றிய மராட்டிய மன்னர்களின் ஆட்சியில் சல கண்டேச்சுரர் மீண்டும் பிரதிட்டை செய்யப்பட்டார். கி. பி. 1708க்குப்பின் ஆர்க்காட்டு நவாபுகளின் ஆட்சியில் வேலூர்க்கோட்டை இருந்து வந்துள்ளது. அக்காலத்தில் சலகண்டேச்சுரர் மீண்டும் அகற்றப் பட்டிருக்க வேண்டும்.

எஃது எங்ஙனமிருப்பினும் சிற்பியாரின் மகன் கூறியது பொய்யாகவில்லை என்பதை இடமிருந்தும் இறையில்லாத வேலூர்க் கோவிலினின்றும் நாம் அறியலாம்.

**அருஞ்சொற்பொருள்கள் :** கோமகன் - அரசன். கீர்த்தி - பெருமை. இலக்கு - அடையாளப் பொருள். பொலிவு - அழகு. தூல உரு - பருமைத் தோற்றம். விக்கினம் - இடை யூறு. கருவூலம் - பொருளைச் சேர்த்துவைக்கும் இடம். கருவறை - கர்ப்பக் கிருகம். மறுகுதல் - கலங்குதல். திருச் சுற்று - பிராகாரம். செவிவழிச் செய்தி - கர்ணபரம்பரைக் கதை. அடிக்கல் - அத்திவாரக்கல். திங்கள் - மாதம்.

**வினாக்கள்**

1. எத்தகைய அற்புதத்திற்கு இடமாக விளங்குகிறது வேலூர்?
2. கலியாண மண்டபத்தின் சிறப்பை விவரி.
3. திருச்சுற்றுக்களில் வலம் வரும்பொழுது நம் மன நிலை எவ்வாறு இருக்கும் என ஆசிரியர் கூறுகிறார்?

4. பசுவைப் பின்தொடர்ந்தவர் கண்ட அதிசயத்தை விவரி.
5. வேலூர்க் கோவில் கட்டப்பட்ட காரணத்தைச் சுருக்கமாகக் கூறு.
6. வேலூர்க் கோட்டை கட்டப்பட்டதேன்?
7. வேலூர்க் கோவிலில் மூர்த்தியில்லாமைக்குக் காரணங்கள் யாவை?
8. இராயவேலூர்க் கோட்டை - பெயர்க் காரணம் கூறு.

---

## 7. நட்புக்கடன்

கோதாவரிக் கரையில் இலகுபதனன் என்னும் காகம், மந்தரன் என்னும் ஆமை, இரணியகன் என்னும் எலி இவை மூன்றும் நெருங்கிய நட்புடன் வாழ்ந்துவந்தன. ஒருநாள் இலகுபதனன் ஒரு மரத்தின் மீது அமர்ந்து இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டு இருந்தது. அப்பொழுது அஃது அச்சம் மேலிட்டுத் 'தோழர்களே! நீங்கள் ஏற்றவிடத்தில் மறைந்து கொள்ளுங்கள்!' என்று கூறிற்று. அதனைக் கேட்டு மந்தரன் நீருக்குள் புகுந்து கொண்டது. இரணியகனே தனது வளைக்குள் பதுங்கிக் கொண்டது.

பின்பு காகம் அம்மரத்தின் உச்சியிலிருந்து மீண்டும் பார்க்கையில் யாதொன்றும் காணப்படவில்லை. அதனால் மந்தரனும், இரணியகனும் வெளியே வந்து, இலகுபதனனுடன் உரையாடிக் கொண்டிருந்தன. ஆங்கு அவற்றின் அருகில் சித்திராங்கன் என்னும் கலைமான் ஒன்று வந்து, 'நான்

வேடர் பயத்தால் உங்களைச் சார்ந்திருக்கலாமென்று வந்தேன்' என்றது.

அதனைக் கேட்டு மந்தரன், 'அன்பா! இஃது உன் வீடு. நாங்கள் உன் தோழர்கள். நீ இங்கே மகிழ்வோடிருக்கலாம்' என முகமலர்ந்து மனங்கலந்த இன்சொல் கூறியது. கூறவே, சித்திராங்கன் அம் மூன்றுடனும் நட்புக்கொண்டு வாழ்ந்து வந்தது.

ஒரு நாள் சித்திராங்கன் புல் மேய வேறோரிடம் போயிற்று; சாயுங்காலம் ஆகியும் அக்கலைமான் திரும்பி வரவில்லை. மேயச் சென்ற சித்திராங்கன் இன்றைக்கு ஏன் வரவில்லை என்று மந்தரன் கவலைப் பட்டது. செய்தியை அறிந்து இலகுபதனனும், இரணியகனும் கவலை எய்தின.

மறுநாள் விடியற்காலையில் இலகுபதனன் பறந்து சென்று, நாற்புறங்களிலும் தேடிப் பார்க்கையில் சித்திராங்கன் ஒரு வலையில் அகப்பட்டுக்கொண் டிருப்பதைக் கண்டது. கண்டதும் நெருங்கிச்சென்று, 'நண்பா! உனக்கு இந்தத் துன்பம் எப்படி நேர்ந்தது? என வினவியது.

சித்திராங்கன் இலகுபதனனை நோக்கி, 'தோழா! இப்போது இதனைக் கேட்டுப் பயனில்லை. நீ போய் இரணியகனை விரைவில் அழைத்துவரின் அவன் வேடன் வருவதற்குள் என்னைப் பிணித்திருக்கும் கயிற்றை அறுத்து விடுவிப்பான். வேடன் வந்துவிட்டால் நான் தப்பமுடியாது' என்று கூறிற்று.

உடனே இலகுபதனன் விரைந்து சென்று, நடந்த காரியத்தைச் சொல்லி இரணியகனை அழைத்து வந்தது. வந்த இரணியகன் சித்திராங்கனைப் பார்த்துச் 'சமர்த்தனாகிய நீ எப்படி வலையில் அகப்பட்டாய்?'

என்று கேட்டது. அதற்குச் சித்திராங்கன், 'என்ன வல்லமை இருந்தாலும் வருவது வரும். தோழா! இப்போது என்னை விரைவில் விடுவி. பேசி நிற்கும் நேரமன்று, இஃது' என்றது.

இதற்குள் மந்தரனும் அங்கே வந்து இரணியகனை நோக்கி, 'மித்திரா காலம் கடத்தாதே. வேடன் வந்தால், நாமெல்லாரும் ஓடிப்போக நேரிடும். வலையில் சிக்கிய சித்திராங்கனை வேடன் பிடித்துக்கொண்டு சென்று விடுவான். 'மனத்தில் இருப்பதைக் குறிப்பால் உணரும் நண்பனும், பிறர் துக்கம் உணரும் செல்வ முடையவனும் கிடைப்பது அருமை' என்று சொல்லு கையில் வேடன் விரைவில் காலனைப்போல் அவ் விடத்தை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

இலகுபதனன் அதனைக்கண்டு இரணியகனைப் பார்த்து, 'நண்பா! வேடன் நெருங்கிவிட்டபடியால் நீ விரைந்து காரியத்தை முடிப்பாயாக' என்றது. இரணியகனும் மிகு விரைவுடன் வலையை அறுத்த வுடனே, சித்திராங்கன் ஓட்டம் பிடித்தது. அதனைக் கண்ட வேடன் துயரமடைந்து நான்கு திசைகளையும் பார்த்தான். ஒரு திசையில் மந்தரன் மெல்லமெல்ல ஊர்ந்துகொண்டிருந்தது.

உடனே அவ்வேடன் விரைந்து சென்று மந்தர னைப் பிடித்துத் தன் வில்லில் சேர்த்துக் கட்டிக் கொண்டு சிறிதே மகிழ்வுடன் நடக்கலானான். அதனைக் கண்ட சித்திராங்கனும், இரணியகனும், இலகுபத னனும் மந்தரனை விடுவிக்க வழி தேடலாயின. அப் போது இரணியகன் மற்ற இருவரையும் நோக்கி, 'ஏரிக்கரையில் இறந்து கிடப்பதைப்போல் சித்திராங் கன் படுத்துக்கிடக்க வேண்டும். அதன்மீது இலகு

பதனன் உட்கார்ந்துகொண்டு பொய்யாக அதனைக் கொத்தவேண்டும். அக்காட்சியை வேடன் காண்பான். உடனே மந்தரனைப் பூமியில் வைத்துவிட்டுச், சித்திராங் கனைப் பிடிக்க வருவான். அப்பொழுது நான் மந்த ரனின் கட்டை அறுத்துவிடுவேன். அவ்விதம் நான் அறுத்தவுடன் மந்தரனை நீருக்குள் ஓடிப்போய் மூழ்கிவிடும்படி கூறவேண்டும்' என்றது.

அவ்வுரையைக் கேட்டுச் சித்திராங்கனும், இல குபதனனும் மகிழ்ந்து இரணியகன் கூறியவாறே நடித்தன; மந்தரனும் விடுபட்டது. பிறகு அந்த வேடன் வாய்த் தவிடும் போய் அடுப்புக்கு நெருப்பும் இழந்தவன்போல் வெட்கி, 'ஐயோ! கிட்டாத பெரும் பொருளுக்கு ஆசைப்பட்டுக் கிட்டிய சிறுபொருளையும் இழந்தேனே', என்று எண்ணி மனம் சோர்ந்து நடந்து சென்றான். நட்புப் பூண்டொழுகிய நான்கும் மிகவும் மகிழ்வடைந்து முன்னிலும் அதிக நட்புடன் வாழ்ந்து வந்தன.

**அருஞ்சொற்பொருள்கள்:** *அச்சம் மேலிடல்-பயம் அதிக ரித்தல். சார்ந்து இருத்தல் - சேர்ந்து வாழ்தல். சாயுங் காலம் - அந்திநேரம். பிணித்து - கட்டி. சமர்த்தன் - அறி வில் வல்லவன். மித்திரன் - நண்பன். காலன்-எமன். துயரம் - துக்கம்.*

**வினாக்கள்**

*1. கோதாவரிக் கரையில் நட்புடன் வாழ்ந்து வந்தவை எவை எவை?*

*2. மந்தரன் கவலைப்படக் காரணம் யாது?*

*3. சித்திராங்கனை நோக்கி இலகுபதனன் வினவியது யாது? அதற்குச் சித்திராங்கன் கூறிய விடை யாது?*

4. சித்திராங்கன் எவ்வாறு விடுவிக்கப் பெற்றது ?
5. வேடனிடம் அகப்பட்ட மந்தரனை விடுவிக்க இரணி யகன் கூறியவை யாவை ?
6. வேடன் மனம் சோர்ந்து நடந்தது ஏன் ?

---

## 8. வானொலியும் மார்க்கோனியும்

உலகம் விஞ்ஞானப் பாதையில் விரைந்து சென்று கொண்டிருக்கிறது. நாடொறும் புதுப்புதுச் செய்திகள் வெளிவந்த வண்ணமிருக்கின்றன. விஞ்ஞானத்தின் துணையால் மனிதன் இயற்கையை வெல்லத் தொடங்கியுள்ளான்; அணுவின் ஆற்றலையுணர்ந்து அதன்மூலம் பல செயல்களைச் சாதித்து வருகிறான்; வானவெளியைத் தரைபோலப் போக்குவரவுக்குப் பயன்படுத்தி வருகிறான்; ஆழ்கடலைக் குடைந்து சென்று வந்து பல அற்புதமான செய்திகளை வெளியிடுகிறான்; செயற்கைக் கோள்களைப் படைத்து அவைகளை வான வீதியில் சுற்றிவரச் செய்கிறான். இவையெல்லாம் விஞ்ஞானத்தின் சக்தியேயல்லவா?

விஞ்ஞான முன்னேற்றத்தின் பயனாக நம்முடைய அன்றாட வாழ்வில் பயன்படுபவை பல உள்ளன. அவற்றுள் வானொலிப்பெட்டி, தொலைபேசி, மின் விளக்கு, மின் அடுப்பு முதலியவைகளை இன்றியமையாதனவாகக் கூறலாம். இவை ஒவ்வொன்றும் நமக்கு மிகவும் பயன் தருவனவாய் விளங்குகின்றன. எழுதவும், படிக்கவும் ஒளிதந்து உதவும் மின் விளக்கு, உணவுப்பொருள்களை விரைவில் விதம்விதமாக ஆக்க உதவும் மின் அடுப்பு, இருக்கும் இடத்திலிருந்தே

நாம் பேச விரும்புபவருடன் தொடர்புகொள்ள உதவும் தொலைபேசி, உழைத்துச் சோர்வுற்றுக் களைப்புடன் வீடு அடையும் நமக்கு உற்சாகத்தையும், உவகையையும் அளிக்கும் வானொலிப்பெட்டி, இவற்றை 'வீட்டு நண்பர்கள்' என்று குறிப்பிடுவதில் தவறில்லையே ?

வானத்தின் வழியே ஒலிபரப்பப்பட்டுவரும் ஒலியையே நாம் வானொலி எனக் குறிப்பிடுகிறோம். இவ்வானொலி எவ்வாறு ஒலிபரப்பப்படுகிறது, எவ்வாறு இயங்குகிறது, எவ்வாறு நாம் அதனைக் கேட்கிறோம் என்பதனைப்பற்றி இங்குச் சுருக்கமாக அறிவோம்.

ஒருவர் பாடும், அல்லது பேசும் ஒலியை ஒலிவாங்கி (மைக்) என்னும் கருவிமூலம் ஏற்றுப் பதிவு



செய்து பின் அதனைப் பரப்புவதற்கு வேண்டிய செயல்களைச் செய்யும் இடம் வானொலி நிலையம் எனப்படும்.

இவ்வானொலி நிலையத்தில் தனியறை ஒன்றில் ஒலி பரப்புவதற்குத் தக்க சாதனங்கள் அமைக்கப்பட்டிருக்கும். அவற்றை ஒலி அனுப்பிகள் என்பர். அவற்றின்மூலம் ஒலியைக் காற்றில் கலக்கச் செய்வார்கள். அங்ஙனம் கலக்கச் செய்யும் இடத்தை ஏரியல் நிலையம் என அழைப்பர்.

காற்றில், ஈதர் எனப்படும் ஒரு பொருள் உண்டு. இந்த ஈதர் ஒரு விநாடிக்குச் சுமார் மூன்று இலட்சம் கிலோ மீட்டர்கள் வீதம் செல்கிறது. ஏரியல் நிலையத்தின் வாயிலாகக் காற்றில் கலக்கப் பெறும் ஒலியை இந்த ஈதர் மிக விரைவில் எல்லா இடங்களிலும் பரப்புகிறது. ஈதரால் பரப்பப்பெறும் அவ்வொலியைத் திரும்பப் பெற்று வெளியிடும் சாதனத்தைத்தான் வானொலிப் பெட்டி (ரேடியோ) என அழைக்கிறோம். அப்பெட்டிக்குள் ஈதரிலுள்ள ஒலியை ஏற்கும் கருவியும், ஏற்ற அவ்வொலியை வெளிவிடும் கருவியும் நுட்பமாக அமைக்கப்பட்டுள்ளன. நாம் ஓரிடத்தில் நடைபெறும் நிகழ்ச்சியைக் கேட்க விரும்பினால் அவ்விடத்திற்குரிய அலைவரிசையை அறிந்து பெட்டியிலுள்ள முள்ளைத் திருப்புதல் வேண்டும். முன் பக்கமுள்ள கண்ணாடித் திரையில் அலைவரிசைகள் பற்றிய விளக்கமும், அவைகளைச் சுட்டிக்காட்டுவதற்குரிய முள்ளும் அமைக்கப்பட்டிருக்கும். தக்க விசைகளைத் திருப்பிக் குறிப்பிட்ட இடத்தில் நடைபெறும் நிகழ்ச்சியைக் கேட்டு நாம் மகிழலாம்.

வானொலியின் வாயிலாகப் பல நன்மைகள் விளைகின்றன. மிகச் சில விநாடிகளில் செய்திகளை உலகெங்கும் பரப்பக்கூடிய சாதனம் வானொலி ஒன்றே ஆகும். துதிப் பாடல்கள், இசை, நாடக நிகழ்ச்சி

கள், உலகச் செய்திகள், உள்நாட்டுச் செய்திகள், வானிலைபற்றிய விவரங்கள், பாடபோதனைகள், பொருள்களின் அன்றாட விலைவாசி நிலைமைகள் முதலியவற்றை வானொலிமூலம் கேட்கிறோம். மற்றும் இதன் உதவியால் கடல் நடுவே செல்லும் கப்பல் களுக்கும், வானிடையே பறக்கும் விமானங்களுக்கும் செய்திகளைத் தெரிவிக்கவும், அவ்வாறே அவைகளி னின்று திரும்பப் பெறவும் முடிகிறது.

இத்துணைப் பயன்களைத் தரும் இவ்வானொலி யாகிய அற்புதப் பொறியைக் கண்டுபிடித்தவர் இரு பத்தேழே ஆண்டுகள் நிரம்பப் பெற்ற **குக்லியல்மோ மார்க்கோனி** ஆவார். இவர் இதாலி நாட்டவர். இவர் கி. பி. 1875ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 25ஆம் நாளன்று பிறந்தவர். இளவயது முதலே இவரு டைய மனம் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தது. வீட் டுக்கு அருகிலிருந்த மலைக் காடுகட்குச் சென்று, பல்வகையான காய்களையும், கனிகளையும் சேகரித்து வந்து, அவைகளைப் பிழிந்து காய்ச்சி எழுதுவதற்கு உதவும் மையைக் (இங்க்) கண்டறிந்தார்.

பல புதிய பொருள்களைக் கண்டறிந்து உலகத் தையே வியப்படையச் செய்துகொண்டிருந்த எடிசன் என்ற அமெரிக்க விஞ்ஞானியைப் போலவே தாமும் மக்களுக்குப் பயன்படக்கூடிய அற்புதமான கருவி ஒன்றைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற ஆசை இவரிடம் வளர்ந்தது. எதனைக் கண்டுபிடித்தால், அது மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படும் என ஆழ்ந்து சிந்திக்கலானார். அந்நிலையில் சாமுவேல் மோர்ஸ் என்பவர் கண்டுபிடித்த தந்தி எழுத்துக்கள், கம்பிகளின் வழியே நெடுந்தூரம் அனுப்பப்பெற்று

வந்ததை அறிந்தார். செய்திகளைக் கம்பியின் உதவி யில்லாமல் அனுப்ப முடியுமா எனச் சிந்தித்து அம் முறையைக் கண்டறிவதில் ஈடுபட்டார்.

ஈதர் மூலம் ஒலி அலைகளைக் குறைந்த அளவிலும் நீண்ட அளவிலும் அனுப்பமுடியும் என முதன்முதல் கண்டுபிடித்தார். அதனைத் தொடர்ந்து அவ்வாறு அனுப்பப்பெறும் ஒலியைச் சிறிது தூரத்தில் இருப் பவர் கம்பியின் உதவியின்றிக் கேட்பதற்கு உதவும் படியாக ஒரு கருவியையுஞ் செய்தார். பின்னர், அக் கருவியை மேலும் சீர்திருத்தியமைத்து, முதன்முறை யாகச் சுமார் 91 மீட்டர் தூரத்திலுள்ள ஒருவர்க்குச் செய்தியை அனுப்பிக் கேட்குமாறு செய்தார். பின் தூரத்தை அதிகரித்துக் கொண்டே சென்று பரிசோ தனைகள் பல செய்து வெற்றிகண்டார். அதனை அறிந்த பலநாட்டவரும் அவரை வாயாரப் புகழ்ந்தனர்.

கம்பியின் உதவியில்லாமல் செய்திகளை அனுப் புவதில் சில தீங்குகளும் விளைந்தன. ஒருவர் மற்ற வர்க்கு அனுப்பும் செய்தியை மூன்றுமவரும் கேட்க முடிந்தது. அதனல் செய்திகளை மறைவாக அனுப்ப முடியவில்லை. ஆதலால் செய்தியனுப்பும் கருவி, செய் தியைத் தெரிவிக்கும் கருவி இரண்டையும் ஒரே நேரத் தில் குறிப்பிட்ட செய்தியைத் தெரிவிக்கும்படியாக மாற்றியமைத்தார். இதனல் செய்தி அனுப்புவோரும், கேட்போரும் பிறர் அறியாவண்ணம் தம் எண்ணங் களைத் தெரிவித்துக் கொள்ள முடிந்தது.

பின் மார்க்கோனி அத்துடன் மனநிறைவு கொண்டுவிடவில்லை. மேன்மேலும் ஆராய்ந்து அனுப்புவோர் பலவிதமான ஒலிகளை அனுப்பினலும்

கேட்போர் குறிப்பிட்ட சில ஒலிகளை மட்டுமே கேட்கும் படியாகச் செய்தார். அந்த முயற்சியிலும் வெற்றி ஏற்பட்டு மார்க்கோனியின் புகழ் உலகெங்கும் பரவியது. அதன் பயனாக, எடிசன் அம்முயற்சியைப் பின்பற்றி ஆராய்ந்து தற்பொழுதுள்ள வானொலிப் பெட்டியைக் கண்டுபிடித்தார்.

இவ்விரு விஞ்ஞான மேதைகளுக்கும் உலகத்தவர் என்றென்றும் கடமைப்பட்டவராவர்.

அருஞ்சொற்பொருள்கள்: ஆற்றல் சக்தி. கோள் கிரகம். சாதனங்கள் - கருவிகள். இத்துணை - இவ்வளவு. பொறி - இயந்திரம்.

### வினாக்கள்

1. விஞ்ஞானத்தால் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை விளக்குக.
2. 'வீட்டு நண்பர்கள்' எனக் குறிப்பிடப் படுபவை யாவை? ஏன் அவைகளை அவ்வாறு அழைக்கலாம்?
3. வானொலி நிலையம், ஏரியல் நிலையம் இவற்றின் வேலைகள் யாவை?
4. வானொலிப் பெட்டி நமக்கு எவ்வாறு செய்திகளைத் தெரிவிக்கிறது?
5. வானொலிப் பெட்டியால் விளையும் பயன்களைக் கூறுக.
6. வானொலியைக் கண்டுபிடித்தவர் யார்? அவருடைய இளம் பருவத்தைப்பற்றி விவரி.
7. மார்க்கோனி எவ்வாறு படிப்படியாக ஆராய்ந்து வானொலியைக் கண்டறிந்தார் என்பதைத் தெரிவி.
8. தற்பொழுதைய வானொலிப் பெட்டியைக் கண்டு பிடித்தவர் யார்?
9. சிறு குறிப்பு எழுது :—ஒலிவாங்கி, ஈதர்.

———

# 9. மெகல்லனின் கடற்செலவு

உலகம் உருண்டையாக உள்ளதா, தட்டையாக உள்ளதா என்ற ஐயம் சில நூற்ருண்டுகட்கு முன் ஐரோப்பியரிடையே தோன்றியது. அதனைப்பற்றி வாதங்களும், எதிர்வாதங்களும் நிகழ்ந்தன. அந்நிலையில் கலிலியோ என்னும் விஞ்ஞானப் பெரியார் 'பூமி உருண்டை வடிவமுடையது' என்னும் உண்மையைக் கூறினர். அத்துடன் பல உண்மைகளையும் எடுத்துக் காட்டி விளக்கினர். ஆனல் அப்பொழுது இருந்தவர்கள் அக் கூற்றுக்களை ஏற்க மறுத்துக் கலிலியோவை இகழ்ந்தனர். அதனல் அவர் மனமுடைந்து மாண்டார். ஆயினும் அவர் கூற்று பிற்காலத்தில் உண்மையாயிற்று. அதனை மெய்ப்பித்துக்காட்ட உதவியவர் பெர்டிணண்டு மெகல்லன்.

பெர்டிணண்டு மெகல்லன் போர்ச்சுகல் தேசத்தைச் சேர்ந்தவர். இவர் அத்தேசத்திலுள்ள வில்லா-டி-சாப்ரோசா என்னும் கிராமத்தில் மேன்மையான குடும்பத்தில் பிறந்தார். இளம்பருவத்தில் கூர்மையான அறிவும், துணிவும், சுறுசுறுப்பும் உடையவராக இவர் காணப்பட்டார்.

இந்திய நாட்டின் செல்வச் செழிப்பை அறிந்து வளங்கொழிக்கும் அதனைக் காணவேண்டும் என்ற எண்ணம் இவர் மனத்தில் வளரலாயிற்று. வாஸ்கோ-ட-காமா ஆபிரிக்காவைச் சுற்றிக்கொண்டு கடலில் கீழ்த்திசையில் நெடுந்தூரம் பயணம் செய்து இந்தியாவுக்கு வழியைக் கண்டுபிடித்தார். தாம் ஏன் மேற்குத் திசையில் பயணம் செய்து இந்தியாவுக்கு வேறு வழியைக் கண்டுபிடிக்கக் கூடாது என எண்ணி

அதற்கு வேண்டிய திட்டங்களையெல்லாம் வகுத்துக் கொண்டார்.

கடற்பயணத்துக்குச் சில கப்பல்கள் வேண்டும்; ஏராளமாகப் பணம் வேண்டும்; உதவிக்குப் பல ஆட்கள் வேண்டும்; எல்லாவற்றுக்கும் மேலாக அரசரின் அனுமதியும், ஆதரவும் வேண்டும். இவை களை நன்கு உணர்ந்த மெகல்லன் போர்ச்சுகல் மன்னருக்குத் தம் விருப்பத்தைத் தெரிவித்து, மேற் கண்ட உதவிகளைச் செய்யவேண்டுமென வேண்டிக் கொண்டார்.

வாஸ்கோ - ட - காமாவுக்கு எல்லாவகையிலும் உதவி செய்த மன்னர் என்ன காரணமோ தாம் உதவி செய்ய முடியாது என மறுத்து விட்டார். அதனால் மனமுடைந்த மெகல்லன் தாய்நாட்டைவிட்டு வெளியேறி ஸ்பெயின் நாட்டிற்குச் சென்றார்.

கி. பி. 15ஆம் நூற்றாண்டில் 'இந்தியத் தீவுகள்' என்றழைக்கப்பட்ட பகுதிகள் ஸ்பெயினின் ஆட்சிக்கு அடங்கியிருந்தன. அவைகளை ஆளும் குழுவுக்குத் தலைவராக ஜான் ரோட்ரிகஸ் - டி - போன் செகா என்ற பாதிரியார் விளங்கினார். அவருக்கு ஸ்பெயின் நாட்டு மன்னரிடம் அளவற்ற செல்வாக்கு இருந்தது. அவர் சொல்லை மன்னர் தட்டி நடப்பதில்லை. இந்த விவரங்களை மெகல்லன் அறிந்தார். அப்பாதிரியா ரிடம் சென்று தம் கருத்துக்களைக் கூறித் தமக்கு உதவிசெய்யும்படி கேட்டார். அப்பாதிரியாரும் மன்ன ரைக் கண்டு மெகல்லனுக்குத் தேவையான உதவிகள் கிடைக்குமாறு செய்தார்.

மன்னரும், 'நீர் கண்டுபிடிக்கும் இடம் எதுவாயி னும் அங்கே என் நாட்டின் சிறப்பு, என் ஆட்சிச்

சிறப்பு இவற்றை முழுமனத்துடன் சொல்லிப் பரப்ப வேண்டும். வியாபாரத்தின் மூலமாகவோ, வேறு வழியாகவோ நீர் கொண்டுவரும் பொருள்களில் இரு பதில் ஒரு பங்கு உமக்குக் கொடுக்கப்படும். நீர் கண்டுபிடிக்கும் தீவுகளை என் நாட்டுடன் நீர் இணைத்து வைப்பீராகில், வளமான இரண்டு தீவுகளி னுடைய வருமானத்தில் பதினைந்தில் ஒரு பங்கு ஆயுட் காலம் முழுவதும் உமக்குக் கொடுக்கப்படும். அத் துடன் நீர் கண்டுபிடிக்கும் தீவுகட்கு நீரே தலைவராக ஆக்கப்பட்டு, அளவுகடந்த ஊதியமும் தரப்படும். இவைகளுக்கு நீர் உடன்பட்டால் உதவி பெறலாம்' எனக்கூறினர்.

மன்னர் கூறியவற்றை மெகல்லன் முழுமனத் துடன் ஏற்றுக்கொண்டார். அதற்கான பத்திரங் களிலும் கையொப்பமிட்டுக் கொடுத்தார்.

மன்னரின் ஆணைப்படி கன்செப்ஷன், சாண்டி யாகோ, சாந்தோ அந்தோனியோ, டிரினிடாட், விக் டோரியா என்னும் ஐந்து கப்பல்கள் மெகல்லனிடம் ஒப்படைக்கப்பட்டன. விக்டோரியா கப்பலின் தலை மைப் பொறுப்பை மெகல்லன் ஏற்றுக்கொண்டார். ஏனைய கப்பல்கட்கு ஸ்பானிய மாலுமிகள் தலைவர்க ளாக அமர்த்தப்பட்டனர். இவர்களைத் தவிர 270 ஆட்களும் கப்பல்களில் ஏற்றப்பட்டனர்.

கி. பி. 1519ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் பத்தாம் நாள் மெகல்லனின் தலைமையில் ஐந்து கப்பல்களும் தென்மேற்குத் திசைநோக்கிப் போகத்தொடங்கின. கானரீஸ் என்னும் எரிமலைத் தீவுகளின் இடைவழியே சென்று மெகல்லன் தென் அமெரிக்காவிலுள்ள லாப் ளாடா ஆறு கடலில் கலக்குமிடத்தை நெருங்கினர்.

ஆற்றினுட்புகுந்து சில நாட்கள் பயணம் செய்த பின்பே, அது தாம் நினைத்தபடி கண்டத்தின் மறுபக்கம் செல்லும் நீர்வழி அன்று என்பதை மெகல்லன் கண்டுகொண்டார். அப்பொழுது குளிர்காலமும் தொடங்கி விடவே நீர் சிற்சில இடங்களில் உறைய லாயிற்று. ஆகவே, மெகல்லன் கரையை அடைந்து தங்கும்படி அனைவருக்கும் உத்தரவிட்டார்.

கரையில் மாலுமிகள் சிலர் கப்பல்களில் பழுதுற்ற பகுதிகளைப் புதுப்பிக்கலாயினர். மற்றும் சிலர் உள் நாட்டுக்குள் சென்று உணவு, குடிநீர் முதலியவற்றைத் தேடித் திரட்டலாயினர். அவர்கள் தங்கிய பகுதி யிலிருந்த சுதேசி மக்கள் உயரமானவர்களாயும், அகன்ற பெரிய பாதங்களையுடையவராயும் இருந்தனர். அங்குள்ள மிருகங்களும் அவ்வாறே இருந்தன. அதனால் அப்பகுதிக்குப் 'படகோனியா' என்று மெகல் லன் பெயரிட்டார்.

குளிர்காலம் நீங்கியதும் மெகல்லன் மீண்டும் அட்லாண்டிக் பெருங்கடலை அடைந்து, கரையோர மாகத் தெற்கு நோக்கிப் பயணமாகித் தென் அமெரிக் காவின் தென் முனையை அடைந்தார். அங்கிருந்து பின்பு கால்வாய் ஒன்றின் மூலம் மேற்குநோக்கிச் செல்லும்பொழுது காற்று பலமாக வீசத் தொடங் கவே, கடல் மிகப் பயங்கரமாகக் கொந்தளித்து கப்பல்கள் அங்கும் இங்குமாக அலைக்கழிக்கப்பட்டன. இவைகளால் மேற்கொண்டு பயணம் செய்யாமல் கரை யை அடைந்து ஓரிடத்தில் தங்கினர். பின் நிலைமையை ஆராய்ந்து வரும்படி 'சாண்டியாகோ' என்னும் கப்பலை அனுப்பிவைத்தார். அது சிறிது தூரம் சென்றதும் கடுங்காற்றால் தாக்கப்பட்டுத் தீவு ஒன்றில் மோதிச்

சுக்கல் சுக்கலாயிற்று. அதனைக்கண்டும் மெகல்லன் எடுத்த முயற்சியில் பின்வாங்குவதில்லை என்று முடிவு செய்துகொண்டார். விக்டோரியாமூலம் தாம் முன்னே வழிகாட்டிச் செல்வதாயும், மற்றவர்களைத் தம்மைப் பின்தொடர்ந்து வரும்படியும் கூறிப் புறப்பட்ட அவர் கடலும், காற்றும் செய்த இடையூறுகளை மெல்ல மெல்லக் கடந்து சென்றார்; மற்றவர்களும் அவரைப் பின்தொடர்ந்தனர். தாம் கடந்து வந்தகால்வாய் வழிக்கு 'மெகல்லன் ஜலசந்தி' எனப் பெயரிட்டார்.

பின் ஜலசந்தியை விட்டுப் புறப்பட்ட சில நாட்களில் மெகல்லன் தாம் மாபெரும் கடலொன்றில் பயணம் சென்று கொண்டிருப்பதை உணர்ந்தார். அட்லாண்டிக் பெருங்கடலைப் போல அப்பெருங்கடல் இடையூறுகள் நிறைந்ததாயும், கொந்தளிப்பு உள்ளதாயும் இல்லை; மிக மிக அமைதியுடன் திகழ்ந்தது. அதனால் 'அமைதிப் பெருங் கடல்' என்னும் பொருள்படப் 'பசிபிக் மாகடல்' என அதற்குப் பெயரிட்டார்.

பசிபிக் மாகடலில் பயணம் நடைபெறும் பொழுது சாந்தோ அந்தோனியோ என்ற கப்பலின் தலைவன் ஓரிரவு தன் கப்பலுடன் வந்தவழியே திரும்பிவிட்டான். மெகல்லன் சற்றேறக்குறைய மூன்று மாதகாலத்துக்கும்மேல் பயணம் செய்தபின் பெருந்தீவுக் கூட்டம் ஒன்றைக் கண்டார். அத்தீவுகளே தற்பொழுது 'பிலிப்பைன் தீவுகள்' என்றழைக்கப்படுகின்றன. மெகல்லன் அனைவருடன் அத்தீவுகளில் ஒன்றான 'லாட்ரோன்சை' முதன்முதல் அடைந்தார். சில நாட்களில் அத்தீவு மக்கள் அனைவருக்கும் மெகல்லன் நண்பரானார். அவ்வப்பொழுது தேவையான உதவிகளையும் அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டார்.

பின்பு லாட்ரோன்சைவிட்டுப் புறப்பட்டுச் 'செபு' என்னும் மற்றொரு தீவை அடைந்தார். அத்தீவின் மன்னர் மெகல்லனை வரவேற்று நட்புக்கொண்டு அவருடன் வாணிக ஒப்பந்தமொன்றும் செய்து கொண்டார். செபுத் தீவின் மன்னரின் செய்கை பக்கத்திலிருந்த மாக்டன் தீவு மன்னருக்குப் பிடிக்க வில்லை. அதலின் அவர் செபுத் தீவின்மீது படை எடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்தார். மெகல்லன் அச்செய்தியைக் கேள்வியுற்றார். மாக்டன் தீவு மன்ன ருக்குப் பாடங்கற்பிக்க விரும்பி அறுபது ஆட்களுடன் அத்தீவை அடைந்தார். மெகல்லனும், அவராட்களும் வருவதை முன் கூட்டியே அறிந்தனர் மாக்டன் தீவு மக்கள். அத் தீவில் வாழ்பவர் அனைவரும் சிறந்த போர்ப் பயிற்சி பெற்றவர்கள். ஆதலின் அவர்கள் அனைவரும் மெகல்லன் குழுவினரைத் திடீரெனத் தாக்கினர். இரு சாராருக்கும் போர் மிகவும் கடுமை யாக நடைபெற்றது. மாக்டன் தீவினருள் ஒருவன் மெகல்லனின் முகத்தில் ஈட்டியால் குத்தினான்; மற்றொருவன் நீண்ட வாளால் அவருடைய இடக் காலைத் துணித்தான். இவைகளால் குற்றுயிராய்க் கீழே விழுந்த மெகல்லன்மீது அனைவரும் பாய்ந்து அவரை ஈட்டிகளால் குத்திக் கொன்றனர். மெகல்ல னுடைய வாழ்க்கை இங்ஙனம் இரங்கத்தக்கதாக முடிந்தது. மெகல்லனின் மரணத்திற்குப்பின் எஞ்சி இருந்தவர்கள் சில நாட்கள் கிழக்கிந்தியத் தீவு களுள் சிலவற்றில் தங்கிய பின்னர் நன்னம்பிக்கை முனைவழியே ஸ்பெயினை அடைந்தனர்.

இடையே கன்செப்ஷன், டிரினிடாட் என்னும் இரு கப்பல்களும் அழிந்துபோய்விட்டன. எனவே,

விக்டோரியா கப்பல்மட்டும் ஸ்பெயினை அடைந்தது. ஆதலால், அக்கப்பலை அனைவரும் 'உலகம் சுற்றிய முதற்கப்பல்' எனப் போற்றினர். மெகல்லனுடன் சென்ற 270 ஆட்களில் பதினெண்மரே மீண்டும் விக்டோரியாவுடன் ஸ்பெயினை அடைந்தனர்.

அருஞ்சொற்பொருள்கள் : இணைத்து - சேர்த்து. ஊதியம் - சம்பளத்தொகை. அலைக்கழித்தல் - இழுத்தசைத்தல். கருமம் - காரியம்.

### வினாக்கள்

1. கலிலியோ மனமுடைந்து மாண்டது ஏன் ?
2. மெகல்லன் தாய்நாட்டைவிட்டு வெளியேறக் காரணம் என்ன ?
3. ஸ்பெயின் மன்னர் மெகல்லனை நோக்கிக் கூறியவை யாவை ?
4. மெகல்லனுக்குத் தென்னமெரிக்காவின் தென்முனையில் ஏற்பட்ட அனுபவத்தைக் கூறு.
5. மெகல்லன் கண்டறிந்த இடங்களைத் தெரிவி.
6. குறிப்புத் தருக : விக்டோரியா, ஜான் ரோட்ரிகஸ்.

---



## 10. தாயின் மணிவாக்கு

"என் அன்புச் செல்வங்களே ! நீவிர் நீடூழி வாழ வேண்டும். உங்கள் கல்வி மேன்மேலும் ஓங்க வேண்டும். உங்கள் செயல்கள் யாவும் உலகறியச் சிறப்புற வேண்டும். உலகில் எத்தனை வகைச் செல் வங்கள் உண்டோ அவையனைத்தையும் நீங்கள் தேடிக் குவிக்கவேண்டும். எத்துறையில் நோக்கினு லும் அத்துறையனைத்திலும் உங்கள் முயற்சி முன்னணியில் நிற்கவேண்டும். என் நெடுநாளைய கனவுகள் இவை. இவை நனவுகளாக வேண்டு மாறுல் என் அறிவுரைக்குச் சிறிதே செவிசாயுங்கள்.

என் மக்களாகிய நீங்கள் 'செப்புமொழி' பலவுள. அந்தப் பல்வகை மொழிகளைப் பேசிடினும் நீவிர் அனைவீரும் ஒரு தாய் வயிற்றுப்பிறந்த மக்கள் போல் வாழவேண்டும் என்பதை மறவாதீர். இமயமுதல்

குமரிவரை நிறம், தோற்றம், சமயம், உடையின் கோலம், நடைமுறைச் செயல்கள் முதலியவற்றில் நீங்கள் வேறுபட்டிருப்பினும் நாம் அனைவரும் சோதரரே' என்ற உயர்ந்த மனப்பான்மை உங்களை விட்டு நீங்கவில்லை என்பதை யான் அறிந்து கொண்டேன்.

நட்புறவு கொண்டாடிவந்த அண்டை நாட்டவர்கள் எனக்கு இடையூறுகள் பல விளைவித்து என் பெருமைகளைக் குலைக்க முற்பட்டனர். அப்பொழுது 'தாயே! எங்கள் உயிரை ஈந்தேனும் உன் பெருமைக்கு இழுக்கு வராமல் காப்போம். உன் தவப்புதல்வர்களின் ஒற்றுமை வாழ்வைப் பரிசோதிக்கத் துணிந்த பகைவருக்குப் பாடங்கற்பிக்கின்றோம்' என உங்களில் சிலர் பொங்கி எழுந்ததைப்பற்றி நீங்கள் நினைவுகூர வேண்டாவா?

உள்ளத்திலே கள்ளமும், உதட்டளவில் நட்பும் கொண்டு பழகிவந்த சீனர்கள் திடீரென ஒருநாள் இமயத்தில் போர்ப்பறை முழக்கினர். அருவிகளின் இனிய முழக்கமும், பறவையினங்களின் கீச்சொலிகளும், மலைச்சாதி மக்களின் கபடமற்ற கீதமும் அடங்குமாறு துப்பாக்கி முழக்கம் செய்தனர். பகைவரின் முழக்கொலி கேட்டவுடன் நம் படையினர் மேனி சிலிர்த்துத் தோள்புடைத்து எழுந்தனர். 'வலியச் சண்டைக்குப் போவதுமில்லை; வந்த சண்டையை விடுவதுமில்லை' என்ற எண்ணமுடையவர்களல்லவா நம் வீரர்கள். நாட்டுக்கு உற்ற சூழ்நிலையை அறிந்தனர்; பெற்ற அன்னை, பேணும் மனைவி மக்கள் அனைவரையும் விட்டு நீங்கினர்; நாற்பத்து நான்கு கோடிச் சோதரர்களைப் பற்றி எண்ணினர்;

வீரவெறிகொண்டு பல தீரச்செயல்களை நிகழ்த்தினர். அவற்றுள் சிலவற்றை உங்கட்கு மீண்டும் நினைவு படுத்துகிறேன்.

சீனப் பகைவர்கள் இமயத்தில் காலடிவைத்துத் தங்குமிடங்களை அமைத்துக்கொண்டுவந்த நாளில் ஒருநாள் இரவு பத்து மணி இருக்கும். லடாக் பகுதியில் நம்மவர் தங்குமிடம் ஒன்றில் நான்கு வீரர்கள் மட்டும் இருந்தனர். எந்த நேரத்திலும் எதிரியின் தாக்குதல் நிகழக்கூடும் என்று முன்னெச்சரிக்கையுடனேயே இருந்தனர். எதிர்பார்த்தபடி சீன வீரர்களில் பலர் நம்மவர் தங்குமிடத்தை அணுகிக் குண்டுகளை வீசினர். நம்மவர் நால்வரில் கேம்காம் என்பவர் ஒருவர். அவர் ஒரு பள்ளத்தில் மறைந்து பதுங்கிய வண்ணம் அணுகி வந்தவர் அனைவரையும் மடமடவெனச் சுட்டுத் தள்ளினார். மாய்ந்தவர்போக மீதமுள்ளவர் பின்வாங்கலாயினர். அந்நிலையில் கேம்காமிடம் இருந்த துப்பாக்கிக் குண்டுகள் தீர்ந்துபோய்விட்டன. அதற்காக அவர் மனங்கலங்கிவிடவில்லை. பள்ளத்தினின்றும் எழுந்தார். இரண்டு பெரிய கைவெடிகுண்டுகளைப்பகைவர்மீது வீசினார். அதனால்பகைவரில் பலர் மாண்டனர்; சிலர் புகை நடுவே சிக்கித்தடுமாறினர். புகையடங்கிய பின் எதிரிகள் மீண்டும் சுடத் தொடங்கவே கேம்காம் குண்டுகளைக் கையால் தடுத்தார். அம்முயற்சியில் அவருடைய கைவிரல்கள் சிதறின. அத்துடன் பின்னாலிருந்த பள்ளமொன்றில் உருண்டார். மிக ஆழமான பள்ளத்தில் வீழ்ந்ததால் அவருடைய கால் எலும்பு முறிந்து போய்விட்டது. ஆயினும், கைகளால் தவழ்ந்தபடியே 3 கிலோ மீட்டர்கள் தூரம் கடுங்குளிரில் இரண்டு நாட்கள் பட்டினி

யுடன் சென்று நம்மவரின் இருப்பிடத்தையறிந்து சிகிச்சை பெற்ருர்.

**துளசிராம் தாபா** என்ற மற்றெருு வீரரின் தீரத்தைக் கேளுங்கள். பாங்காக் ஏரிப்பகுதியிலுள்ள காவல் நிலயத்தைத் தாக்க முற்பட்டனர் சீனர்கள். அந் நிலயத்தைக் காத்துவந்த துப்பாக்கிப் படைவீரர் களில் தாபாவும் ஒருவர். 'இமயமலேயே குலேந்தாலும் என் நிலே குலேயமாட்டேன்' என்று உடனே சபதம் செய்தார். தம் கையிலிருந்த குண்டுகள் யாவும் தீர்ந்துபோன பின்னும், துப்பாக்கியைத் திருப்பிக் கொண்டு எதிரிகளின்மீது பாய்ந்தார். கண்ணிமைக் கும் நேரத்தில் திடீரெனப் பாய்ந்துவிட்ட அவரைச் சீனர்கள் குறிவைத்துச் சுடமுடியவில்லே. அவர்கள் குறிவைக்க முயல்வதற்குள் துப்பாக்கிக் கட்டையால் பலரை அடித்து வீழ்த்திஞர். எவ்வளவு நேரந்தான் போராட முடியும்? சீறிப்பாயும் காளேயைப் பலர் வளேத்துப் பிடிப்பதுபோலச் சீனர்கள் பலர் அவரை வளேத்துப் பிடித்துக் கைதுசெய்து தம் இருப்பிடத் துக்குக் கொண்டு சென்றனர். வழியில் மலேமீது ஒருவர்பின் ஒருவராக ஏறவேண்டிய ஓரிடத்தில் தாபா தப்பி விட்டார். இரவு முழுவதும் அருகே இருந்த குளமொன்றினுள் மூழ்கி மூழ்கி மறைந்து நின்ருர். விடிந்தவுடன் பாறைகளுக் கிடையில் பதுங்கிப் பதுங் கிப் பாதுகாப்பான இடத்திற்கு வந்து சேர்ந்தார். வெடிகுண்டு தீர்ந்தபின்பும் பேரழிவு ஏற்படுத்திய அவர் வீரம் வியத்தற்குரியது.

போர்வீரருக்கு வீரமும், துணிவும் மட்டும் இருந்தால் போதாது; விவேகமும் இருக்கவேண்டும். **பாட்சிசிங்** என்பவரின் விவேகச்செயலேக் கேளுங்கள்.

மக்மகான் எல்லையிலமைந்த கிபுட்டு என்ருெரு காவல் நிலையத்தை, ஒருநாள் இரவு சீனப்படை ஒன்று தாக்கவிருந்தது. அதனை முன்கூட்டியே அறிந்த பாட்சிசிங் விரைவாகச் செய்தி ஒன்றைத் தெரிவிக்க அருகிலிருந்த மற்ருெரு காவல் நிலையத்துக்குச் சென்றிருந்தார். அவர் திரும்பி வருவதற்குள் கிபுட்டு நிலையத்தைச் சீனப்படை கைப்பற்றி மூன்று வீரர்களை மட்டும் அங்கு வைத்து விட்டுச் சென்றிருந்தது. நள்ளிரவில் அங்கு வந்த பாட்சிசிங்கைச் சீன வீரர் மூவரும் வளைத்துக் கொண்டனர். 'புலி தாஞக வந்து வலையில் அகப்பட்டு விழிப்பதைப் பாருங்கள்' என்று கூறி ஏளனமும் செய்தனர். பாட்சிசிங் பொறுமையோடு செயலற்றிருந்தார். ஏனெனில், சற்றே அசைந்தாலும் போதும். மூன்று துப்பாக்கி முனைச் சனியன்கள் அவருடலைக் கிழித்துக் கூறு போட்டுவிடும். அதனுல் பயந்து நடுங்குபவர்போல அம் மூவர் கூறியனவற்றிற்கெல்லாம் தலையாட்டியபடியே முன்னுல் நடந்தார். பின்னுல் அம்மூவரும் தம் துப்பாக்கி முனையை அவர் முதுகில் பதித்தவாறே பின்தொடர்ந்தனர். சிறிதுதூரம் பாட்சிசிங் அமைதியாகச் சென்ருர். பின்னர் மின்னல் வேகத்தில் திரும்பி மூன்று துப்பாக்கிகளையும் மோதி அப்புறப்படுத்திவிட்டு விரைந்தார். அதனுல் கீழே விழுந்த மூவரும் எழுந்து சுடுவதற்குள் வெகுதூரம் சென்றுவிட்டார். ஆயினும் ஒருவன் சுட்ட குண்டு அவர் தோளிற் பாய்ந்து விட்டது. 'ஒருவருக்கு மூவராகத் துப்பாக்கியோடு இருந்தும் ஆயுதமற்ற ஒருவரிடம் நாம் ஏமாந்து போய் விட்டோமே' என்று மூவரும் விழித்துச் செயலற்றிருக்க, நம் வீரர் பாட்சிசிங் இருளோடு இருளாக

மறைந்து போனார். கையில் சிக்கிய சிறுத்தையை விட்டு விட்டு வேறு ஏதேனும் சிக்காதா எனப் புதர்களையும் பள்ளங்களையும் தேடிக்கொண்டு சென்றார்கள், அந்த மூன்று ஏமாளிகளும்.

சீனர்கள் ஓரிடத்தைத் தாக்க எண்ணினால், முதலில் ஒருவனைத் துப்பாக்கி ஏந்திவரச்செய்வர். அவன் பின்னால் இருவரை வெடிகுண்டுகளுடன் அனுப்புவர். முதலில் வருபவன் குண்டடிபட்டு இறந் தால் பின்னால் வருபவரில் ஒருவன் அந்தத் துப் பாக்கியை எடுத்துப் போர்செய்வான். மற்றொருவன் வெடிகுண்டுகளை வீசிச் சேதம் விளைவிப்பான். இங் ஙனம் சீனர்கள் சாரிசாரியாக வந்து போர்செய்வர்.

ஒருமுறை நம்காசு ஆற்றுக்கருகே காவல் நிலை யம் ஒன்றில் அவில்தார் மேஜர் சௌதாகர்சிங் என்ற இராஜபுத்திர வீரர் இரு வீரர்களுடன் காவல் செய்து வந்தார். அப்பொழுது சீனர்கள் அக்காவல் நிலையத் தைத் தாக்கவந்தனர். அதனைத் தடுக்க முயன்ற மற்ற இருவரும் குண்டடிபட்டு மாண்டனர். சௌதா கர்சிங் உடனே ஒரு பாறையின் பின்னே பதுங்கிய வாறே சுடத்தொடங்கினார். முன்னால் வந்தவன் இறந் தான். அவனுக்குப் பின்னால் வந்த இருவர்க்கும் அதே நிலைமையை ஏற்படுத்தினார். அடுத்தவன் எதிரேறி வந் தான். அவ்வளவில் மறைவிடத்தைவிட்டுத் திடீரென வெளிப்பட்ட சௌதாகர்சிங் அச் சீனவீரன்மீது பாய்ந் தார். அவனுடைய கைத்துப்பாக்கியைப் பிடுங்கிக் கொண்டு அவனையே சுட்டுக்கொன்றார். பின்பு அதே துப்பாக்கியால் தொடர்ந்துவந்த ஆறு சீனர்களையும் சுட்டுக்கொன்று களிப்படைந்தார். அதன் சின்னமாக இன்றும் அந்தத் துப்பாக்கி அவ்வீரரிடம் உள்ளது.

இப்படி என் மானங்காக்க நடைபெற்ற போரில் எத்தனை எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்தினர் என் மக்களிற் சிலர். அண்மையில் நிகழ்ந்த மற்றொரு போரிலும் பல வீரதீரச் செயல்களைச் செய்த கீலர், இராஜு, கன்னு, தாராப்போர், அப்துல் ஹமீது முதலானோரின் வீரச்செயல்களை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள்.

வேற்றுமைகளையும், குறுகிய நோக்கங்களையும் விடுத்து ஒற்றுமையும், பரந்த மனப்பான்மையுமுடைய வராய் நீங்கள் வாழவேண்டும்.

'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே'

என்னும் பொன்வாக்கை மறவாமல் நடப்பீராக".

**அருஞ்சொற்பொருள்கள் :** நனவு - நடைமுறைச் செயல். கோலம் -(உடுத்தும்) அழகு. இடையூறு-துன்பம். இழுக்கு-குறை. கள்ளம் - வஞ்சனை. மாய்ந்தவர் - இறந்தவர். விவேகம் - நுண்ணறிவு. சனியன் - கூரிய கத்திபோன்ற அமைப்பு. சிக்குதல் - அகப்படுதல். சின்னம் - அடையாளம். நலிதல் - வருந்துதல். பரிவு - அன்பு.

**வினாக்கள்**

1. பாரத நாட்டு மக்கள் எத்தகைய உயர்ந்த மனப் பான்மை உடையவர்கள் ?
2. நம் படையினர் தீரச்செயல்களை நிகழ்த்தியது ஏன் ?
3. கேம்காமின் தீரச்செயலை விவரி.
4. துளசிராம் தாபாவின் வீரச்செயலை விளக்கு.
5. பாட்சிசிங்கின் விவேகமான செயலைப்பற்றிக் கூறு.
6. சீனவீரர்களின் போர்முறை யாது ?
7. மேஜர் சௌதாகர்சிங் பெற்ற வெற்றியை விளக்கு.



நத்தைக் குத்தி நாரை
[புகைப்படம் உதவியவர் : திரு. எம். ஏ. பாட்ஷா]

## 11. வியத்தகு வேடந்தாங்கல்

இயற்கையின் படைப்பில் சில பொருள்கள் நம் வாழ்க்கைக்கு இன்றியமையாதன ; பல பொருள்கள் நமக்குப் பலவழிகளில் பயன்படுகின்றன. அவற்றுள் பறவைகள் சிறப்பான இடம் பெறுகின்றன.

நம் முன்னோர் செய்திகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அனுப்பப் புறு, கழுகு, கருடன் முதலியவற்றைப் பயன்படுத்தியிருக்கின்றனர். மற்றும், அன்னம் தூதுசென்ற நிகழ்ச்சியை நள, தமயந்தியர் வரலாற்றால் அறிகிறோம். காக்கையைப் பற்றிச் சில இலக்கியங்கள் சிறப்பித்துப் பாடியுள்ளன. சேவல், காடை முதலியவற்றைப் போரிடப் பழக்கி அவை போரிடுவதைக் கண்டு மகிழ்ந்து பொழுதுபோக்கினர் மக்கள் என்பதையும் இலக்கிய வாயிலாக அறிகிறோம். இன்றும் அத்தகைய பொழுதுபோக்கில் சிலர் ஈடு படுவதைக் காண்கிறோம். சடாயு, சம்பாதி என்னும்

கழுகுகளைப்பற்றி இராமாயண நூல் விவரிக்கிறது. புரு, கோழி, கிளி, மயில், சிட்டு, மைனு, கௌதாரி முதலியவற்றிற்கு அடைக்கலம் கொடுத்து மனிதர் வளர்க்கின்றனர். கிளியைப் 'பேசும் பறவை' என்பர். சொன்னதைச் சொல்லவல்ல திறமை அதற்கு உண்டு. குயிலின் குரல் மாந்தர்க்கு அளிக்கும் இன்பத்தையும், மயிலின் ஆட்டம் அளிக்கும் அழகுக் காட்சியையும் அறியாதவர் யார்? மற்றும், பறவைகள் மக்களின் வாழ்வுக்கு இன்றியமையாத உதவிகளைச் செய்கின்றன. நோயற்ற நல்வாழ்வுக்குக் காக்கை வழி செய்கிறது. பயிர் பச்சைகளைப் பாழடிக்கும் பூச்சியினங் களைச் சில பறவைகள் பிடித்துத் தின்று குடியான வர்க்கு நன்மை விளைக்கின்றன. பறவைகளின் எச்சம் மிகச் சிறந்த சத்துக்கள் நிரம்பிய எருவாகும்.

பறவைகளின் பழக்க வழக்கங்களும், செயல் களும் நமக்கு வியப்பையளிக்கின்றன. பறவையினங் களின் தினசரி வாழ்க்கை நமக்கொரு பாடமாகும். தவருமல் எழுந்து கூவி நம்மை எழுப்புகின்ற சேவலின் செயல்தான் என்னே! பறவைகள் விடியற்காலை யிலேயே விழித்தெழுந்து கொள்கின்றன. பின் அவை கூட்டங் கூட்டமாக இரைதேடச் செல்கின்றன. மாலையில் கதிரவன் மறைவதற்குள் தம் இருப் பிடத்தை அடைந்துவிடுகின்றன. இந்த நேரந் தவருத ஒழுங்குடைமை நாம் பின்பற்றுதற்குரிய தன்ருே? மற்றும், கூடிவாழும் முறையையும் அவை நமக்குக் கற்பிக்கின்றன எனலாம். இரைதேடச் செல்லும்பொழுதும், மீண்டும் கூட்டை நாடி வரும் பொழுதும் அப் பறவைகளிடத்து ஓர் ஒழுங்கு முறை அமைந்துள்ளதை நாம் காணலாம். இரைதேடச்

செல்லுங்கால் முழு வளர்ச்சியடையாத தம் குஞ்சுகளை முன்னே விட்டுத் தாய்ப் பறவையும், ஆண் பறவையும் தொடர்ந்து செல்லும். கிடைக்கின்ற புழு பூச்சி வகைகளைத் தம் குஞ்சுகட்கு ஊட்டி மகிழும்; பின்பே தாம் தின்னும். கூட்டிற்கு மீளும்பொழுதோ ஆண் பறவை முன்னேயும், அதனைத் தொடர்ந்து தாய்ப் பறவையும், அதன் பின்னே குஞ்சுகளும் வருவதைக் காணலாம். இத்தகைய குடும்ப வாழ்க்கை பாராட்டுக் குரியதன்றோ ?

பறவைகளிற் பல வகைகள் இருத்தல் போலவே அவற்றின் வாழுமிடங்களும், கூடுகளும் வெவ்வேருக இருக்கின்றன. தூக்கணங்குருவி மிக மிகச் சிறிய பறவை. ஆனல் அச்சிறு பறவை தன் கூட்டை எப்படிப் பின்னுகிறது பாருங்கள்! சிட்டுக் குருவியின் கூடு, கழுகின் கூடு, காக்கைக் கூடு இவற்றின் அமைப்பிலும் வேறுபாட்டைக் காணலாம். கிளி, மரப் பொந்துகளையே தன் கூடாக மாற்றி அமைத்துக் கொண்டு விடுகிறது. புருவோ மாடங்களையும், கோவிற் கோபுரங்களையும் தன் இருப்பிடமாக அமைத்துக் கொள்கிறது.

சென்னையிலிருந்து சுமார் 86 கிலோ மீட்டர்கள் தூரத்தில் வேடந்தாங்கல் என்ருெரு சிற்றூர் உள்ளது. இச் சிற்றூர் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த மதுராந்தகம் வட்டத்திலுள்ளது. சென்னையிலிருந்து வேடந்தாங்கல் வரை சாலை வசதியுண்டு. அவ்வூரில் சுமார் நாற்பதரை ஹெக்டேர் பரப்பளவு கொண்ட ஏரி ஒன்று இருக்கிறது. அது தமிழ்நாட்டுக் காட்டு இலாகாவினரின்கீழ் உள்ளது. அவ்வேரியில் நெடிதுயர்ந்த மரங்கள் நீரிடையே அடர்ந்து வளர்ந்து

தலைகாட்டி நிற்கும் காட்சி கண்கவர் வனப்பை அளிப்பதாகும். நீரில் நின்று தவம் செய்யும் முனிவர் களைப் போன்று விளங்கும் மரங்களின் அழகிய உச்சிப் பகுதியில்தான் பன்னாடுகளினின்றும் வந்து தங்கி வாழும் பன்னிறப் பறவைகளைக் கூட்டங் கூட்டமாகக் காணலாம். சற்றேறக் குறைய இரு நூற்றாண்டு களாகவே பல்வகை நீர்வாழ் பறவைகளின் புகலிடமாக இவ்வேரி இருந்து வருகிறது. அக்டோபர் மாதம்முதல் ஏப்ரல் மாதம்வரை உள்ள ஆறு மாதங்கள் இங்குப் பறவைகளைக் காணும் பருவ காலமாகும்.

வேடந்தாங்கல் ஏரியில் பல்வகைப் பறவைகளையும் ஒருசேரக் காணவேண்டுமானால் அதற்குரிய நேரம் விடியற்காலையே யாகும். அதனால் பறவைக் காட்சி யைக் காணவருவோரில் சிலர் முதல் நாள் மாலையே வந்து அவ்வூரில் தங்கிவிடுகின்றனர். பறவைகளின் அழகைக் கண்டு களிப்பதற்காகத் தமிழ் நாட்டு அரசாங்கத்தார் 27,000 ரூபாய் செலவில் சுமார் ஏழு மீட்டர் உயரமுள்ள தொலைநோக்குக் கோபுரம் ஒன்றை ஏரியின்கரையில் கட்டியுள்ளனர். மற்றும், சேய்மையில் உள்ள காட்சிகளை அண்மையில் காட்டவல்ல தொலை நோக்குக் கண்ணாடி ஒன்றையும் பொருத்திவைத்துள் ளனர். அங்குள்ள கோபுரத்தின் மீதேறி நின்று ஏரியை நோக்குவோமேயானால் அத்தகு காட்சி வருணனைக்கு அடங்காது என்பதில் ஐயமே இல்லை. ஏரியில் வாழும் பறவைகளைப் பாதுகாக்கக் காவற் காரர்கள் இருக்கின்றனர். மற்றும் ஏரியைச் சுற்றிச் சுமார் 32 கிலோ மீட்டர் வரை வேட்டையாடக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது.

தமிழ்நாட்டில் தஞ்சை மாவட்டத்தின்கண்ணுள்ள

கோடிக்கரை, தலைஞாயிறு என்னுமிடங்களிலும், ஏனைய மாவட்டங்களுள் தென் ஆர்க்காட்டிலுள்ள வீராணத்து ஏரி, வட ஆர்க்காட்டிலுள்ள காவேரிப் பாக்கம் ஏரி, செங்கற்பட்டிலுள்ள செம்பரம்பாக்கம் ஏரி, திருச்சிராப்பள்ளியிலுள்ள தேவராயன் ஏரி, திருநெல் வேலியிலுள்ள கங்கைகொண்டான் ஏரி, இராமநாத புரத்துள்ள நென்மேனி ஏரி, மதுரையிலுள்ள வைகை நீர்த் தேக்கம் முதலாய இடங்களிலும், ஆந்திர நாட்டில் தாடேபல்லிகூடம், கொலாமுரு என்னு மிடங்களிலும் பலவகை நீர்வாழ் பறவைகள் வந்து தங்கி வாழ்கின்றன எனக் கண்டறிந்துள்ளனர். ஆயி னும், இவை அனைத்தையும்விடப் புகழால் மேம்பட்டு விளங்குவது இவ்வேடந்தாங்கல் ஏரியே எனலாம்.

ஏனெனில், இவ்வேரியில் வாழும் பறவைகள் சைபீரியா, அலாஸ்கா, பெரு, ஆர்க்டிக் பிரதேசம், மேற்கு ஜெர்மனி, மங்கோலியா, சுமத்திரா, ஜாவா, போர்னியோ தீவுகள், ஜப்பான், மலேசியா, ஆபிரிக்கா, ஆஸ்திரேலியா முதலான இடங்களினின்று வந்து வாழ்கின்றவை எனக் கண்டறிந்துள்ளனர். சில பறவைகள் இடையில் எவ்விடத்திலும் தங்காமல் சுமார் 3,200 கிலோ மீட்டர் தூரத்தைக் கடந்து இங்கு வருகின்றன என்றும் கண்டறிந்துள்ளனர். வெகு தூரம் நாடு விட்டு நாடு, கண்டம் விட்டுக் கண்டம் பறக்கும் இப் பறவைகளை ஒரு முறை சோதித் தும் பார்த்துள்ளனர். 1962 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 12ஆம் நாள் அன்று ஒரு பறவையின் காலில் அடையாளம் செய்யப்பட்ட அலுமினிய வளையம் ஒன் றைக் கட்டிவிட்டனர். அப்பறவை 1963 ஆம் ஆண்டில் ஜூன் மாதம் 4 ஆம் நாள் சோவியத் ருஷியாவைச்

சேர்ந்த குய்பூனே நகரில் காணப்பட்டதையறிந்து, குறித்து வைத்துள்ளனர். 1965ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம்முதல் செந்நிறக் கழுத்துக்களையுடைய ஆர்க் டிக் பிரதேசப் பறவைகள் இவ்வேரியில் வந்து தங்கி வாழத் தொடங்கியுள்ளன.

இனி இங்குள்ள பறவைகளிற் சிலவற்றைப் பற்றிப் பார்ப்போம்.

கோமோராண்ட்: இந்த வகை நாரை கருமை நிறமுடையதாய், கூரிய நீண்ட அலகு உடையதாய் இருக்கிறது. இதன் கழுத்து நீளமாக அமைந்திருக் கிறது. நீருள் நீந்திச் செல்லவும் வல்லது இது. கிழக் கிந்தியத் தீவுகளிலிருந்து வந்தது இது. இவ்வகை நாரைகள் கூட்டமாக அரைவட்ட வடிவத்தில் புறப் பட்டுச் சென்று மீன்பிடித்து உண்ணும்.

டார்ட்டர்: இந்த வகை நாரையின் கழுத்து பாம்பு போன்று இருக்கிறது. இது நீருக்குள் உடலை மறைத்துக்கொண்டு படமெடுத்தாடும் பாம்புபோலத் தன் நீண்ட கழுத்தை நீருக்கு வெளியே நீட்டி நீந்து கிறது. இது கூட்டங் கூட்டமாக மரங்களில் வாழும். மீன்களின்மீது வெகு வேகமாகப் பாய்ந்து பிடித்துத் தின்னும் இயல்பு இதற்குண்டு. ஆபிரிக்கா, தென்னமெரிக்கா, மலேசியா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் இதனைக் காணலாம்.

எக்ரெட்: நடுத்தரமான உடலும், நீண்ட கால் களும், கழுத்தும் இதற்கு உண்டு. இதன் அருகே நெருங்கி நின்று நாம் இதனைக் காணலாம். இதன் கால்களும், கழுத்தும் மிக வெண்மையாக இருக்கும். இதன் கூடுகள் அகன்ற அமைப்புடையனவாக இருக் கின்றன. இப் பறவை கால்நடைகளின் இரத்தத்தை

உறிஞ்சி அவற்றிற்குத் தொல்லை கொடுக்கும் ஈக்கள், உண்ணிகள் முதலியவற்றை அழிக்கின்றது. இதனைக் 'கால்நடைகளின் நண்பன்' எனக் கூறலாம். இது கூட்டங் கூட்டமாக வாழும் இயல்புடையது.

ஹெரான்ஸ் : இவ்வகைப் பறவை கருமை நிறத்துடனும், பழுப்பு நிறத்துடனும் காணப்படுகிறது. ஹாலந்து, டென்மார்க், ஜெர்மனி நாடுகளில் இவ் வகையை நிரம்பக் காணலாம். இது வீட்டின் உச்சியில் தன் கூட்டினை அமைத்துக் கொள்ளுகிறது.

ஸ்பூன்பில் : இதன் மூக்கு, கரண்டியின் அமைப்பைப் போல் இருக்கிறது. நல்ல வளர்ச்சியான தோற்றத்துடன் இது காணப்படுகிறது. பர்மா, இலங்கை, இராக், ஜப்பான் முதலிய நாடுகளில் இதனைக் காணலாம்.



அரிவாள் மூக்கன் (இபிஸ்)
[புகைப்படம் உதவியவர் : திரு. எம். ஏ. பாட்ஷா]

**இபிஸ் : இது ஸ்பூன்பில் இனத்தைச் சேர்ந்தது.**

ஆயினும், இதன் மூக்கு வேறுபட்டிருக்கிறது. நீரை யொட்டிய மரக்கிளைகளில் இது தன் கூட்டை அமைத் துள்ளது. ஆயிரக்கணக்கில் கூடி வாழும் தன்மை படைத்தது இப்பறவை.

பெலிகன் : வேடந்தாங்கலில் உள்ள பறவை களில் மிகவும் பெரியது இப்பறவைதான். கூரிய நீள மான மூக்கு இதற்கு அமைந்திருக்கிறது. பறவைகட் கெல்லாம் அரசனைப்போல இது கம்பீரத் தோற்றத் துடன் காணப்படுகிறது. மீன் பிடிப்பதில் இது மிகவும் தந்திரமான பறவை.

மற்றும் இவ் வேடந்தாங்கலில் ஆந்திரநாட்டில் ' நாமகோடி ' எனச் சிறப்பிக்கப்படும் கூட், லிட்டில் கிரெம் முதலான வகை நீர்ப்பறவைகளும் உள்ளன.

நீங்களும் ஒரு முறை வேடந்தாங்கல் சென்று இப் பறவைகளைப் பாருங்கள். அப்பொழுது பறவைகள் இயற்கையின் அற்புதப் படைப்புக்கள் என்பதை அறி வீர்கள்.

அருஞ்சொற்பொருள்கள் : வனப்பு - அழகு. புகலிடம் - தங்குமிடம். சேய்மை - தூரம். அண்மை - அருகு. ஐயம் - சந்தேகம். அலகு - மூக்கு.

**வினாக்கள்**

1. இயற்கையின் படைப்பில் பறவைகள் சிறப்பான இடம் பெறுகின்றன - இக்கூற்றை விவரி.
2. பறவைகளின் பழக்க வழக்கங்களைப்பற்றிச் சுருக்க மாகக் கூறுக.
3. வேடந்தாங்கல் ஏரிபற்றிச் சிறு குறிப்பு எழுதுக.
4. நீர்வாழ் பறவைகள் தங்கி வாழும் இடங்களில் ஐந்தைத் தெரிவி.
5. குறிப்பு எழுதுக : டார்ட்டர், எக்ரெட், பெலிகன்.

———



## 12. புதுமை முழக்கிய புனிதர்

'ஓங்குக வீரர்! உயர்க உழவர்!'. இக் கருத் தமைய 'ஜய் ஜவான்! ஜய் கிஸான்!' எனப் புதுமை முழக்கமிட்டவர், நம் தாயகத்தின் இரண்டாவது அருமைப் பிரதமர் லால் பகதூர் அவர்கள். ஒரு நாட்டின் பெருமைக்குக் காரணமாக இருப்பவர் போருழவரும், ஏருழவருமாவர். போர்முனை வெற் றிக்கு ஏர்முனை வெற்றி மிகமிக இன்றியமையாதது என்பதைப் புதுமையான முறையில் முழக்கிய இலட்சிய வீரர் லால் பகதூரின் வாழ்க்கையைப்பற்றி இங்கு அறிவோம்.

உத்தரப் பிரதேசத்திலுள்ள புனிதத் தலமான காசி மாநகருக்குச் சுமார் பதினொரு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது மொகல்சராய் என்னும் சிற்றூர்.

அவ்வூரில் காயஸ்த வகுப்பைச் சேர்ந்த சாரதா பிரசாத் என்னும் ஏழைப் பள்ளியாசிரியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அன்னர் தம் மனைவி இராம்துலாரி தேவியுடன் வசதிக் குறைவான வாழ்க்கையே நடத்தி வந்தார். ஆசிரியராகச் சில காலம் பணியாற்றிய பின், அலகாபாத் நகரிலுள்ள நிலத் தீர்வை (ரெவினியூ) அலுவலகத்தில் கணக்கராகப் பணியாற்றலானர். வறுமை வாட்டியபோதும் பொறுமை இழக்காமல் செம்மையான வாழ்க்கை நடத்திவந்த அவருக்கு 1904ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இரண்டாம் நாள் லால் பகதூர் புதல்வராகத் தோன்றினர். அவரைப் பெற்றோரும், உடன்பிறந்த சகோதரியரும் மிகவும் போற்றி வளர்த்து வந்தனர்.

லால் பகதூர் பிறந்த பதினெட்டாவது மாதத்தில் சாரதா பிரசாத் காலமாகி விட்டார். குடும்பத் தலைவரின் எதிர்பாராத மரணத்தால் குடும்பம் கொடுமையான வறுமைக்கு ஆளாகித் தவித்தது. ஆதலால் இராம்துலாரி தேவி தம் மூன்று குழந்தைகளுடன் தாய் வீட்டில் அடைக்கலம் புகுந்தார். தாய்வழிப் பாட்டனரான ஹசாரிலால் லால் பகதூரை மிகவும் அருமையாகப் போற்றி வளர்த்து அவருக்குத் தந்தையில்லாத குறையே தெரியாதவாறு செய்தார். உரிய பருவத்தில் லால் பகதூரைப் பள்ளிக்கும் அனுப்பி வைத்தார்.

பள்ளியில் மற்ற மாணவர்கள் தம்மிடம் தனிப்பட்ட அன்பு செலுத்தும்படியாக யாவர்க்கும் நல்லவராக நடந்துகொண்டார் லால் பகதூர். பாட போதனைக் காலத்தில் என்றும், எப்பொழுதும் குறு குறுவென்று இருப்பார்; உடன் பயில்வோர் மனம்

புண்படும்படியாகக் குறும்புகள் செய்யமாட்டார்; தம் கடமைகளில் என்றும் தவறமாட்டார்; மிக அருமை யாக ஆங்கில மொழியை உச்சரிப்பார். இவற்ருல் ஆசிரியர்களும் அவரிடம் தனிக் கவனம் செலுத்திப் பாராட்டி வந்தனர். லால் பகதூர் பள்ளிப் பாடங் களுடன் குரு நானக்கின் நூல்கள் சிலவற்றையும் மனப்பாடம் செய்துவந்தார்.

'நீ சிறியவனுக இரு; புல்லைப்போலச் சிறிய வனுக இரு; ஏனைய தாவரங்கள் உலர்ந்து மறைந் தாலும், புல் எந்தக் காலத்திலும் அழிவதே இல்லை; அதன் பசுமை மாறுவதும் இல்லை' என்னும் இக் கருத்தமைந்த கவிதைப் பகுதியை அடிக்கடி பாடிக் கொண்டே இருப்பார். இக் கவிதைப் பகுதி அவ ருடைய உள்ளத்தில் அடக்கத்திற்கு வித்திட்டது.

மொகல்சராயில் ஆருவது வகுப்புவரை படித்து முடித்தபின் லால் பகதூர் மேற்படிப்புக்காகக் காசிக் குச் சென்ருர். காசியில் அவருடைய சிறிய தந்தையார் இரகுநாத பிரசாத் இருந்தார். அவர் ஆதரவில் அரிச் சந்திரா உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து பயின்று வந்தார்.

லால் பகதூர் மிகவும் நல்லூழ் உள்ளவர். அவ ருடைய பெற்ருேர்கள் நல்லொழுக்கமுடைய குண சீலர்கள்; தாய்வழிப் பாட்டனுரும் நெறிமுறை தவருத நேர்மையாளர்; இரகுநாத பிரசாதோ நேர்மைக்கு உறைவிடமானவராயும், கடமை தவருத கண்ணியரா யும் இருந்தார். இத்தகையவர்களின் கண்காணிப்பில் லால் பகதூர் வளர்ந்தபடியால் அவருடைய வாழ்வு எளிமையும், நேர்மையும், தூய்மையும் உடையதாக அமைந்தது. மற்றும் பணத்தில் ஏழையாக இருக்க

லாம், அதனல் குறையில்லே. ஆனல் பண்பில் குறைந்த வராக இருக்கவே கூடாது என்பதை அனேவருக்கும் உணர்த்திக் காட்டியது லால் பகதூரின் வாழ்க்கை. நீந்துவதிலும், விளேயாடுவதிலும், பள்ளி நாடகங் களில் நடிப்பதிலும் லால் பகதூர் சிறந்து விளங்கி ஞர். படகுக்காரனுக்குக் கொடுக்கக் காசின்றி ஒரு முறை இவர் கங்கையையே நீந்திக் கடந்ததுண்டு.



இவர் காசியில் நன்முறையில் கல்வி கற்று வருகை யில் பால கங்காதர திலகர், மகாத்மா காந்தியடிகள் ஆகியோரின் பேச்சுக்களேக் கேட்கும் வாய்ப்பைப் பெற்ருர். ஆங்கிலேயர்களே எதிர்த்து ஒத்துழையாமை இயக்கம், வரிகொடா இயக்கம், கதர் இயக்கம் முதலானவற்றை மகாத்மா காந்தியடிகள் நடத்தவே

இளைஞர் லால் பகதூர் அவற்றில் பங்கெடுத்துக் கொண்டார்.

மகாத்மாவின் அழைப்புக்கு இணங்கிப் படிப்பைத் துறந்த பல இளைஞர்கட்குக் காசி வித்யா பீடம் என்ற கல்வி நிறுவனம் புகல் அளித்தது. லால் பகதூரும் அப்பீடத்தின் வாயிலாகக் கல்வியை நிறைவு செய்து கொண்டார். நான்கு ஆண்டுகட்குப் பின்பு 'சாஸ்திரி' என்ற பட்டத்தையும் பெற்ருர். படிப்பு முடிவானதும் லாலா லஜபத்ராயைத் தலைவராகக் கொண்டிருந்த 'மக்கள் ஊழியர் சங்க' த்திற் சேர்ந்து தொண்டாற்றி வருகையில் ஜவாஹர்லாலின் குடும்பத்தோடு பழக்கம் ஏற்பட்டது. அவருடைய குணச் சிறப்பும், உழைப்பும் ஜவாஹருக்கு மிகவும் பிடித்துவிட்டன. பொது வாழ்வில் லால் பகதூர் முன்னேற ஜவாஹர்லால் பெரிதும் துணைபுரிந்தார்.

இந்த நிலையில் குடும்பத்தினர் அவருக்கு மண முடிக்க விழைந்தனர். அதன் விளைவாக மிர்ஜாபூரைச் சேர்ந்த லலிதா தேவியாரை லால் பகதூர் 1927இல் மணந்து இல்லற வாழ்க்கை நடத்தத் தொடங்கினர். குடும்பப் பாங்கும், அடக்கமும் உடையவர் லலிதா தேவியார்; அன்றியும் கணவரைப்போலவே நாட்டுப் பற்று மிக்கவர்.

பின்பு, லால் பகதூர் காந்தியடிகளின் ஆணைப்படி வரிகொடா இயக்கத்தைத் தொடங்கி நடத்த விரும்பி அதற்கு ஆவன செய்தார். அதனல் பன்முறை சிறை செல்ல நேரிட்டது. 1930 முதல் 1945 வரை பதினைந்து ஆண்டுகளில் ஒன்பது ஆண்டுகளைச் சிறையிலேயே கழித்தார் லால் பகதூர். அவர் சிறையிலிருந்த காலத்தில் குடும்பத்தில் எத்துணையோ

அல்லல்கள் விளைந்தன. அவர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாமல் நாட்டுத் தொண்டிலேயே நாட்டங் கொண்டு விளங்கினர்.

1946 ஆம் ஆண்டில் லால் பகதூர் உத்தரப் பிரதேசப் பார்லிமெண்டரிச் செயலாளரானர். போலீசு, போக்குவரவு அமைச்சராகிப் பஸ் போக்குவரத்தைத் தேசீய மயமாகச் செய்தார். ‘ ஊர்க் காவற் படை ’ என்ற ஒன்றை அமைத்துப் பல இளைஞர்களை அதில் சேர்ந்து பணியாற்றுமாறு செய்தார்.

1950இல் நேரு அவர்கள் லால் பகதூரைக் காங்கிரசு பொதுச் செயலாளராக நியமித்தார். பின் லால் பகதூர் மத்திய மேல்சபை அங்கத்தினரானர். அவருடைய உழைப்பையும் நேர்மையையும்பற்றி நன்கு அறிந்திருந்த நேரு மத்திய அமைச்சர் அவையில் அவரை இரயில்வே அமைச்சராக்கினர். 1956இல் மெகபூப் நகர், அரியலூர் என்னுமிடங்களில் பயங்கரமான இரயில் விபத்துக்கள் நிகழவே, பதவியில் நீடிக்க அவர் மனம் இடந்தரவில்லை. அதனல் மந்திரிசபையிலிருந்து வெளியேறினர். பின் 1957இலும் நேரு அவரைப் போக்குவரத்து அமைச்சராகவே ஆக்கினர். பின் ஓராண்டில் தொழில், வர்த்தக அமைச்சர் பதவியும், 1961இல் உள்துறை அமைச்சர் பதவியும், 1962 இல் பாதுகாப்பு அமைச்சர் பதவியும் அவரைநாடி வந்தன. 1963இல் காமராஜர் திட்டப்படி பதவியை உதறிவிட்டு வெளியேறினர்.

1964ஆம் ஆண்டில் ஜனவரி மாதம் புவனேசுவரத்தில் நிகழ்ந்த காங்கிரசு மாநாட்டில் நேரு நோய்வாய்ப்படவே அவருடைய பொறுப்புக்களை இலாகா இல்லாத அமைச்சராகத் தாம் ஏற்றுக்

கொண்டார் லால் பகதூர். அதே ஆண்டு மே மாதம் 27ஆம் நாள் நேரு அமரராகிவிடவே பாராளுமன்றக் காங்கிரசுக் கட்சித் தலைவராக ஒருமனதாகத் தேர்ந் தெடுக்கப்பட்டு லால் பகதூர் 1964இல் ஜூன் மாதம் 9ஆம் நாள் பிரதம மந்திரியானார். பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றபின் ருஷிய-பாரத நட்பை வலிமையுறச் செய்தார். கனடாவுக்கும் சென்று பாரதத்தின் நட் புணர்ச்சியை வெளிப்படுத்தினார். இந்நிலையில் கட்ச்-ராண் பகுதிகளில் ஊடுருவித் தொல்லை கொடுத்த பாகிஸ்தான் படைகளைத் திறமையுடன் பின்வாங்கச் செய்தார். நிதானம் தவறாமலும், அதே சமயத்தில் போர் பரவவிடாமலும் நடந்துகொண்ட லால் பக தூரின் ஆட்சிச் சிறப்பை அனைவரும் உணர்ந்து கொண்டனர். மேலும் சென்ற ஆண்டில் (1965) காஷ்மீரில் ஊடுருவியதுடன் அல்லாமல் பாகிஸ்தானி யர் போர் நிறுத்த எல்லைக் கோட்டையும் தாண்டி வந்து போரிடத் தொடங்கினர். இந் நிலையில் பிரிட் டன், அமெரிக்கா போன்ற நாடுகள் நமக்குத் துணை புரிய முன்வரவில்லை. மற்றும் பல நாடுகளும் அதுவரை செய்துவந்த உதவிகளை நிறுத்திவிட்டன. ஆயினும் இவற்றால் மனங்கலங்காத லால் பகதூர், ‘எவர் உதவியையும் எதிர்பாராமல் நம்முடைய வலிமை கொண்டே ஆக்கிரமிப்பை முறியடிப்போம்’ என்று கூறித் துணிந்து நின்றார். அவருடைய உறுதி மிக்க தூண்டுதல்களால் பாரதப் படையினர் செய்த வீர தீரச் செயல்கள் உலகையே திகைக்க வைத்தன. உலக நாடுகளும் லால் பகதூரின் அஞ்சா நெஞ்சம் கண்டு பாராட்டின.

ஆழமறியாமல் காலேயிட்டுக் கொண்ட பாகிஸ்தானியர்க்குத் தோல்விமேல் தோல்வி ஏற்பட்டது. ஆயினும் பாரத-பாகிஸ்தான் போர் உலகப் போராக மூளாதிருக்க ஐக்கிய நாட்டுச் சபைப் பொதுச் செயலாளர் ஊதாண்ட் வழிகளே வகுத்தார். பின் அதனைத் தொடர்ந்து இரு நாட்டினரும் சமாதானமாக வாழ உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொள்வதற்காக ருஷியப் பிரதமர் கோசிஜின் ஏற்பாடு செய்தார். அதன்படி லால் பகதூர் சாஸ்திரி அவர்கள் தாஷ்கென்ட் என்னுமிடத்திற்குச் சென்ருர். பகையுணர்ச்சி கொண்டிருந்த பாகிஸ்தான் அதிபர் அயூப்கானின் மனத்தைத் தம் சொல் திறமையாலும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையாலும் மாற்றினர். இரு நாடுகட்கு இடையேயும் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டார். தம் அன்புக் குணத்தால் பகைவரின் மனத்தையும் நெகிழ வைத்துத் தாஷ்கென்ட் சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திடுமாறு செய்தார்.

இங்ஙனம் போர்க் காலத் தலேவராகவும், சமாதான காலத் தலேவராகவும் திகழ்ந்த தாஷ்கென்ட் வெற்றி வீரர் லால் பகதூர் சாஸ்திரி அவர்கள் 10-1-66 திங்கட்கிழமையன்று இரவு மணி 1-32 அளவில் தாஷ்கென்டிலேயே புகழுடம்பு பெற்ருர். மறைந்த அம்மாவீரருக்கு உலக நாடுகள் அனைத்தும் ஒன்றுகூடி வந்து அஞ்சலி செலுத்தின.

பாரதப் பிரதமராகப் பதினெட்டே மாதங்கள் தாம் பதவியிலிருந்தார் லால் பகதூர் சாஸ்திரி அவர்கள். ஆயினும், குறுகிய அந்தக் காலத்திற்குள் அரும்பணிகள் பலவாற்றி அழியாப் புகழை அடைந்து விட்டார். வறிய குடியிற் பிறந்து உழைப்பாலும்,

ஊக்கத்தாலும் முன்னேறி, எளிய தோற்றமும், ஆடம்பரமற்ற வாழ்க்கையும் உடையவராய்த் தன்னல மற்ற தேசத் தொண்டாற்றிச் சிறப்பெய்திய லால் பகதூராரின் வரலாறு வருங்காலச் சமுதாயத்தை வாழவைக்கும் வழிகாட்டியல்லவா?

அருஞ்சொற்பொருள்கள்: கிரந்தங்கள் - நூல்கள். வித்து - விதை. நல்லூழ் - நல்வினை (அதிர்ஷ்டம்). கண்காணிப்பு - மேற்பார்வை. துறந்த - விட்டு நீங்கிய. அல்லல் - துன்பம். தீரம் - தைரியம். அஞ்சலி - மரியாதை.

**வினாக்கள்**

1. லால் பகதூரின் புதுமை முழக்கம் யாது?
2. லால் பகதூரின் பள்ளி வாழ்க்கையைப் பற்றிக் கூறுக.
3. லால்பகதூரின் உள்ளத்தில் அடக்கத்துக்கு வித்திட்ட பகுதி எது?
4. சிறு குறிப்புத் தருக: தாஷ்கென்ட் உடன்படிக்கை.
5. லால் பகதூரின் வரலாறு எத்தகை மாண்புடையது? ஏன்?
6. லால் பகதூரின் குணநலன்களைக் கூறுக.

———

# 13. பெருங்குடிப் பெருமகன்

பண்டைச் சோழப்பெருநிலத்தின் தலைநகராய்த் திகழ்ந்த புகார் நல்லோர்கள் நிறைந்த நல்லிட மாக விளங்கியது. பொதியமலை, இமயமலை போல என்றும் நிலைபெற்றது 'புகார்ப்பதி' என்று பெரியோர்களால் போற்றப்பட்டதும், வளமை, இன்பம், நிலைபேறு முதலிய எவ்வகையிலும் தனக்கே உரிய தனிச்சிறப்புடைய நகரமாக விளங்கியதுமான புகாரில் பல திறப்பட்ட குடிமக்கள் வாழ்ந்து வந்தனர்.

அக் குடியினருள் இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் முப்பெரு வணிகப் பிரிவினர் இருந்தனர். அவர்கள் அரசரோடு ஒப்பவைத்து மதிக்கப்படும் அளவுக்குச் செல்வ வளத்தில் சிறந்திருந்தனர். திரை கடல் ஓடித் திரவியம் ஈட்டியவர்கள் அவர்கள். கருவி லேயே திருவுடையவர்கள் என அவர்களைச் சொல்ல லாம். நடுவு நிலைமையிலிருந்து தவருமல் நடந்தனர். பிறரிடமிருந்து பொருளைக் கொள்ளும்பொழுது அளவுக்கு அதிகமாகப் பெருமலும், கொடுக்கும் பொழுது குறைத்துக் கொடுக்காமலும் செம்மையாக வாணிகம் செய்தனர். இங்ஙனம் பிறவும் தம்போல் பேணிச் செய்யும் பெரும்பண்பு அவர்களிடமிருந்தமை யின், அவர்கள் செல்வ வளம் பெற்றிருந்ததில் வியப் பில்லையல்லவா?

இந்த முக்குடிகளுள் ஒன்ருன பெருமை மிக்க பெருங்குடியர் மரபிலே, மாசாத்துவான் என்ற வாணி கப் பெருமகனுர் ஒருவர் இருந்தார். அவர் இல்லை யென்றுரைப்போர்க்கு இல்லை என்றுரையாது, ஈயும்

சிறப்புடையவர். அன்னார்க்குக் கோவலன் என்றொரு மகன் பிறந்து முறைப்படி வளர்ந்து பதினாறும் பிரா யத்தை அடைந்தான்.

ஆண்டு பதினாறு நிரம்பப் பெற்ற கோவலன் அத்துணைச் சிறுவயதிற்குள்ளாகவே யாவரும் போற் றும் பண்புகள் பல பெற்றிருந்தான். ஆவண மறு கில் அவனை அறியாதாரே இலர் எனலாம். நல்லாட வன் ஒருவனுக்கு அமையவேண்டிய அத்துணை நல்ல குணங்களும் அவனிடம் இயல்பாகவே அமைந்திருந் தன. திருவில் நிறைந்திருந்த அவன் உருவிலும் நிறைந்திருந்தான். அழகில் முருகனே அவன் என்று யாவரும் வியந்தனர் எனின் அவன் வடிவழகு கூறும் திறத்ததோ ?

கோவலன் வீரத்திலும், ஈகையிலும், கருணையி லும் சிறந்து விளங்கினான். ஒரு முறை, கிழவரொருவர் கோவலனிடம் பொருள் பெறுவதற்காக வந்து கொண்டிருந்தார். வளைந்த யாக்கையும், நரைத்த தலையும், ஒட்டிய உடலும் அவருடைய மூப்பை எடுத்துக்காட்டின. கைத்தண்டூன்றி, நடை தள் ளாட மெல்ல அடிமேல் அடியிட்டு நடந்துகொண் டிருந்தார் அவர். அப்பொழுது மதங்கொண்ட யானை ஒன்று, அந்த வீதி வழியாகப் பாகர்க்கு அடங் காமல் அவர்களைக் கீழேதள்ளிவிட்டு வேகமாக ஓடி வந்தது. அதன் கால்களிலும், துதிக்கையிலும் சிக் கிப் பல பொருள்கள் சீரழிந்தன. அதனைக் கண்டவர் யாவரும் வெருண்டு ஓடி மறைந்து கொண்டனர். பாவம் கிழவர் என்ன செய்வார்! யானையிடமிருந்து தப்பிப் பிழைக்க வேண்டுமென்று அவர் மனம் துடித் தது. ஆனால் மூப்பு தப்ப இடங்கொடுக்கவில்லை.

இருப்பினும் வேகமாக நடக்க முயன்ருர்; கால்கள் ஒத்துழைத்தால்தானே !



இறுதியில் யானை அவரை நெருங்கியது ; தான் செல்லும் வழியில் குறுக்கே மெல்ல நடந்து தடை செய்யும் அவரைத் துதிக்கையினுல் சுற்றி வளைத்து விட்டது. கிழவரோ 'கோ'வெனக் கதறிப் புலம்பி ஞர். யானைக்கு அஞ்சிப் பதுங்கியவர்களும் அந்நிலை யைக்கண்டு கூச்சலிட்டார்களேயன்றி வேறென்றும் செய்தாரல்லர்.

கணநேரந்தான் கழிந்திருக்கும். மத யானையை நோக்கிப் பாய்ந்தான் ஓர் இளைஞன். அதன் துதிக்கையைப் பற்றி ஈர்த்துக் கிழவரை விடுவித்தான். அந்தச்செயலால் யானையின்சினம்மிகுந்தது. அஃது ஒரு பெரும் பிளிறலுடன் இளைஞனைத் தாக்கியது. அவனை

அடித்துக்கொல்ல எண்ணித் தன் துதிக்கையினால் அவனை மேலே தூக்கியது. உடனே அந்த இளைஞன் அதுதான் தக்க சமயம் என்று உணர்ந்து அதன் இரு கொம்புகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். யானையால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அவனைச் சுற்றிய துதிக்கையை நழுவவிட்டு இங்குமங்கும் ஓடி அலைக்கழித்தது. அதற்கெல்லாம் அவ்விளைஞன் அஞ்சவுமில்லை; அயரவும் இல்லை. அதன் கொம்பு களைப் பிடித்து இப்படியும், அப்படியுமாக அசைத்து அதன் ஓட்டத்தை அடக்கினான். அக்கொம்புகளின் வழியாகவே மத்தகத்தின்மீது ஏறி அமர்ந்து அதன் திமிரை அடக்கினான். ஓடிப் பதுங்கியவர் யாவரும் வெளிவந்துகூடி அவ்விளைஞனை வாழ்த்தினர். அவ் விளைஞனே நம் கோவலன்.

பின்னர், கோவலன் யானையைப் பாகர்களிடம் ஒப்படைத்துவிட்டு வந்து, அக்கிழவர்க்கு வேண்டு மளவு பொருள் கொடுத்து அனுப்பினான்.

மற்றொரு சமயம் கோவலன் ஆவண வீதியிலுள்ள தன் கடையில் அமர்ந்து வாணிகம் செய்து கொண் டிருந்தான். அப்பொழுது அவ்வீதியின் வழியே ஒரு பெண்மணி, 'என் கருமக் கழிபலம் கொள்வீரோ?' என்று கூறிப் புலம்பிக்கொண்டே வந்தாள். வணிக வீதியிலுள்ள அனைவரும் அவளுடைய நிலைகண்டு இரங்கித் தத்தமக்குள் பேசிக்கொண்டனரேயன்றி ஒரு வராவது உதவ முன்வரவில்லை. அந்தப் பெண்மணி கோவலன் அமர்ந்திருக்கும் கடைக்கு எதிரில் வந்து நின்று புலம்பினாள். புழுதி படிந்த மேனியும், பொங் கிப் பெருகிவழியும் கண்ணீரும், விரித்த கூந்தலும், அழுது அழுது சிவந்த கண்களும் உடையவளாய்த்

தோற்றமளித்தாள் அவள். அவள் நிலைகண்டு மனமிரங்கிய கோவலன் அவளை அருகில் அழைத்தான். பரிவோடு, 'அம்மா! நீ இப்போழுது கூறிய தன் கருத்து யாது? நீ இவ்வாறு வருந்தக் காரணம் என்ன?' என்றான். கோவலன் அவ்வாறு கேட்டவுடன் தன் குறை அவனால் தீரலாம் என்ற உறுதியுடன் கோவலனை அணுகிப் பின்வருமாறு உரைத்தாள்.

"ஐயா! தங்கள் பரிவுக்கு என் உளமார்ந்த நன்றி. நான் இவ்வூரில் வாழும் மறையவனின் மனைவி. எங்கள் இருவருக்கும் திருமணமாகிச் சில ஆண்டுகளாகியும் மகப்பேறு இல்லாமையால், ஒரு கீரிப்பிள்ளையைக் குழந்தைபோல வளர்த்துவந்தோம். பின்னர், பல ஆண்டுகள் கடந்து எங்கட்கு ஒரு குழந்தை பிறந்தது. ஒருநாள் குழந்தைக்குக் காவலாகக் கீரியை வைத்துவிட்டுத் தண்ணீர் எடுக்க நான் வெளியிற் சென்றிருந்தேன். அப்பொழுது குழந்தை இருந்த இடத்தைப் பாம்பொன்று அணுகவே அதனைக் கண்ட கீரி அப்பாம்பைக் கடித்துத் துண்டமாக்கிக் கொன்றுவிட்டது. பின் இரத்தம் தோய்ந்த வாயுடன், அச்செய்தியைத் தெரிவிக்க வாயிற்படியில் காத்திருந்தது. நடந்த உண்மையை அறியாத நான் அக்கீரி குழந்தையைத்தான் கடித்துக் கொன்றுவிட்டதெனத் தவறாக எண்ணினேன். ஆத்திரத்தில் அறிவிழந்து அருகில் இருந்த மணை ஒன்றை எடுத்து அதனை அடித்துவிட்டேன். மணையால் அடிபட்ட கீரி சுருண்டு விழுந்து மாண்டுவிட்டது.

"வெளியிற் சென்று வீடு திரும்பிய என் கணவர் நடந்தவற்றை அறிந்தார்; துடித்துப் புலம்பினார்.

நானும் என் அறிவற்ற செயலுக்காக வருந்தி நொந்தேன்; அழுதேன். அழுது புலம்பிப் பயன் என்ன? ஆண்டாண்டுதோறும் அழுதுபுரண்டாலும் மாண்ட பிள்ளை வராது. என் மீது கோபங்கொண்ட என் கணவர் அந்தப் பாவத்தைப் போக்கிக்கொள்ளக் கங்கைக்குச் சென்று நீராடுவதற்குப் புறப்பட்டார். கணவர் கருத்தறிந்த நானும் உடன்செல்லப் புறப்பட்டேன். ஆனால் அவரோ, 'நீ பாவி; உன் கையால் படைக்கப்பட்ட உணவை உண்டு வாழ்க்கை நடத்துவதே பாவம். இப் பெரும் பாவத்தைக் கழிக்க முயல்வாயாக' என்று கூறினர். அத்துடன், 'பாவத்திற்குக் கழுவாய் வழிகள் எழுதிய இவ்வேட்டை உணர்ந்து நீக்கக் கூடியவர்கள் கையில் கொடுத்துப் புண்ணியத்தைத் தேடிக்கொள்' என்று கூறிச்சென்றுவிட்டார். அன்றுமுதல் வீதி வீதியாக அலைந்து திரிந்து வருகிறேன். நான் செல்லாத இடமில்லை; வேண்டாத மனிதரிலர். அனைவரும் என் கதை கேட்டுப் பரிவு காட்டுகிறார்களே ஒழிய, ஒருவராவது உதவ முன்வரவில்லை. என்ன செய்வேன் பாவி நான்''

இவ்வாறு தன்முன் நின்று வருந்திய மறையவன் மனைவியை நோக்கி, 'அம்மா! தாங்கள் இனி வருந்த வேண்டா. உங்கள் பாவத்தைப் போக்கிக் கணவனுடன் கூட்டிவைத்து உங்களை வாழச் செய்கிறேன்' என்றான் கோவலன். பின் தான் வாக்களித்தபடியே தருமாசனத்தோர் உரைத்த நூலில் கூறியபடி கொலைப்பாவம் நீங்குவதற்குரிய தானத்தைச் செய்தான். அதனால் அவள் துன்பம் ஓரளவு நீங்கியது. மேலும் அவளுடைய வாழ்வை மலரச்

செய்ய வேண்டுமென்று எண்ணிய கோவலன் கங்கை யாடச் செல்வேன் என்று கூறிச்சென்ற மறையவனை யும் கூட்டிவரச் செய்தான். அவர்களுடைய எதிர்கால வாழ்விற்குத் தேவையான பொருள்களையெல்லாம் ஒன்றிலுங் குறையாத வகையில் அளித்து மனைவியை யும் அவனிடம் ஒப்படைத்து, 'இனி நீங்கள் இருவீரும் மனமொத்துப் பழைய நிலைபோல மாருமல் வாழ்ந்து வாருங்கள்!' என்று கூறினுன். அவ்விருவரும் கோவ லனை மனமார வாழ்த்தி மகிழ்ந்து சென்றனர். இத்த கைய கொடைத்திறம் எவராலும் செய்தற்கரிய தன்ருே!

இன்னணம் கருணை மறவனுகவும், கொடை வள்ளலாகவும் விளங்கிய கோவலனுடைய பெருந் தன்மையை மற்ருெரு நிகழ்ச்சியாலும் உணரலாம்.

புகார் நகரில் பூத சதுக்கம் என்ருெரு மன்றம் இருந்தது. அம் மன்றத்தில் பூத மொன்று இருந்து வந்தது. அது 'துறவிபோல் வேடம் பூண்டு கூடா ஒழுக்கத்தில் நடப்பவர்கள், கட்டிய கணவர்க்குத் துரோகம் செய்து தவருன நடத்தையில் ஒழுகும் மகளிர், நம்பிய மன்னரை வஞ்சித்து அவர் உடைமைகளைக் கவர எண்ணும் அமைச்சர்கள், பிற ருடைய மனைவியை விரும்பும் பாவிகள், பொய்சாட்சி சொல்லுபவர்கள் ஆகியவர்களை, என் கையில் உள்ள பாசக்கயிற்ருல் கட்டிவந்து நிலத்தில் மோதி அறைந்து கொன்று தின்பேன்' என்று கூறி அவ் வாறே செய்தும் வந்தது.

அங்ஙனமிருந்தும் அறிவற்ற ஒருவன் பொரு ளுக்கு ஆசைப்பட்டுப் பொய் சாட்சி சொல்லத் துணிந் தான். கற்புநெறி தவருத பத்தினி ஒருத்திமீது

அவள் கணவன் கூறியபடி குற்றம் கூறிப் பொய் சாட்சி சொன்னான். அதனையறிந்த சதுக்கப்பூதம் விரைந்துவந்து தன் கைப் பாசத்தால் அவனைக்கட்டி இழுத்துச் சென்றது. அச் செய்தி விரைவாக நகரெங் கும் பரவியது. செய்தியைக் கேட்ட அந்த அறிவற்றவ னின் தாய் ஓடோடி வந்தாள். தன் குடிக்கு ஒரே மைந்தன் அவன், தன்னைக் காப்பாற்றுபவனும் அவனே என்றெல்லாம் பலவாறு சொல்லிப் புலம்பி மன்றாடினாள். ஆனால் எவ்வளவு மன்றாடியும் பூதம் அவனை விடுவிக்க மறுத்துவிட்டது. நடந்தவற்றை நேரிற்கண்ட கோவலன் மனத்தில் இரக்கம் பிறந் தது. மகனுக்காக அலறிப் பின்தொடரும் தாயின் துயரைப் போக்கவேண்டுமென்று எண்ணி விரைந்து பூதத்தினிடம் சென்றான். அதன் கைப் பாசத் திற்குள் தானும் புகுந்துகொண்டு பூதத்தைநோக்கி, 'குற்றவாளிகளைத் தண்டிக்கும் பூதமே! இவன் அறி யாச் சிறுவன். இவன் தாய் படுகின்ற அவலத்தைப் பார்! தயைசெய்து என் உயிரை எடுத்துக்கொள். இவனை விட்டுவிடு!' என்று கெஞ்சினான். கோவலன் கூறியதைக்கேட்ட பூதம், 'நல்லவனே! பொருளுக்கு ஆசைப்பட்டுப் பத்தினி ஒருத்திமீது அடாப்பழி சுமத் தத் துணையாக இருந்த இக் கீழ்மகன் உயிர்க்காக, உன்னுடைய நல்லுயிரைக்கொண்டு எனக்குக் கிடைக்க இருக்கும் மேலான கதியை நான் இழக்க மாட்டேன். ஆகவே, நீ உன் எண்ணத்தை மாற்றிக் கொள்' என்று சொல்லி, கோவலனுக்கு முன்பாகவே அக் கீழ்மகனை அடித்து விழுங்கிவிட்டது. அதனால் கீழ்மகனுடைய தாய் மேலும் கதறிப் புலம்பினாள். கோவலன் அவளை அழைத்துச்சென்று ஆறுதல் பல

வாறாகக் கூறினான். அவளுக்கேயன்றி, அவளுடைய சுற்றத்தார்க்கும் நிரம்பவும் பொருள்கொடுத்து ஆயுட் காலம் வரை அவர்களனைவரையும் பாதுகாத்தான்.

இத்தகைய உயர்குணங்கள் இயல்பாகவே அமைந்த குணக் குன்றாக விளங்கினான் பெருங்குடி தந்த பெருமகனான கோவலன்.

அருஞ்சொற் பொருள்கள் : ஒப்ப - சரிசமமாக. திரை - அலை. கருவிலே திருவுடையவர் - பிறவிச் செல்வர்கள். தமபோல் - தம்முடைய பொருள்கள்போல். ஆவண மறுகு - கடைவீதி. அத்துணை - அவ்வளவு. திரு - செல்வம். உரு - அழகு. வெருண்டு -பயந்து. மூப்பு - வயதான தன்மை. மத்தகம் - தலையுச்சி. கருமம் - காரியம். கழிபலம் - நீக்கிய பலன். பரிவு - அன்பு. மணை - மரக் கட்டை. மாண்டுவிட்டது - இறந்துவிட்டது. கழுவாய் - பிராயச்சித்தம். மன்றம் - இடம். சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடும் இடம். கவர்தல் - கைப்பற்றுதல். மன்றாடினாள் - கெஞ்சிப் புலம்பினாள்.

### வினாக்கள்

1. கோவலனுடைய தோற்றத்தையும், குணங்களையும் கூறு.
2. கோவலன் யானையினிடமிருந்து முதியவரை விடு வித்த நிகழ்ச்சியைச் சுருக்கமாகத் தெரிவி.
3. கோவலன் தன்முன் வந்து நின்ற பெண்மணியின் துயரை எவ்விதம் நீக்கினான் ?
4. கோவலனிடம் உதவிபெற வந்த பெண்மணியின் கதையைச் சுருக்கமாகக் கூறு.
5. கீரியை அப்பெண்மணி அடித்துக் கொலைசெய்யக் காரணம் என்ன ?
6. கோவலனின் இரக்க குணத்துக்குச் சான்று கூறுக.

---

## 14. வில்லிபாரதம் தோன்றிய வரலாறு

நம் பாரத நாட்டின் இதிகாச நூல்கள் இராமாயணம், மகாபாரதம் என்னும் இரண்டுமாகும். பாரதம் கௌரவர்களுக்கும் பஞ்சபாண்டவர்களுக்கும் நிகழ்ந்த போரைப்பற்றி விளக்க எழுந்த நூலாகும். அதனை முதன்முதலில் வடமொழியில் 'வியாசர்' என்னும் முனிவர் பாடினர். அவர் பாடிய நூலைப் பின்பற்றித் தமிழ்மொழியிலும் பாரத நூல்கள் பாடப்பட்டுள்ளன.

தமிழில் பெருந்தேவனர் பாரதம், பாரதவெண்பா, பாலபாரதம், வில்லிபாரதம் என்று நான்கு நூல்கள் பாடப்பட்டுள்ளன. இவற்றை முறையே பெருந்தேவனர், நல்லாப்பிள்ளை, அகத்தியபட்டர், வில்லிபுத்தூரார் என்போர் பாடினர்கள். இவைகளைத் தவிர, பாரதத்தின் ஒரு பகுதியைப் 'பாஞ்சாலி சபதம்' எனப் பாரதியார் பாடியுள்ளார்.

தமிழிலுள்ள பாரத நூல்களில் இன்று தலை சிறந்ததாகப் பாராட்டப்படுவது 'வில்லிபாரதமே' யாகும். இந்நூல் பாடப்பட்ட வரலாறு வியப்புக்குரியதாகும்.

திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்றோர் ஊர் உள்ளது. அவ்வூரில் பல வைணவ அந்தணக் குடும்பங்கள் வாழ்ந்து வந்தன. அவற்றுள் ஒன்றிற்கு வீரராகவர் என்பவர் தலைவராக இருந்தார். இவர் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கங்களிற் சிறந்து யாவரும் போற்ற வாழ்ந்து வருகையில் இவருக்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது. திருமாலிடமும், அவரிடம் பக்தி செலுத்திய ஆழ்வார்களிடமும் அளவிறந்த பற்றுக் கொண்டவர் வீரராகவர். ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வார் திருவில்லிபுத்தூரில்

வாழ்ந்தவர். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாளின் தந்தை அவர். ஆதலால் அன்னாரின் ஊர்ப்பெயரைத் தம் மகவுக்கு வைக்க எண்ணி 'வில்லி புத்தூரார்' என்று பெயரிட்டார்.

வில்லிபுத்தூரார் நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்ந்து பள்ளிப்பருவத்தை அடைந்தார். அந்நிலையில் வீரராகவருக்கு மற்றோர் ஆண்மகவு பிறந்தது.

வீரராகவர், முறைப்படி தம் முதல் மைந்தரைப் பள்ளியிற் சேர்த்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பது பழமொழி. அதற்கேற்ப, வில்லிபுத் தூரார் இளம்பருவத்தில் சுறுசுறுப்பும், ஊக்கமும் கொண்டு, நன்கு கூர்ந்து கவனித்துப் படித்து வந்தார். தமிழ், வடமொழி என்னும் இரு மொழிகளை யும் ஒருசேரத் திறம்படக் கற்று வந்தார். இவரைப் போலவே, இவர் இளவலும் கல்வியில் ஆர்வமுடைய வராய்க் கற்றுத் தேறி வந்தார். தம் மைந்தர் இருவர்க் கும் கல்வி பயில்வதில் நல்ல ஆர்வம் இருப்பதைக் கண்டார் வீரராகவர். அதனால் அவ்விருவரும் தக்க புலவர்கள் பலரை அடுத்துச் சென்று கற்பதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்துகொடுத்தார். தந்தை மகற்கு ஆற்றும் உதவி அதுவேயல்லவா ?

வில்லிபுத்தூராரும், அவர் இளவலும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிவதே இல்லை. எப்பொழுதும் இணைந்தே சென்றனர்; படித்தனர்; ஆராய்ந்தனர்; செயல்கள் ஆற்றினர். அவர்களுடைய ஒற்றுமையைக் கண்ட ஊரினர் யாவரும் வியந்தனர்.

இங்ஙனம் ஊரினர் வியக்க வாழும் அவ்விருவரும் தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளிலுமுள்ள

இலக்கிய, இலக்கணங்களை யெல்லாம் திறம்படக் கற்றுத் தேர்ந்தனர்.

வீரராகவர் பெரும் பொருள் ஈட்டியிருந்தார். பொருட் செல்வமும், கல்விச் செல்வமும் நிரம்பிய மைந்தர் இருவர்க்கும் பெண்கொடுக்கப் பலர் முன் வந்தனர். வீரராகவரும் மைந்தர் இருவர்க்கும், தக்க குணமுள்ள பெண்களைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்து வைத்தார். பின் சின்னாளில் தம் கடமைகளை நிறைவேற்றிய மனநிறைவில் இறையடி சேர்ந்தார்.

தந்தையின் மறைவுக்குப் பின் சகோதரர்கள் இருவரும், திருவில்லிபுத்தூரை யடைந்து ஒருவர்மீது ஒருவர் அன்புடையவராய் வாழ்ந்து வரலாயினர். உடன்பிறந்தோர் அவ்வாறு வாழ்வது இயற்கையே. ஆனால், அவர்களுக்கு வாய்த்த மனைவியர் வெவ்வேறு குடும்பத்தினின்று வந்தவர்களாயினும் தத்தம் கணவர் போலவே தம்முள் அன்புகொண்டு குடும்ப வாழ்க்கையைச் செம்மையாக நடத்திவந்தனர்.

இவர்கள் காலத்தில் கொங்கு நாட்டில் வக்கபாகை என்னும் இடத்தில், வரபதி ஆட்கொண்டான் என்னும் குறுநில மன்னர் ஒருவர் ஆண்டு வந்தார். அம்மன்னர் தமிழார்வமுடையவராக இருந்தார். ஆதலால், அப்பொழுதிருந்த புலவர்கள் பலரையும் தம் அவைக்கு வரச்செய்து அவர்களோடு அளவளாவி வந்தார். உலகத்தில் பெறும் இன்பங்களுள் சிறந்தது கற்றாருடன் கூடி அளவளாவும் இன்பமேயாகும். அவ்வின்பத்தில் திளைத்து வாழ்ந்து வந்த வரபதியாட்கொண்டானின் உள்ளத்தில் ஓர் அவா உண்டாயிற்று. பெருங்காவியங்களில் ஒன்றான பாரத நூலைத் தமிழில் பாடச் செய்யவேண்டும் என்பதுதான் அந்த அவா.

அதனல் அதற்குத் தக்கவர் யாரெனத் தேடுகையில் வில்லிபுத்தூராருடைய பெருமைகளைப் பற்றிக் கேள்விப் பட்டார். ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவித்திறமைகளும் பெற்றவர் அவர் என்பதையும், தமிழ், வடமொழி என்னும் இரு மொழிகளிலும் பெரும்புலமை உடையவர் என்பதை யும் அறிந்தார். பாரத நூலைப் பாட அன்னரே ஏற்ற தகுதியுடையவர் என்ற முடிவுக்கு வந்தார்.

வில்லிபுத்தூரார் செல்வம் மிக்குடையவர்; ஈடு இணையற்ற புலமை படைத்தவர். அன்னரை, 'பாரத நூல் பாடுக' என்ருல் எளிதில் பாடிவிடமாட்டார். ஆகவே அவர் பாடுவதற்கேற்ற சூழ்நிலையை ஏற் படுத்த வேண்டும் என்று எண்ணினர். தாம் எண்ணிய வாறே ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்த வில்லிபுத்தூரார் குடும்பத்துள் பிளவை யுண்டாக்கக் கருதினர். அதற் காக ஒரு பெண்மணியை அனுப்பி வில்லிபுத்தூரார் வீட்டிலுள்ள இரு பெண்மணிகளும் நாளடைவில் ஒரு வர்மீது ஒருவர் வெறுப்பும், பகையும் கொள்ளும்படி செய்வித்தார். அதன் விளைவாக அவ்விருவரும் தத்தம் கணவன்மாரிடம் ஓயாது குறைகூறிப் பிரிவுக்கு வழி கோலினர்.

மனைவியின் தீய உரைகளால் சகோதரர்கள் இரு வரும் ஒருவர்மீது ஒருவர் ஐயம் கொள்ளலாயினர். அந்த ஐயம் நாளடைவில் வளர்ந்து இருவரிடையே பிளவை உண்டாக்கும் அளவுக்கு முற்றியது.

அதனல் சகோதரர்கள் இருவரும் தாயபாகம் குறித்துச் சச்சரவு இடலாயினர். அதைக் கேட்டுத் தம் முயற்சி பலித்து விட்டதைக் கண்டு வரபதியாட்கொண் டான் மிக்க மகிழ்ச்சியடைந்து வில்லிபுத்தூர் சகோதரர்

களின் தாயபாக வழக்கு வரின், தம் அவைக்கு அவ் வழக்கை அனுப்பிவிடுமாறு பாண்டிய மன்னருக்கு வேண்டுகோள் ஒன்று விடுத்தார். அத்துடன் அவ் வழக்கைத் தீர்த்து வைக்கும் முகமாக வில்லிபுத்தூ ராரிடம் தொடர்புகொண்டு அவர் மூலம் தம் அவா வைத் தீர்த்துக் கொள்ளத் தாம் எண்ணியதையும் பாண்டியருக்குத் தெரிவித்தார். பாண்டியரும் அவர் வேண்டியவாறே செய்ய இசைந்தார்.

தாயபாகத்தைப் பங்கிட்டுக் கொள்வதில் தமக் கும் இளவலுக்கும் ஏற்பட்ட வழக்கைத் தீர்த்து வைக்குமாறு வில்லிபுத்தூரார் பாண்டியரிடம் முறை யிட்டார். பாண்டியரோ, 'உங்கள் வழக்கைத் தீர்த்து வைத்தற்கு உரியவர் கொங்கு நாட்டு மன்னரான வரபதியாட்கொண்டானேயாவார். அவரிடம் செல் லுக' என்று கூறினன்.

எப்படியாவது வழக்குத் தீர்ந்தால்போதும் என்று எண்ணிய வில்லிபுத்தூராரும், அவர் இளவலும் வரபதியாட்கொண்டானின் அவையை அடைந்து தத்தம் வழக்கை உரைத்தனர். நடந்தவை யாவையும் முன்னமே அறிந்தவராதலின், அம்மன்னர் வில்லிபுத் தூராரை நோக்கி உங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் வழக்கை நன்கு ஆராய்ந்த பின்னரே தீர்ப்பளிக்க வேண்டும். அதற்குச் சில நாட்கள் ஆகக்கூடும். ஆகவே அதற்குள் தாங்கள் மகாபாரதத்தைத் தமிழில் பாடியருள வேண்டும் என்று கூறி அதற்கு வேண்டிய வசதிகளையும் செய்துகொடுத்தார்.

வில்லிபுத்தூரார் அவ்வேண்டுகோளை மறுக்க மாட்டாதவராய்ப் பாரதம் பாடத்தொடங்கினர். அவர் உள்ளத்தில் அப்பொழுது குடிகொண்டிருந்த உணர்ச்

சிப் பெருக்கு பாரதத்தைச் சிறந்த முறையில் இயற்று வதற்கு ஏற்றதாக இருந்தது. பாரதக் கதையும் தாயபாகம் காரணமாகச் சகோதரர்களுக்குள் ஏற்பட்ட பூசலையும் விளைவையும் விளக்குவதுதானே! நூலைத் தொடங்கும்பொழுதிருந்த உணர்ச்சியும், வெறுப்பும், வில்லிபுத்தூராரிடம் நாளடைவில் குறைந்து வர லாயின. நூலைப் பாடிமுடித்தபின் பாரதக் கதை முடிவைப் போலத் தம் குடும்பமும் சீரழிவதை விரும்பாத அவர், மன்னரிடம் சென்று தமது இளவலின் விருப்பப்படியே தீர்ப்பளித்து விடும்படி வேண்டினர். கொங்கு மன்னரும், வில்லிபுத்தூராரின் விருப்பப் படியே வழக்கை முடித்துத் தீர்ப்பளித்தார்.

அருஞ்சொற் பொருள்கள்: மகவு-பிள்ளை. இளவல்-தம்பி. ஆர்வம் - விருப்பம். தாயபாக - சொத்துரிமை. பூசல் - போர். சீர் - சிறப்பு.

### வினாக்கள்

1. தமிழிலுள்ள பாரத நூல்களையும், அவற்றின் ஆசிரியர்களையும் தெரிவி.
2. வரபதியாட் கொண்டானின் அவா யாது? அது பற்றி அவர் செய்த முடிவு யாது?
3. வில்லிபுத்தூராரை நூலால் பாடச்செய்ய வரபதியாட் கொண்டான் மேற்கொண்ட செயல் யாது?
4. வில்லிபாரதம் பாடப் பெற்ற சூழ்நிலையைச் சுருக்கமாகக் கூறு.

———

# இலக்கணம்

ஒரு மொழியைத் திருத்தமாகப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் கருவியாகிய நூல் இலக்கணம் என்று கூறப்படும். அவ் விலக்கணம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து வகைப்படும்.

## 1. எழுத்து

மொழி தோன்றுவதற்கு முதற்காரணமாக உள்ள ஒலியே எழுத்து எனப்படும். அவ்வெழுத்து முதலெழுத்து, சார்பெழுத்து என இருவகைப்படும், உயிர், மெய் முதலிய மற்றைய எழுத்துக்கள் தோன்றுவதற்கு முதற்காரணமாக உள்ள எழுத்துக்களே, முதலெழுத்துக்களாம். முதல் எழுத்துக்களைச் சார்ந்து இயங்கும் எழுத்துக்கள் சார்பெழுத்துக்களாம்.

**முதல் - சார்பு**

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும், மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் ஆக முப்பது எழுத்துக்களும் முதலெழுத்துக்களாம். உயிரைப் போன்று தனித்தியங்கும் ஆற்றல் உடைமையின் உயிரெழுத்து எனப்பட்டது. அது குறில், நெடில் என இருவகைப்படும். குறுகி ஒலித்தலின் 'குறில்' என்றும், நீண்டு ஒலித்தலின் 'நெடில்' என்றும் அழைக்கப் பெற்றன. அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தும் குற்றெழுத்துக்களாம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழும் நெட்டெழுத்துக்களாம்.

உடலைப்போன்று தனித்து இயங்கும் ஆற்றல் இன்மையின் 'மெய்யெழுத்து' எனப்பட்டது. மெய்யெழுத்துக்கள் பதினெட்டாம். அவை வல்லினம், மெல்லினம், இடையினம் என்று மூன்று வகைப்படும். வன்மையான ஓசை யுடைமையின் 'வல்லினம்' அல்லது 'வன்மை' என்றும், மென்மையான ஓசை உடைமையின் 'மெல்லினம்' அல்லது 'மென்மை' என்றும், வன்மையும் மென்மையும் இன்றி

இடைத்தரமான ஓசையினைக் கொண்டமையின், 'இடை யினம்' அல்லது 'இடைமை' என்றும் அழைக்கப் பெற்றன.

க், ச், ட், த், ப், ற் - வல்லினம்.

ங், ஞ், ண், ந், ம், ன் - மெல்லினம்.

ய், ர், ல், வ், ழ், ள் - இடையினம்.

தனித்து இயங்கும் ஆற்றலின்றி முதலெழுத்துக்களைச் சார்ந்து இயங்கும் எழுத்துக்கள் சார்பெழுத்துக்களாம். அவை பத்து வகைப்படும்.

அவை: 1. உயிர்மெய், 2. ஆய்தம், 3. உயிரளபெடை, 4. ஒற்றளபெடை, 5. குற்றியலிகரம், 6. குற்றியலுகரம், 7. ஐகாரக் குறுக்கம், 8. ஔகாரக் குறுக்கம், 9. மகரக் குறுக்கம், 10. ஆய்தக் குறுக்கம் என்பனவாம்.

**மாத்திரை :**

இயல்பாக எழும்படியான கண்ணிமைப் பொழுதாவது, கைந் நொடிப் பொழுதாவது 'மாத்திரை' எனப்படும்.

| | |
|---|---|
| உயிரளபெடை | - 3 மாத்திரை. |
| நெடில் | - 2 ,, |
| குறில்<br>ஐகாரக் குறுக்கம்<br>ஔகாரக் குறுக்கம்<br>ஒற்றளபெடை | } 1 ,, |
| மெய்யெழுத்து<br>குற்றியலிகரம்<br>குற்றியலுகரம்<br>ஆய்தம் | } $\frac{1}{2}$ ,, |
| மகரக் குறுக்கம்<br>ஆய்தக் குறுக்கம் | } $\frac{1}{4}$ ,, |

**முற்றியலுகரம் :**

தனிக் குற்றெழுத்தைச் சார்ந்த உகரமும், சொல்லின் இறுதியில் மெல்லின மெய்யின் மேலும், இடையின மெய் யின் மேலும் ஏறிநிற்கும் உகரமும், தன் மாத்திரையிற் குறையாது முழு ஓசையோடு ஒலிப்பது முற்றியலுகரமாம்.

உதாரணம் : பசு, தும்மு, எள்ளு.

**குற்றியலுகரம் :**

குறுமை + இயல் + உகரம் = குற்றியலுகரம்.

தனிக் குற்றெழுத்தல்லாத மற்றைய எழுத்துக்களுக்குப் பின்னே, சொல்லின் இறுதியில் வல்லின மெய்யின் மேல் ஏறி நிற்கும் உகரம், குற்றியலுகரம் எனப்படும்.

அஃது ஈற்று அயல் எழுத்தை நோக்க ஆறு வகைப்படும்.

1. நெடிற்றொடர்க் குற்றியலுகரம் - நாடு, நாகு.
2. வன்றொடர்க் குற்றியலுகரம் - பாட்டு, பத்து.
3. மென்றொடர்க் குற்றியலுகரம் - சிலம்பு, நன்று.
4. இடைத்தொடர்க் குற்றியலுகரம்-மார்பு, சால்பு.
5. உயிர்த் தொடர்க் குற்றியலுகரம் - வயிறு, பலாசு.
6. ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம் - எஃகு, அஃது.

**குற்றியலிகரம் :**

குறுமை + இயல் + இகரம் = குற்றியலிகரம்.

வருமொழி முதலில் யகரம் வந்தால் நிலைமொழி ஈற்று உகரம் இகரமாகத் திரியும். அங்ஙனம் திரிந்த இகரமும், 'கேண்மியா' என்னும் அசைச் சொல்லில் இருக்கும் இகரமும் தம் மாத்திரையில் குறைந்து ஒலிக்கும். இவையே குற்றியலிகரம் எனப்படும்.

உதாரணம் :

செய்தது + யார் = செய்தியார்.
கேள் + மியா = கேண்மியா.

## 2. சொல்

**(1) பதமாவது யாது?**

எழுத்துக்கள் தனித்தாயினும், அல்லது பல எழுத்துக்கள் சேர்ந்தாயினும் ஒரு பொருளைத் தரின், அது பதம் எனப்படும்.

**உதாரணம் :** பூ, ஆ, கண், பொன், வண்டு, சிலம்பு, சுண்ணும்பு.

**(2) ஓரெழுத்தொரு மொழி :**

ஓரெழுத்தானது தனித்து நின்று, அதுவே, ஒரு பொருளையும் தரின், ஓரெழுத்து ஒருமொழி என்று கூறப் படும்.

உதாரணம் : ஆ, ஈ, கோ, தீ, நா, பூ, மா, வை.

[ஆ - பசு, கோ - அரசர், நா - நாக்கு, மா - மாமரம்]

**(3) பகாப்பதம் - பகுபதம் :**

பதம் இரண்டு வகைப்படும். அவை பகாப்பதம், பகு பதம் என்பனவாம். பிரிக்க முடியாத பதம் பகாப்பதம் என்றும், பிரிக்கக் கூடிய பதம் பகுபதம் என்றும் கூறப்படும்.

பகாப்பதம் நான்கு வகைப்படும். அவையாவன :

1. பெயர்ப் பகாப்பதம் - கல், மண்
2. வினைப் பகாப்பதம் - வா, படி
3. இடைப் பகாப்பதம் - ஏ, ஓ
4. உரிப் பகாப்பதம் - உறு, தவ

என்பனவாம்.

**(4) பகுபதவுறுப்புக்கள் :**

பகுபத வுறுப்புக்கள் ஆறு ஆகும். அவை 1. பகுதி, 2. விகுதி, 3. இடைநிலை, 4. சாரியை, 5. சந்தி, 6. விகாரம் என்பன.

பகுதி முதலில் வரும். எனவே, முதனிலை என்றும் அழைக்கப் பெறும். விகுதி இறுதியில் வரும். அதற்கு இறுதி நிலை என்ற மறுபெயரும் உண்டு. இடைநிலை நடுவில் வரும். பகுதியை யொட்டிச் சந்தி, விகாரங்களும், விகுதியை யொட்டிச் சாரியைகளும் பெரும்பாலும் வரும்.

பகுதி தொழிலையும் பொருளையும் உணர்த்தும். விகுதி பாலையும் இடத்தையும் உணர்த்தும். இடைநிலை காலத்தை உணர்த்தும். சில சொற்களில் பகுதி இரட்டித்து இறந்த காலங் காட்டுதலும் உண்டு.

**உதாரணம் : நடந்தனன், புக்கான்.**

நட + த் + த் + அன் + அன் = நடந்தனன்.

நட - பகுதி, அன் - விகுதி, த் - இறந்தகால இடைநிலை, அன் - சாரியை, த்-சந்தி, த்-ந் ஆனது விகாரம்.

புகு + ஆன் = புக்கான்.

புகு - பகுதி. ஆன் - விகுதி. புகு என்பது புக்கு என்று இரட்டித்து இறந்த காலங் காட்டியது விகாரமாம்.

**(5) காரண இடுகுறிப் பெயர் :**

காரணங் கருதியபொழுது அக்காரணத்தை உடைய பல பொருள்களை உணர்த்தும் எனினும், காரணங் கருதாத பொழுது, இடுகுறியளவாய் ஒன்றனையே உணர்த்திநிற்கும் பெயர், காரண இடுகுறிப் பெயராம்.

உதாரணம் : முக்கண்ணன்

முக்கண்ணன் என்பது காரணங் கருதியபொழுது, விநாயகர் முதலியவரை உணர்த்தும் எனினும், இடுகுறியளவாய்ச் சிவபெருமானையே உணர்த்தி நிற்கும். எனவே, இது காரண இடுகுறிப் பெயராம்.

**(6) பண்புப் பெயர் :**

பண்பை உணர்த்தி நிற்கும் பெயர் பண்புப் பெயராம். பண்புப் பெயர் எனினும், குணப்பெயர் எனினும் பொருந்தும். அப் பண்புப் பெயர், மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர் முதலிய விகுதிகளைப் பெற்றுவரும்.

**உதாரணம் :** நன்மை, தொல்லை, மாட்சி, மாண்பு, மழவு, நன்கு, நன்றி, நன்று, நலம், நன்னர்.

**(7) தொழிற் பெயர் :**

ஒரு தொழிலுக்குப் பெயராய் வந்து உணர்த்தி நிற்கும் பெயர் தொழிற் பெயராம். இதனை வினைப் பெயர் என்றும் கூறலாம். தொழிற் பெயர், தல், அல், கல், அம், ஐ, கை, வை, கு, பு, காடு, பாடு முதலிய விகுதிகளைப் பெற்று வரும்.

**உதாரணம்:** நடத்தல், ஆடல், கொடுக்கல், வாட்டம், கொலே, நடக்கை, பார்வை, போக்கு, நடப்பு, வேக்காடு, கோட்பாடு என வரும்.

**(8) வேற்றுமை உருபுகள்:**

தன்னே ஏற்ற பெயரின் பொருளே வேறுபடுத்துவது வேற்றுமையாகும். அஃது எட்டு வகைப்படும்.

| | வேற்றுமை | உருபு |
|---|---|---|
| 1. | முதல் வேற்றுமை அல்லது எழுவாய் வேற்றுமை | - உருபு இல்லே. |
| 2. | இரண்டாம் வேற்றுமை | - ஐ. |
| 3. | மூன்ரும் வேற்றுமை | - ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன். |
| 4. | நான்காம் வேற்றுமை | - கு. |
| 5. | ஐந்தாம் வேற்றுமை | - இன், இல், இருந்து. |
| 6. | ஆரும் வேற்றுமை | - அது, அ, உடைய. |
| 7. | ஏழாம் வேற்றுமை | - கண்-முதலியன. |
| 8. | எட்டாம் வேற்றுமை அல்லது விளி வேற்றுமை | - உருபு கிடை - யாது. |

**(9) வினேச்சொல்:**

எச்சம் - முற்று.

செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படு பொருள் என்ற ஆறினேயும் தோற்றுவித்துப் பொருள், இடம், காலம், சினே, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயர்களேயும், பயனிலேயாகக் கொண்டு, பிற எதனேயும் ஏற்காது வருவன, முற்றுவினே அல்லது வினேமுற்று எனப் படும்.

வேறு சொல்லே வேண்டாது, பொருள் முடிந்து நிற்கும் வினே, முற்று வினேயாம்.

**உதாரணம்:** படித்தான்

தனித்து நின்று பொருள் முடியாமல், பெயரையேனும், வினையையேனும் கொண்டுமுடியும் வினை எச்சவினையாம்.

**உதாரணம் :** படித்த பாடம்.

படித்து மகிழ்ந்தான்.

ஒரு வினையானது பெயரைக் கொண்டு முடியின், 'பெயரெச்சம்' என்றும், வினையைக் கொண்டு முடியின், 'வினையெச்சம்' என்றும் கூறப் பெறும்.

**உதாரணம் :** கண்ட நண்பன் - பெயரெச்சம்.

கண்டு கொண்டான் - வினையெச்சம்.

செயலும் காலமும் வெளிப்படையாகத் தெரிய நிற்கும் வினைச் சொல்லே, தெரிநிலை வினைமுற்று எனப்படும்.

**உதாரணம் :** கண்ணன் படித்தான்.

முருகன் படிக்கிறான்.

கந்தன் படிப்பான்.

செயலும் காலமும் குறிப்பாகத் தெரிய நிற்கும் வினைச் சொல் குறிப்பு வினைமுற்று எனப்படும்.

**உதாரணம் :** கண்ணன் நல்லன்.

குதிரை கரியது.

(10) செயப்படுபொருள் குன்றிய வினை - குன்றுவினை :

ஒரு வினைமுற்றை எடுத்துக்கொண்டு, யாரை அல்லது எதை என வினாவினால் அதற்கு வரும் விடை செயப்படு பொருள் ஆகும்.

செய்பவன் முதலிய ஆறையும் தெரிவித்து நிற்கும் வினை முற்றுச் சொல் செயப்படுபொருள் குன்றாத வினை எனப் படும்.

**உதாரணம் :** அரசர் கோவிலைக் கட்டினார்.

செயப்படுபொருள் மட்டும் குறைந்து வரக்கூடிய வினை முற்று உண்டு. அது செயப்படுபெரருள் குன்றிய வினை எனப்படும்.

**உதாரணம் :** கந்தன் சாலையில் ஓடினான்.

**(11) காலங்காட்டும் இடைநிலைகள் :**

காலம் மூன்று வகைப்படும். அம் மூன்று காலங்களுக்கும் உரிய இடை நிலைகள் உண்டு.

**உதாரணம் :**

1. இறந்தகால இடைநிலைகள் - த், ட், ற், இன்.
   செய்தான், கண்டார், கற்ருள், மயங்கினுன்.
2. நிகழ்கால இடைநிலைகள் - கிறு, கின்று, ஆநின்று-
   படிக்கிருன், படிக்கின்ருன், படியாநின்ருன்,
3. எதிர்கால இடைநிலைகள் - ப், வ்.
   படிப்பான், வருவான்.

**(12) புணர்ச்சி :**

நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் ஒன்றுபடப் புணர்வதே புணர்ச்சி எனப்படும். அஃது இயல்புப் புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என்று இருவகைப்படும்.

விகாரங்கள் இன்றி இயல்பாகச் சேர்வது இயல்புப் புணர்ச்சி என்று கூறப்படும்.

**உதாரணம் :** கண்ணன் வந்தான். } இயல்புப்
முருகன் படித்தான். } புணர்ச்சி.

நிலை மொழிகளோடு வருமொழிகள் புணரும்போது, சில மாறுபாடுகள் தோன்றும். அவையே விகாரம் என்று அழைக்கப்பெறும். அவ்விகாரம் மூவகைப்படும். அவை 1. தோன்றல். 2. திரிதல். 3. கெடுதல் என்பனவாம்.

**உதாரணம் :**

1. மணி + கொடி = மணிக்கொடி - தோன்றல் விகாரம்.
2. மண் + குடம் = மட குடம் - திரிதல் விகாரம்.
3. மரம் + வேர் = மர வேர் - கெடுதல் விகாரம்.

